# ஸ்ரீராமாநுஜன் 135, 136.

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர், காஞ்சீபுரம்.

வருடச்சந்தா ரு. 5.



1960ஸு மார்ச்சு, ஏப்ரல்மீ விகாரிஸு மாசி, பங்குனிமீ

# ஸ்ரீ ராமாநுஜன் 135-136.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக

மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சி. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 12 | 1960ஞு மார்ச்சு, ஏப்ரல்மீ<br>விகாரிஞு மாசி, பங்குனிமீ | மலர் 3, 4 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—பா. 26.

செய்ய பரத்துவமாய்ச் சீரார் வியூகமாய்*
துய்ய விபவமாய்த் தோன்றிவற்றுள்—எய்துமவர்க்கு
இந்நிலத்தில் அர்ச்சாவதார மெளிதென்றான் *
பன்னுதமிழ் மாறன் பயின்று.

செய்ய பரத்துவம் ஆய் } விலக்ஷணமான பரமபதத்தில் இருப்பாய்
சீர் ஆர் —மேன்மை பொருந்திய
வியூகம் ஆய் —க்ஷீராப்தியிலிருப்பாய்
துய்ய —பரிசுத்தமான
விபவம் ஆய் —ராமக்ருஷ்ணாதி அவதாரமாய்
தோன்று —(இங்ஙனே சாஸ்திரங்களினால்) காணப்படுகின்ற
இவற்றுள் —இந்நிலைமைகளுள்
எய்துமவர்க்கு —ஆச்ரயிப்பவர்களுக்கு

இந்நிலத்தில் —இவ்விபூதியிலே
அர்ச்சாவதாரம் —அர்ச்சாவதாரமே
எளிது என்றான் —ஸௌலப்யம் என்று அருளிச் செய்தார்
(அவர் யார் எனில்)
பயின்று பன்னு தமிழ் மாறன் { ஆராய்ந்து அருளிச்செய்யப் பட்ட தமிழ் வேதத்தையே நிரூபகமாக வுடைய ஆழ்வார்.

பரமபதத்திலே எழுந்தருளியிருந்து நித்ய முக்தர்களுக்குக் காட்சிதரும் நிலைமை யென்ன, திருப்பாற்கடலிலே வ்யூஹரூபவித்திருக்கும் நிலைமை யென்ன, ஸ்ரீராமக்ருஷ்ணாதி ரூபேண அவதரித்த விபவாதார நிலைமை யென்ன—ஆகிய இவற்றை யெல்லாம்விட, அர்ச்சாவதாரமாகக் காட்சி தந்தருளும் நிலைமையே இவ்வுலகில் பக்தர்களுக்கு மிகவும் எளியதென்னு மிடத்தை ஆழ்வார் இத் திருவாய்மொழியினால் அருளிச்செய்தாரென்கை. எம்பெருமானுடைய நிலைமைகளுள் அந்தர்யாமித்வமும் சேர்ந்திருக்க, அதனை இங்கு எடுத்துக் கூறாதது அதில் ஆச்ரயண ப்ரஸக்தியில்லாமைபற்றி யென்று கொள்ளலாம். உபலக்ஷண விதத்தினால் அதுவும் இங்குக் கொள்ளத்தக்கதே என்பாருமுளர்.

* மொய்ம்மாம்பூம்பொழிற் பொய்கை யென்கிற கீழ்த் திருவாய்மொழியில், எம்பெருமானுடைய குண சேஷ்டிதங்களை நினைந்து கரைந்துருகி, நின்றவிடத்தில் நிற்கமாட்டாமே நர்த்தனம் முதலியன செய்து இதுவே போது போக்காக இருக்கும் மஹான்களைக் கொண்டாடியும், இந் நிலைக்கு மாறாக இருக்கின்றவர்களை நிந்தித்தும் பேசினர். அங்ஙனம் தம்மால் நிந்திக்கப்பட்ட பாபிகளையும் கைவிட மாட்டாத மிக்க கருணை வாய்ந்தவரன்றோ ஆழ்வார்; அக் கருணையினாலே அந்தப் பாபிகளையும் வழிப்படுத்திக் கொள்ள வேணுமென்று திருவுள்ளம் பற்றி, அன்னவர்களுடைய கல் நெஞ்சிலும் நன்கு பதியுமாறு எம்பெருமானுடைய திருக்குணங்களை எடுத்துக்கூற விரும்பிய ஆழ்வார் இத் திருவாய்மொழியில் அப்பெருமானது ஸௌலப்பிய குணத்தை யெடுத்துரைக்கின்றார். முதற்பத்தில் * பத்துடையடியவர்க் கெளியவன் * என்ற திருவாய் மொழியிலும் எம்பெருமானுடைய ஸௌலப்ய குணம் பேசப்பட்டிருந்தாலும் இப்போது இங்குப் பேசும் ஸௌலப்ய குணம் அதனிலும் விலக்ஷணமானது; அங்குச் சொன்னது விபவாவதார ஸௌலப்யம்; இங்குச் சொல்வது அர்ச்சாவதார ஸௌலப்யம். இந்த வாசியை மாமுனிகளே விளக்கியுள்ளார்; "பத்துடையோர்க் கென்றும் பரனெளியனாம் பிறப்பால்" என்றதையும், "செய்ய பரத்துவமாய்...... அர்ச்சாவதார மெளி தென்றான்"

என்றதையும் நோக்குக. இப்பாசுரத்திற்கு மூலமான * செய்யதாமரைக்கண்ணன் பதிகத்திற்கு உயிரான பாசுரம் "தஞ்சமாகிய தந்தை தாயொடு" என்பதாம். அர்ச்சாவதார வெளிமையை நிரூபிக்கும் பாசுரம் அதுவேயாம். ... ... .... (26)

## திருவாய்மொழி நூற்றந்தாதி—பா. 27.

பயிலுந் திருமால் பதந்தன்னில் * நெஞ்சம்
தயலுண்டுநிற்கும் ததியர்க்கு—இயலுடனே
ஆளானார்க்காளாகும் மாறனடியதனில்*
ஆளாகார் சன்மம் முடியா.

| | | | |
|---|---|---|---|
| பயிலும் | —அடியவர்களோடு கலந்து பழகும் தன்மையனான | ஆள் ஆகும் | —அடிமைசெய்யப்பெற்ற |
| திருமால் | —எம்பெருமானுடைய | மாறன் | —ஆழ்வாருடைய |
| பதம் தன்னில் | —திருவடிகளில | அடி அதனில் | —திருவடிகளில் |
| நெஞ்சம் தயலுண்டு நிற்கும் | மனம் பதிந்து நிற்கிற | ஆள் ஆகார் | —அடிமைசெய்யப்பெறுதவர்களுடைய |
| ததியர்க்கு | —பாகவதர்களுக்கு | சன்மம் | —பிறவி |
| இயலுடனே ஆள் ஆனார்க்கு | முறையே அடிமையாயிருக்குமவர்களுக்கு | முடியா | —(ஒருகாலும்) முடிவடையமாட்டாது. |

எம்பெருமானது திருவடிகளில் ஹ்ருதயம் அவகாஹித்திருக்கப்பெற்ற பாகவதர்
களுக்கு தாஸாநு தாஸராகத் தம்மை அநுஸந்தித்து, * பயிலுஞ் சுடரொளிப்பதிக மருளிய
நம்மாழ்வாருடைய திருவடிகளில் அடிமை பூண்டிருக்கும பாக்கியமற்றவர்களுடைய பிறவித்
துயர் ஒருகாலும் முடிவு பெறமாட்டாது. அவர்கள் நித்ய ஸம்ஸாரிகளாகவே திகழ்வர்கள்
என்கை. * செய்யதாமரைக் கண்ணனென்கிற கீழ்த் திருவாய் மொழியில் அர்ச்சாவதார
ஸௌலப்யத்தை அருளிச் செய்தவிடத்திலும் நெஞ்சில் நெகிழ்ச்சியின்றியே விஷயப்ரவணரா
யிருக்கின்ற ஸம்ஸாரிகளின் இயல்வைக் கண்டு வெறுத்து, அவ்வெறுப்புக்குப் பரிஹாரமாகத்
தாம் ஒரு மஹானர்த்தத்தை அனுபவிக்க விரும்பி ஸ்வஸ்வரூப காஷ்டையான பாகவத சேஷத்
வத்தை அநுஸந்தித்து அம்முகத்தாலே தாம் இனியராகிறார். ஒருவன் ஒரு வஸ்துவினிடத்
தில் அன்புவைத்தால் அவ்வன்பு அளவற்றதுமாயிருந்தால் அஃது அவ்வஸ்துவோடே நின்று
விடாமல் அதனோடு ஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களிலும் பெருகிச் செல்லுமென்பதை அனை
வரும் தம் தம் அநுபவத்தாலறிவர். அப்படியே பாகவத பக்தி யென்பது பகவத் பக்தியின்
எல்லை நிலமாக உண்டாமது. பகவத் பக்தியின் உறைப்பையே பாகவத பக்தி வெளிப்
படுத்தும். ஸ்வாமியினுடைய பாதுகைகளிலே நாம் ஆதரம் வைத்து அவற்றைக் கண்களில்
ஒற்றிக் கொள்வதும் தலைமீது அணிந்து கொள்வதும் அலம்பித் தீர்த்தம் பருகுவதும் செய்
கிறோம்; இதனால் நமக்கு ஸ்வாமியிடத்துள்ள பக்தி அபாரமானது என்பதன்றோ வெளி
யாகின்றது. அதுபோலவே இங்கும் "அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார்
தம் அடியாரடியோங்களே" இத்யாதிகளால் பாகவத சேஷத்வாதிசயத்தைப் பேசுவதெல்
லாம் பகவச் சேஷத்வத்தின் உறைப்பையே பேசினபடியாகும்.

திருமந்திரத்தில், அஹங்காரமும் மமகாரமும் நீங்கப்பெற்று பகவத் சேஷத்வம் உள்ள
படி ப்ரகாசிக்கிற நமஸ்ஸிலே அந்த பகவத்சேஷத்வத்தின் எல்லை நிலமான பாகவத சேஷத்வம்
அநுஸந்திக்கப்படவேணுமென்பது சாஸ்த்ரார்த்தம் இந்த பாகவத சேஷத்வம் திரு மந்தி
ரத்தினுள் ப்ரணவத்தின் உள்ளீடான அகாரத்திலே தோற்றுமென்று சிலரும் உகாரத்திலே
தோற்றுமென்று சிலரும் சொல்லுவதுமுண்டு. எங்ஙனேயெனில், அகாரத்தின்மேல் ஏறிக்
கிடந்து லோபமடைந்துள்ள சதுர்த்தியாலே ஆத்மாவினுடைய பகவத்சேஷத்வம் சொல்லப்
படுகையாலே அந்த சேஷத்வத்தின் எல்லையான பகவத்சேஷத்வத்தை அகாரத்திலேயே அநுஸந்
திக்கலாமென்பர் சிலர். அர்த்தாத்ஸித்தமாக அநுஸந்திக்க வேண்டுவதை எந்த இடத்தில்
அநுஸந்தித்தாலும் குறையில்லையாகிலும் அஹங்கார மமகாரங்கள் கழிவதைக் காட்டுகின்ற
நமஸ்ஸிலே அதனை அநுஸந்திப்பது மிகப்பொருந்துமென்பது நம் ஆசாரியர்களின் கருத்து.

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்

# திவ்யப்ரபந்தங்களில் அருமையாகவரும் 16 கதைகளின் விவரணம்

---

### 1. உரோமசனல் நான்முகனது செருக்கை நீக்கினது

*(பெரிய திருமொழி 3—4—2 பாசுரத்தில் அநுஸந்தித்த கதை இது)*

ரோமசரென்பவர் சரீரமுழுவதும் (கரடிபோல்) அடர்ந்த மயிர்களையுடைய ஒரு மாமுனிவர். இவர் நீண்டகாலம் வாழ்ந்திருந்து எம்பெருமானைச் சிந்தனை செய்யவேணுமென்று குதூஹலமுடையராய், தீர்க்காயுஸ் பெறுவதற்காக ஒரு புண்ய நதிக்கரையிலிருந்து தவஞ்செய்துகொண் டிருக்கையில் அளவுகடந்த ஆநந்தங்கொண்ட ஸ்ரீமந்நாராயணன் 'இவர்முன்னேவந்து ஸேவை தந்தருளி 'உம்முடைய விருப்பத்தைக் கூசாதே வேண்டிக்கொள்ளும்' என்று சோதிவாய் திறந்தருளிச்செய்ய, மாமுனிவரும் 'இவ்வுடம்போடே உன்னை வெகுகாலம் வழி படவேணுமென்று பேராசை கொண்டிருக்கிறேன் நான்; அனேகமாயிரம் ப்ரஹ்மாக்களுடைய ஆயுளை என்னொருவனுக்குக் கல்பித்தருளினல் மஹாப்ரஸாதமாகும்' என்று கைகூப்பி விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமான் அப்படியே திருவுள்ளமுவந்து "மாமுனிவரே! ப்ரஹ்மாவினுடைய ஆயுளின் அவதி உமக்குத் தெரிந்ததே; ஒரு ப்ரஹ்மா காலஞ்சென்ருல் உம்முடைய உடம்பினின்றும் ஒரு ரோமம் இற்றுவிழக்கடவது; இப்படி ஒவ்வொரு ப்ரஹ்மாவின் முடிவிலும் ஒவ்வொரு மயிராக இற்றுவந்து 'இனி உம்முடைய உடம்பில் ஒரு ரோமமும் இல்லை' என்று சொல்லத்தக்க நிலைமை நேருமளவும் நீர் ஜீவித்திருக்கக்கடவீர்" என்று வரந்தந்தருளி மறைந்திட்டனன், [இக்கதையின் விவரணத்தை வேறுவகையாகவும் சிலர் கூறுவர்; வல்லார்வாய்க் கேட்டுணர்க.]

### 2. பிரமனிடம் மறைந்து வந்த இராவணனைக் காட்டிக்கொடுத்தது

*(முதல் திருவந்தாதியிலும் மூன்ருந் திருவந்தாதியிலும், நான்முகன் திருவந்தாதியிலும்)*

முன்பு இராவணன் பத்துத் தலைகளை மறைத்துக்கொண்டு நான்முகனிடஞ் சென்று வரம் வேண்டிக்கொள்ளுமளவில் எம்பெருமான் ஒரு சிறு குழந்தை வடிவாய் அப்பிரமனுடைய மடியிலே உறங்குவான்போலே கிடந்து, 'இவன் பத்துத் தலைகளையுடைய இராவணன்; ஸ்வஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டு உன்னை வஞ்சித்து வரம் வேண்டிக்கொள்ள வந்திருக்கிருன்; இவனுக்கு நீ வரமளித்தால் பெருந்தீங்காக முடியும்' என்று தெரிவிப்பவன்போன்று தன் திருவடியால் அவ்விராவணனுடைய பத்துத்தலைகளையும் எண்ணிக்காட்டினன்.

### 3. சிவபிரான் திரிபுரமெரித்ததும் அப்போது திருமால் நிர்வாஹகராய் அமைந்ததும்

முற்காலத்தில் தாரகாஸுரனுடைய புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்க தவஞ்செய்து பிரமனிடம் பெரு வரம் பெற்று வானத்துப் பறந்துசெல்லுந் தன்மைவாய்ந்த மூன்று பட்டணங்களை யடைந்து மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம் நினைத்த விடங்களிற் பறந்துசென்று பலவிடங்களின் மேலும் இருந்து அவ்விடங்களைப்

பாழாக்கி வருகையில் அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத் தேராகவும் சந்த்ர ஸூர்யர்களைத் தேர்ச் சக்கரங்களாகவும் நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும் மஹாமேருவை வில்லாகவும் ஆதிசேஷனை வில்நாணியாகவுங் கொள்ள, வாயுவாகிய சிறகமைந்த அக்நியை முனையாகவுடைய அம்பின் ஸ்தானத்திலே விஷ்ணு நிற்க, இவ்வளவு அமைப்புடனே யுத்த ஸந்நத்தனாய்ச் சென்று போர் தொடங்கும்போது சிரித்து அச்சிரிப்பில் நின்று உண்டான நெருப்பினால் அவ்வசுரர்களை அந்நகரங்களுடனே எரித்திட்டனன்—என்பது சிவபிரான் திரிபுரமெரித்த வரலாறு. இந்த த்ரிபுர ஸம்ஹாரம் செய்தது சிவனேயாகிலும் இது நிறைவேறியதற்கு முக்கிய காரணம் திருமாலேயென்க. மஹாபாரதத்தில் கர்ண பருவத்தில் இருபத்துநான்காமத்தியாயம் முதலாக நான்கு அத்யாயங்களில் இவ்வரலாறு விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. எம்பெருமான் சிவனுக்கு அந்தராத்மாவாக இருந்ததினாலும் அம்பாக அமைந்ததினாலும் இக்காரியம் எளிதாகக் கைகூடிற்றென்றது. திருவாய்மொழியில் "புரமொரு மூன்றெரித்து" (1—1—8) என்று த்ரிபுரதஹநத்தை எம்பெருமானுடைய காரியமாகவே சொல்லிற்றும் இது பற்றியே.

### 4. சிவபிரான் தக்கன் வேள்வி தகர்ந்தது

[பெரிய திருமொழி 5—2—6 பாட்டில் காணும் கதை]

முன்பொருகால் தக்ஷப்ரஜாபதியென்பவர் ஒரு யஜ்ஞஸதஸ்ஸிலே செல்ல, அப்போது அங்கிருந்த தேவர்களும் மஹர்ஷிகளுமெல்லாரும் சடக்கென எழுந்து கௌரவிக்க, பிரமனும் சிவனும் எழுந்திராமல் இருந்தபடியே யிருக்க, தக்ஷன் பிரமனை 'லோககுரு' என்னும் ப்ரதிபத்தியாலே நமஸ்கரித்துவிட்டு, தன்னுடைய பெருமை விளங்குமாறு சிவன் தன்னை வணங்கி வழிபாடுகளொன்றுஞ் செய்திலனென்று சீற்றங்கொண்டவனாய் இந்த 'ருத்ரன் எனக்கு மாப்பிள்ளையானபோதே எனக்கு சிஷ்யனாய்வைத்து இங்ஙனே ஸ்தப்தனாய்க் கிடக்கிறானே, இவனில் மிக்க பாபி உலகிலுமுண்டோ? க்ருத்யாக்ருத்ய விவேகசூந்யனான இந்த மூர்க்கனுக்கு அநியாயமாய் அருமருந்தன்ன பெண்ணைக் கொடுத்துக் கெட்டேன்;' என்று பலவாறாக நிந்தித்து, "இந்த ருத்ரன் யாகங்களில் தேவதைகளோடுகூட ஹவிர்ப்பாகம் அடையக்கடவனல்லன்" என்று சபித்துவிட்டு மஹாகோபத்துடனே எழுந்து தன்னிருப்பிடம் போய்ச்சேர்ந்தான். பிறகு நெடுநாளைக்கப்பால் அந்த தக்ஷன் ப்ருஹஸ்பதீஸவமென்றொரு யஜ்ஞம் பண்ணத் தொடங்கின செய்தியைப் பார்வதி கேள்விப்பட்டு 'தந்தை நிகழ்த்தும் வேள்வியின் விபவங்களை நாமும் கண்டுவருவோம்' என விரும்பிப் புறப்பட, ருத்ரன் பழைய வைரத்தை நினைத்து 'அங்கே நீ போகலாகாது' என்று தடுத்தவளவிலும் அவள் கேளாதே குதூஹலாதிசயத்தினால் விரைந்து புறப்பட்டுத் தந்தையின் மாளிகையில் வந்துசேர அங்கே இவளைக்கண்டு தந்தை நல்வரவு கூறுதல், யோகக்ஷேமம் வினவுதல் ஒன்றுஞ்செய்யாது விமுகனாயிருக்கு மிருப்பையும் ருத்ர பாகமில்லாமல் யாகம் நடைபெறுவதையுங் கண்டு அளவுகடந்த கோபமடைந்தவளாய் 'இந்த மஹாபாபியான தக்ஷனிடத்தில் நின்றுமுண்டான இந்த சரீரம் இனி முடிந்துபோவதே நன்று' என்று அறுதியிட்டு யோகபலத்தினால் ஒரு அக்நியுண்டாக்கி அது தன்னிலே சரீர த்யாகம் பண்ணிவிட, இங்ஙனே பார்வதி அவமானம் பொறுக்கில்லாமல் இறந்தொழிந்தாளென்றுணர்ந்த சடையான் மிகச்சினந்து தக்கன் வேள்வியைப் பலபடிகளாலும் தகர்த்துவிடக் கடவோமென்று நிச்சயித்துத் தனது சடையில் நின்றும் ஒரு மயிரையெடுத்துக் கீழே எறிய, அதில் நின்றும் கோரரூபியான வீரபத்ரன் கிளம்பி, ருத்ரனுடைய

ஆஜ்ஞையைப்பெற்று தக்ஷயாக பூமியிலே சென்று வாசாமகோசரமான க்ஷோபங்களை யுண்டுபண்ண, ருத்ரனும் கூடச்சென்று தக்ஷனைத் தலையறுத்து ஸ்வாஹாகாரங்களை யெல்லாம் ஹாஹாகாரமாக்கி, 'தக்ஷாத்வரத்வம்ஸீ' என்றும் 'தக்கன் வேள்வி தகர்த்த தலைவன்' என்றும் பெயர்பெற்றானென்கிற வரலாறு ஸ்ரீபாகவதத்தில் நான்காம் ஸ்கந்தத்தின் ஆதியில் விவரித்துரைக்கப்பட்டுள்ளது.

### 5. சிவபிரான் நால்வர்க்கு உபதேசித்தது

[பொய்கையாழ்வாரும் திருமழிசையாழ்வாரும் தமது திருவந்தாதிகளில் அநுஸந்தித்த கதை இது]

சிவன் ஒரு காலத்திலே அகஸ்தியர் புலஸ்தியர் தக்ஷர் மார்க்கண்டேயர் என்கிற நான்கு முனிவர்களைச் சிஷ்யர்களாக அமைத்துக்கொண்டு ஆலமரத்தடியிலே ஸ்ரீமந்நாராயண தத்வோபதேசம் செய்தருளினன்.

### 6. மந்தேஹரென்னும் அசுரர் மாய்வது

[திருவிருத்தத்தில் *எரிகொள் செந்நாயிறு* என்னும் பாசுரத்தில் அநுஸந்தித்தது]

மந்தேஹாருண மென்னும் த்வீபத்தில் வாழும் மந்தேஹரென்னும் அசுரர்கள் உக்ரமான தவத்தைச்செய்து பிரமனிடத்து வரம்பெற்று அதனால் செருக்கடைந்து எப்பொழுதும் ஸூர்யனை வளைந்து எதிர்த்துத் தடுத்துப் போர் செய்கின்றனர்: அந்தணர் முதலியோர் செலுத்தும் அர்க்கியத்தின் ஆற்றலால் ஸூர்ய மண்டலத்தினிடையே ஒரு செந்தீ எழுந்து ஜ்வலிக்க, (விளக்கில் விட்டில்போல்) அத்தீயில் அவ்வசுரர்கள் விழுந்து மாள்வர்.

### 7. வாசவதத்தை தலைக்காலன் பின்சென்றது

[சிறிய திருமடலில் காணும் கதை]

ஸுபந்து என்னுமொரு மஹாகவியால் இயற்றப்பட்ட வாஸவதத்தா என்று ப்ஸித்தமான ஸம்ஸ்க்ருத—ஆக்க்யாயிகாப்ரபந்தத்தில் ப்ரதிபாதிக்கப்பட்ட வாஸவதத்தை யென்ற கதாநாயகிதான் சிறிய திருமடலில் உதாஹரிக்கப்பட்டவளென்று பலர் ப்ரமித்திருக்கின்றனர். அந்த வாஸவதத்தை கவியினால் கல்பித்துக் கொள்ளப்பட்டவளேயன்றி ஒரு புராண நாயகியல்லள்; காதம்பரீ, மாலதீ, வஸந்தா என்று சில வ்யக்திகளைக் கவிகள் தாமே கல்பித்துக்கொண்டு நாவல் போன்ற க்ரந்தங்களை எழுதினாற்போல் ஸுபந்துகவியும் வாஸவதத்தை யென்ற பெயரால் ஒரு வ்யக்தியைக் கல்பித்துக்கொண்டு தனது புத்தி சமத்காரத்தால் ஒரு கதை எழுதிவைத்தான்; அர்வாசீநமாகிய அந்த நூலில் வருணிக்கப்பட்ட வாஸவதத்தை திருமடலில் உதாஹரிக்கப்பட்டவளல்லள்; அந்த வாஸவதத்தையின் சரிதையே வேறு. அவள் ஒரு சாப விசேஷத்தால் கல்லுருவமடைந்ததாகவும் தனது காதலனாகிய கந்தர்ப்பகேதுவின் கரஸ்பர்சத்தாலே சாபம் நீங்கிப் பெண்ணுருவம் பெற்று அக்காதலனைக்கூடி மகிழ்ந்ததாகவும் அதில் சொல்லப்பட்டுள்ளது. திருமடலில் ஆழ்வார் எடுத்துக்காட்டும் வாஸவதத்தையின் சரிதை அங்ஙனன்று; காதலனும் அப்பெயருடையனல்லன், "தோழிமாருடைய பெரிய திரளைக் கடுகவிட்டு, விலங்கிட்டிருக்கிற வத்ஸராஜன் பின்னே போனாள்" என்று பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்துள்ளமையால், இவளது காதலனுடைய பெயர் வத்ஸராஜனென்றும், இவளது வரலாறே வேறு வகையானதென்றும் நன்கு விளங்கக் குறையில்லை. இவளுடைய சரித்திரம் ஏதோ ஒரு புராணத்தில் கூறப்பட்டிருக்கவேணும்; ஸ்ரீமஹாபாரதம் முதலிய

சில புராண இதிஹாஸங்களை ஆராய்ந்து பார்த்ததில் அடியேனுடைய சிற்றறி விற்கு இவளுடைய வரலாறு எட்டவில்லை. இவளது கணவனான வத்ஸராஜ னுடைய பெயர் மாத்திரம் மஹாபாரதத்தில் ஒரு மூலையில் படிக்கப்பட்டுள்ளது. எங்கேயெனில்; ஆதிபர்வத்தில் த்ரௌபதியின் ஸ்வயம்வரத்திற்காகத் திரண்ட அரசர்களின் பெயர்களைச் சொல்லிவரும் ப்ரகரணத்தில், இருநூற்றோராமத்தியா யத்தில் இருபத்திரண்டாம் ச்லோகத்தில் [வத்ஸராஜச்ச மதிமாந்] என்றுள்ளது காண்க. அந்த வத்ஸராஜனே திருமடலில் "தாரார் தடந்தோள் தளைக்காலன்" என்று ப்ரதிபாதிக்கப்பட்டானாகக் கொள்க. இந்த வரலாறு விரிவாக வந்த விடத்தே கண்டுகொள்க. அரும்பதவுரைகாரரொருவர்—"வாஸவதத்தையான ராஜபுத்ரி வத்ஸராஜனென்பானோடே ஸங்கதையாக, அவனை ராஜா சிறையிலே வைக்க, அவனையும் கூட்டிக்கொண்டு அவன் பின்னே போனாளென்கிற கதை" என்றெழுதி வைத்திருக்கக் காண்கிறோமித்தனை. ஆனால், "கதாஸரித் ஸாகரம்" என்கிற வடமொழிப் புத்தகமொன்றில் பன்னிரண்டாவது தரங்கத்தில் இந்த வாஸவதத்தையின் சரித்திரம் இவ்விடத்திற்குச் சிறிது பொருத்தமாக மிகவும் விரிவாயெழுதப்பட்டுள்ளது; கண்டுகொள்க. அப்புத்தகத்திற்கு எந்தப் புரா ணம் மூலமென்று ஆராயவேண்டும்.

### 8. வேகவதி யென்பாள் தன் கணவனுடன் சேர்ந்தது

*[பெரிய திருமடலில் காணும்,கதை]*

வேகவதி என்னும் தெய்வமாதின் சரிதையை எடுத்துக் காட்டுகிறார் பெரிய திருமடலில். சிறிய திருமடலிற் சொல்லப்பட்ட வாஸவதத்தையின் சரித்திரத்துக்கு மூலமாகிய புராணம் இன்னதென்று தெரியாதது போலவே இவ் வேகவதியின் சரிதைக்கு மூலமான புராணமும் இன்னதென்று தெரிய வில்லை. தமிழ்நாடுகளில் ப்ரஸித்தமான பெருங்க(ா)தை என்ற தொகுதியில் உதயணன் சரித்திரப் பகுதியில் இத்தெய்வமாதுகளின் வரலாறு ஒரு விதமாக எழுதப்பட்டுள்ளது. வடமொழியிலும் கதாஸரித்ஸாகரம் என்ற கதைப் புத்த கத்தில் இவர்களின் சரித்திரம் சொல்லப்பட்டுள்ளது. பிற்காலத்தவர்கள் எழு திய அப்புத்தகங்களை ஆழ்வார் ஸ்ரீஸூக்திகட்கு மூலமாகச் சொல்லவொண்ணாது. கதைப் போக்கிலும் வேறுபாடு உள்ளது போலும். ஆகையாலே இக்கதையை இங்கு விரித்துரைக்க விரும்புகின்றிலோம்.

அழகிற் சிறந்த வேகவதி என்னுமோர் தேவகன்னிகை தனது கணவன் முகத்திலே தான் விழிக்க வொண்ணாதபடி தன்னைத் தனது தமையன் தடை செய்து இழுத்துக்கொண்டுபோக, அவள் அவனை லக்ஷியம் பண்ணாமல் திரஸ் கரித்து உதறித் தள்ளிவிட்டுத் தனது காதலன் ஒரு போர்க்களத்திலே யுத்தம் செய்துகொண்டிருப்பதாகத் தெரிந்து அங்கேபோய் 'இப்படித்தானா என்னை நீ கைவிட்டுத் திரிவது!' என்று தார்க்காணித்து அந்தப் போர்க்களத்திலே பலரு மறிய அவன் கையைப் பிடித்திழுத்துத் தன்னூர்க்குக் கொண்டு சென்று இஷ்ட மான போகங்களை அனுபவித்து வாழ்ந்தாள்—என்பதாக இவளது கதை ஏற் படுகிறது. இதன் விரிவை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

### 9. பன்னகராயன் மடப்பாவை பார்த்தனைப் புணர்ந்தது

*[இதுவும் பெரிய திருமடலில் காணும் கதை]*

அர்ஜுனன் தீர்த்த யாத்திரையாகச் செல்லும்போது ஸ்நாநஞ்செய்யக் கங்கையில் இறங்கி நீராடிக் கரையேறப் புகும்போது உலூபி யென்னும் நாக கன்னிகை அவனைக்கண்டு காமமோஹமடைந்து ரமிக்க இவனைத் தண்ணீரி

னுள்ளே இழுத்துக்கொண்டு செல்ல இவனும் உள்ளே சென்று 'நீ யார்? என்னை ஏதுக்காக இங்கே கொணர்ந்தாய்?' என்று கேட்க, அவ்வுலூபி 'ஐராவத குலத்திற் பிறந்த கௌரவ்யனென்னும் ஸர்ப்பராஜனுடைய பெண் நான், உன்னைக் கண்டவாறே மன்மத பாணங்களுக்கு இலக்கானேன்; எப்படியாவது நீ என்னைப் புணர்ந்து மகிழ்விக்க வேணும்' என்று வேண்ட, அதற்கு அர்ஜுனன் 'அம்மா! நான் இப்போது ஸம்வத்ஸர ப்ரஹ்மசர்ய வ்ரதத்தில் நிஷ்டனாயிருக்கிறேன்; ஆகையால் எங்ஙனே புணர்ச்சி செய்வேன்? உனது விருப்பை நிறைவேற்ற வேணுமென்கிற ஆசையும் எனக்கு உளது; என் செய்வேன்? என் விரதமும் கெடாமல் உன் விருப்பமும் பழுதுபடாமல் காரியமாகும்படியான உபாயத்தை நீயே சொல்' என்ன, அதற்கு அவ்வுல்லூபிகை 'உன் விரதத்தின் வரலாறு எனக்குத் தெரியும்; நான் காம நோயைத் தாங்கமுடியாது உன்னைச் சரணமடைகிறேன்; அடைக்கலம் புகுந்தவர்களைக் கைவிடுதல் அதர்மமன்றோ; என்னை ரக்ஷிப்பதற்காக நீ புணர்ச்சி செய்வாயாகில் இது உன் விரதத்தைக் கெடுக்கமாட்டாது; என்னைக் கைவிடுவாயாகில் இப்போதே என் உயிர் அற்றொழியும்படி பாராய்' என்று மிக்க ஆர்த்தியுடன் சொல்ல, அர்ஜுனன் அதற்கிணங்கி அன்றிரவு அவளோடே கலந்திருந்து இராவாந் என்கிற அழகிய ஒரு புத்திரனையும் அவளிடத்திற் பிறப்பித்து மீண்டுசென்றான்—என்கிற கதை மஹாபாரதத்தில் ஆதிபர்வத்தில் இருநூற்று முப்பத்து நான்காமத்தியாயத்திற் கூறப்பட்டுள்ளது.

## 10. உஷை அநிருத்தனைப் புணர்ந்தது

[இதுவும் பெரிய திருமடலில் காணும் கதை]

பலிச்சக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்தவனான பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷை யென்பவள், ஒரு நாள் ஒரு புருஷனோடு தான் கூடியதாகக் கனாக்கண்டு, அவனிடத்தில் மிக்க ஆசைபற்றியவளாய்த் தன் உயிர் தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப் புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு, 'அவனைப் பெறுதற்கு உபாயஞ் செய்யவேண்டும்' என்று அத்தோழியை வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டு வந்து அந்தப்புரத்திலேவிட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்து வந்தாள் என்கிற கதை அறியத்தக்கது. (இதற்குமேல் நடந்த வரலாறு வாணனைத் தோள் துணித்த வரலாற்றில் காணத் தக்கது.)

## 11. பார்வதி பரமசிவனைத் தவஞ்செய்து பெற்றது

[இதுவும் பெரிய திருமடலில் காணும் கதை]

"சிவபிரான் தக்கன் வேள்வி தகர்த்தது" என்னுங் கதையிற் கண்ட விவரணத்தின்படி ருத்ரபத்நியானவள் அக்நியிலே சரீரத்யாகம் பண்ணிவிட்ட பிறகு மலையரசனான ஹிமவானுக்குப் பெண்ணாய்ப் பிறந்து [பர்வத புத்ரீ என்னுங் காரணத்தால்] பார்வதியென்று பெயர்பெற்று அப்பிறப்பிலும் அந்தப் பரமசிவனையே கணவனாகப் பெறவேணுமென்று ஆசைகொண்டு கடுந்தவம் புரிந்து அத்தவத்தின் பயனாக அங்ஙனமே மனோரதம் நிறைவேறி மகிழ்ந்தாள்.

மற்றொரு ஸமயத்திலும் பார்வதி தவம் புரிந்ததுண்டு; முன்னொரு காலத்திற் கைலாஸ மலையிலே சிவபிரானும் தானும் ஏகாஸநத்தில் நெருக்கமாக வீற்றிருந்த பொழுது ப்ருங்கி யென்னும் மாமுனி சிவனை மாத்திரம் பிரதக்ஷிணஞ்

செய்யவிரும்பி ஒரு வண்டின் வடிவமெடுத்து அந்த ஆஸனத்தை இடையிலே துளைத்துக்கொண்டு அதன் வழியாய் நுழைந்து சென்று அம்பிகையை விட்டுச் சிவனை மாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்ய, அதுகண்ட பார்வதிதேவி தன் பதியை நோக்கி 'முனிவன் என்னைப் பிரதக்ஷிணஞ் செய்யாமைக்குக் காரணம் என்ன?' என்றுகேட்க, அதற்குச் சிவன் 'இம்மை மறுமைகளில் இஷ்டஸித்திபெற விரும்புமவர்கள் உன்னை வழிபடுவார்கள்; முக்திபெற விரும்புமவர்கள் என்னை வழிபடுவார்கள்; இது நூல் துணிபு' என்று சொல்ல, அதுகேட்ட பார்வதி 'இறைவன் வடிவத்தைப் பிரிந்து தனியே யிருந்ததனாலன்றோ எனக்கு இவ்விழிவு நேர்ந்தது' என்று வருந்தி, தான் சிவபிரானை விட்டுப் பிரியாதிருக்குமாறு கருதி, புண்ணிய க்ஷேத்திரமான கேதாரத்திற் சென்று தவம் புரிந்து வரம்பெற்று அப்பிரானது வடிவத்திலே வாமபாகத்தைத் தனக்கு இடமாக அடைந்து அவ்வடிவிலேயே தான் ஒற்றுமைப்பட்டு நின்றனள் என்று சைவபுராணங்களிற் சொல்லிப் போகும் கதையுமுண்டு.

### 12. பாண்டியநாடன் மேருமலை முடியில் மகரகேது நாட்டியது

*[பெரியாழ்வார் திருமொழியில் 5—4—7 பாட்டிலுள்ள கதை]*

பாண்டியகுலத்துத் தலைவனுயிருந்த ஒரு அரசன் தனது நாட்டில் நின்றும் மஹாமேருகிரியளவும் வழியிலுள்ள காடுகளைக் களைந்து, பகைவர்களைப் பாற்றித் தனக்கும் தனது பரிஜநங்களுக்கும் நடை எளிதாம்படி பெருவழியாக்கிக் கொண்டு சென்று தனது வெற்றி தோற்றும்படி அம்மேருகிரியின் சிகரத்தில் தனது மகர கேதுவை நாட்டிப்போயினன்.

### 13. மலயத்வஜராஜன் திருமாலிருஞ்சோலையில் மண்டியது

*[பெரியாழ்வார் திருமொழியில் 4—2—7 பாட்டின் பிற்பாதியிலுள்ள கதை இது]*

அகஸ்தியமுனிவன் வீற்றிருக்கும் மலய பர்வதத்திற்சென்று 'தர்மமே நடத்தக் கடவேன்' என்று மலயபர்வதத்தை யெழுதிக் கொடியெடுத்த 'மலயத்வஜன்' என்ற அரசன் தேரேறிக் கங்கை நீராடப் போகாநிற்கச் செய்தே, *மதிதவழ் குடுமியளவிலே சென்றவாறே தேர் வடக்கு ஓடாமல் நிற்க, அவ்வரசன் அவ்விடத்திலே தேரை நிறுத்தி, 'இங்கே தீர்த்த விசேஷமும் எம்பெருமானும் ஸந்நிதி பண்ணி யிருக்கவேணும்' என்று நினைத்து இறங்கி ஆராய்ந்து பார்க்க அவ்விடத்தில் நித்யஸந்நிஹிதரான அழகர் அவ்வரசனை நோக்கி, 'இவ்வாற்றிலே நீராடு' என்று நியமித்தருள, நாமங்கேட்டுணர்ந்து நீராட வேண்டுகையால் 'இவ்வாற்றுக்குப் பெயர் என்?' என்று அரசன் கேட்க, "முன்பு நாம் உலகளந்தபோது பிரமன் திருவடி விளக்கின காலத்தில் நம் பாதச்சிலம்பில் நீர் இதிலே தெறித்துச் 'சிலம்பாறு' என்றுபெயர்பெற்றது" என்று அழகர் அருளிச்செய்ய, அதுகேட்ட அரசன் அவ்வாற்றில் நீராடி, கங்காஸ்நாநவிருப்பத்தையும் தவிர்ந்து அத்திருமாலிருஞ்சோலை மலையிற்றனே பேரன்பு பூண்டிருந்தனன்.

### 14. மல்லிகை மாமாலையால் பிராட்டி பெருமாளைக் கட்டியது

*(பெரியாழ்வார் திருமொழியில் 3—10—2 பாட்டில் மட்டும் அநுஸந்திக்கப்பட்ட கதை)*

அயோத்தியிலிருந்த காலத்தில் பிராட்டியும் பெருமாளும் ராத்ரி வேளையில் ஏகாந்தமான இடத்தில் உல்லாஸமாக இருக்கையில் பிரணய ரோஷத்தினால் பிராட்டி பெருமாளை மல்லிகை மாலையைக்கொண்டு கட்டியதை அநுமான் அடையாளமாகக் கூறுவதாகப் பெரியாழ்வார் அருளிச்செய்கிறார். இந்த வ்ருத்

தாந்தம் இதிஹாஸ புராணங்களில் இல்லையென்றும் ஆழ்வார் தாமே ஸாக்ஷாத் கரித்த தென்றும் பெரியோர் கூறுவர்.)

## 15. க்ஷத்ரபந்து பரகதி கண்டது

*(திருமாலையில் நான்காவது பாட்டில் மட்டும் அநுஸந்திக்கப்பட்ட கதை இது)*

மிகக்கொடிய நடத்தைகளையுடையனுய், பல்வகைப் பாவங்களும் உரு வெடுத்து வந்தனனென்னும்படி மஹாபாபியான க்ஷத்ரபந்து என்பானொருவன் இருந்தான் ; அவன் தனது கொடுமையினுல் தாய்தந்தை மக்கள் மித்திரர் அனை வராலும் கைவிடப்பட்டவனுய், காட்டிலே திரிந்துகொண்டு ஜீவஹிம்ஸையினுல் வயிறுவளர்த்து வந்தான். இங்ஙனம் நெடுநாள் சென்றவளவில், ஒருநாள் ஒரு மாமுனிவர் கொடிய வெய்யில் வேளையில் வழிபோகா நிற்கையில் வழி தப்பி இப்பாவி திரியுங் கானகத்திலே புகுந்து இவனது கண்ணுக்கு இலக்கா யினர். அவரைக்கண்டதும் அவருடைய பரிதாபத்தைக் கண்ட இவனுக்குத் தன்னையுமறியாமல் அம்முனிவர் விஷயத்திற் காருண்யமுண்டாகி, 'மாமுனிவரே? இஃது உம்முடைய வழியன்றே ; வழிதப்பி வந்தீர்போலும் ; உற்றுநோக்கிப் பாரும்' என்று முனிவரை நோக்கிக்கூற, அவரும் உணர்ந்து பொறுக்கமுடியாத தாஹத்தையுடையராய் ஒரு தடாகத்தைத் தேடிச் செல்லுகையில் அருகே ஒரு அழகிய பொய்கையைக் கண்டு, தாபமிகுதியால் சடக்கென அக்குளத்திற்போய் விழுந்திட்டார். அப்போது அருகிருந்த க்ஷத்ரபந்து தனது கையிலிருந்த வில்லை யும் அம்புகளையும் எறிந்துவிட்டு, அம்முனிவரைப் பிடித்துத் தூக்கித் தேற்றித் தாமரைக்கிழங்குகளை உணவாகக்கொடுத்து விடாயைப்போக்கி மகிழ்வித்தான். பிறகு அவர் கரைமீதேறி ஒரு மரத்தடியில் உட்கார, அவரது கால்களின் நோவு தீர நன்ருகப் பிடித்து உபசாரங்களைச் செய்த க்ஷத்ரபந்துவை நோக்கி அம் முனி வர், 'பேருபகாரம் புரிந்த பெரியோனே! யாருடைய சிறந்த குலத்திற் பிறந்த வன் நீ? உனது வரலாறுகளைக் கேட்க விரும்புகிறேன்' என்ன; அதுகேட்ட அவனும் 'முனிவர் கோமானே! நான் ஸௌர்யவம்சத்தில் விச்வரதன் என்பவற்கு மகனுய்த் தோன்றியவன்' என்று தொடங்கித் தனது கொடுமைகளை யெல்லாம் ஒன்றும் ஒளிக்காமல் உள்ளபடி சொல்ல; அவற்றைச் செவியுற்ற முனிவர் இவனை நல்வழியிற் செலுத்தவேணுமென்ற கருத்துகொண்டு 'அப்பா! இனி இத் தீய குணங்களையெல்லாம் விட்டிட்டு ஜீவகாருண்யத்தையே பரமதர்மமாகக் கடைப்பிடிக்க உன்னுலாகாதோ?, என்று கேட்க; அதற்கு அவன் 'காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்னும் தீக்குணங்கட்குப் பிறப்பிடமான நான் அவற்றைவிட்டுப் பிரிந்து ஒரு க்ஷணகாலமும் இருக்ககில் லேன்; என் மனம் என் வசமன்று; இது தவிர வேறு நியமநமுண்டாகில் சிர மேற் கொள்ளக் காத்திருக்கிறேன்' என்ன; எப்படியாவது இவனை வழிபடுத்த வேணுமென்னும் பேரவாக்கொண்டமுனிவர், 'இது மாட்டாயாகில், எப்போதும் கோவிந்த! கோவிந்த! என்று சொல்லிக்கொண்டிருக்கவாவது உன்னுல் முடியுமோ? இருமினுலும் தும்மினுலும் கோவிந்த! என்றே சொல்லிக்கொண்டிருப்பாயாகில் உனக்கு மிக்க நன்மையுண்டாம்' என்று சொல்லிவிட்டுப் போயினர். அது முத லாக க்ஷத்ரபந்து கோவிந்த நாமத்தை இடைவிடாது ஸங்கீர்த்தநம் பண்ணிக் கொண்டிருந்தான். சிலகாலங் கழித்து அவன் மரணமடைந்து அந்தணர் குலத் தில் பூர்வஜந்ம ஸ்மரணத்துடன் பிறந்தான். உடனே அவனுக்கு இக்கொடிய ஸம்ஸாரத்தில் மிக்க நிர்வேதம் உண்டாயிற்று. இப்படிப்பட்ட உத்தமோத்தம மான ப்ராஹ்மண குலத்தில் எனக்குப் பிறவி நேர்ந்ததும் பூர்வஜந்ம ஸ்மரண முண்டானதும் நான் முன்பு பண்ணின கோவிந்தநாமஸங்கீர்த்தநத்தின் பய னன்றோ? ஆகவே எனக்கு மேலான நன்மையை விளைத்த அந்த ஸ்ரீகோவிந்த

ளேயே நான் ஆராதனஞ்செய்து, *தீண்டாவழும்புஞ் செந்நீருஞ் சீயுநரம்புஞ் செறிதசையும் வேண்டா நாற்றமிகு முடலைவிட்டு* மாய வன்சேற்றள்ளற் பொய்ந்நிலத்தைக் கடந்து நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்தை அடையக் கடவேன் என்பதாகத் துணிந்து அங்ஙனமே செய்து பரமபாகவதனாகி வீடு பெற்றனன்.

## 16. நமனும் முற்கலனும் பேசினது

*(திருமாலையில் 12-ஆவது பாட்டில் மட்டும் அநுஸந்திக்கப்பட்ட கதை இது)*

முத்கலோபாக்யாநம் ஸ்ரீவிஷ்ணுதர்மத்திலே தொண்ணூறாவது அத்யாயத்திற் கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்கம் வருமாறு. முத்கலனென்பவன் பெரும்பாவிகளில் தலைவன்; அவன் ஒருநாள் கோதாநம் பண்ணும்போது, 'க்ருஷ்ணாய' என்று சொல்லி தாநஞ் செய்தான். பின்பு அவன் மாண்ட பிறகு யமகிங்கரர் வந்து நெருக்கி அவனை யமன் பக்கலிலே கொண்டுசெல்ல, யமன் இவனை எதிர்கொண்டு ஸம்பாவனை செய்தான். அதுகண்ட முத்கலன், 'உன்னுடைய படர்கள் என்னை நெருக்கிக் கொண்டுவாராநிற்க, நீ என்னைக்கௌரவிப்பதற்கு என்ன காரணம்?' என்று கேட்க; 'உன்னுடைய மேன்மையை அவர்களுமறிந்திலர், நீயுமறிந்திலை,—க்ருஷ்ண நாமத்தை நீ ஒருகால் சொன்னாய் காண்!' என்று யமன் அதனைப் புகழ்ந்துகூற, இப்படி ப்ரஸக்தாநுப்ரஸக்தமான இந்த ஸம்வாதம் நரகாநுபவம் பண்ணுகிறவர்களுடைய காதிலே விழுந்தவாறே அந்த நரகந்தானே துக்காநுபவத்திற்குரிய நிலமாயிருந்த நிலைமாறி ஆநந்தாநுபவ நிலமாய்விட்டதென்றால் இத்திருநாமத்தின் வைபவம் எப்படிப் பட்டதாயிருக்கவேணும்? 'என்னை நீ ஸத்கரிப்பதற்குக் காரணமென்ன?' என்று முத்கலன் கேட்க, 'முன்பு க்ருஷ்ணநாமம் சொன்னாய்' என்று யமன் உத்தரமுரைத்த இவ்வளவேயாய்த்துப் பிறந்தது; யமன் தனக்குப் பாவநமாக அத்திருநாமத்தை உச்சரித்தவனல்லன்; முத்கலன் ப்ரார்த்திக்க அவனுக்கு உபதேசித்தவனுமல்லன்; நரகாநுபவம் செய்கிறவர்களின் காதிலே இதுவிழுந்து அவர்கள் உய்வுபெறவேணுமென்று நினைத்துச் சொன்னவனுமல்லன்; இனி இதனைக் கேட்டவர்களோ பாபம் பண்ணுகிற ஸமயத்திலே அநுதபித்து மீண்டு ப்ராயச்சித்தம் செய்துகொள்ளக்கூடிய காலத்திலே கேட்டவர்களல்லர்; பாபத்தினுடைய பலன்களை அநுபவிக்கும்போதாயிற்றுக் கேட்டது. அப்போதுதானும் இச்சையோடு கேட்டாருமல்லர்; யாத்ருச்சிகமாகத் திருநாமம் செவிப்பட்டவித்தனையே; இப்படிப்பட்ட திருநாமமே இவ்வளவு பெருமையுடைத்தானால், பின்னை என் சொல்லவேண்டும்? .... .... .... ... *

திவ்யப்பிரபந்தங்களில் அநுஸந்திக்கப்பட்டுள்ள ஸகல கதைகளையும்
திவ்யப்ரபந்த பகவத் கதாம்ருதமென்னும் தனி நூலினால் விளக்கியிருக்கிறோம்

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———

ஸ்ரீ:

# அன்பர்களுக்கு அவசியமான அறிவிப்பு

**(P. B. அண்ணங்கராசாரியர்)**

---

ஸ்ரீராமாநுஜன் இதழ் 132ல் பிரபந்தஸார தத்வஸாரமென்னும் நமது ஆராய்ச்சி நூலொன்று வெளியிடப்பட்டுள்ளதென்பதை யாவரும் நினைவில் கொண்டிருப்பீர்கள். தவறான பிரசாரத்தைத் தடுத்து உண்மையையுணர்த்தி லோகக்ஷேமத்தை விளைப்பதற்காகவே அந்த நூல் நம்மால் வெளியிடப்பட்ட தென்பதை உண்மைப்பொருளில் நோக்குடைய உத்தமர்கள் உணர்ந்திருக்கின்றார்கள். அவ்வாராய்ச்சி நூலை ஆழ்ந்து அநுபவித்த பல மஹான்கள் அதைப்பற்றிச் செய்திருக்கும் அபிநந்தனங்கள் அளவுகடந்தவை. பொய்யானதை மெய்யென்று மயங்கி ஆதரித்துப் போந்தவர்கள் நெடுநாளாகத் தொடர்ந்து வரும் வாஸனையைத் தவிர்த்துக் கொள்ளமாட்டாமையினாலும், உண்மைப்பொருள் நெஞ்சில் ஊன்றினாலுங்கூட அதை ஆதரிக்கவொட்டாமல் தடைசெய்கிற துரபிநிவேசவசத்தாலும் எதிரம்பு கோக்கவருவாரும் சிலருளர். அன்னவர்கள் ஆர்ஜவத்தோடு நேர்நின்று மறுப்பதற்கு விஷயலேசமுமில்லாமையால் நான்கு மாதகாலம் வாளாவிருந்தார்கள்; அங்ஙனே வாளாவிருப்பது மநுஷ்ய தர்மத்திற்கு ஒத்திராமையாலே ஏதேனுமொரு விதத்தில் ஏதாவது ப்ரதிசப்தம் பண்ணிவைக்க வேணுமென்று ஆசைகொண்டு இருபதுநாளாக குத்ஸிதமார்க்கங்களில் விஷமசேஷ்டைகளைச் செய்து வந்தார்கள். செய்து வந்தார்களென்றால் யாவரென்று கேள்வி வரும். இக் கேள்விக்கு நாம் என்ன விடை தருவது? அநாமதேயத் துண்டுக்காகிதங்களை இதாநீந்தந வ்யக்தி தூஷணையாகவும் பூர்வாசார்ய நிந்தையாகவும் வெளியிட்டு வந்தார்கள். பிறகு செ. கி. வ. என்றிவ்வளவே கையொப்பமிட்டுப் பல துண்டுக் காகிதங்களை நாள் தவறாமல் பிரசுரம் செய்து வந்தார்கள். இவையெல்லாவற்றிலும் பெரும்பாலும் [P. B. A. ப்ர. அ. என்று] அடியேனுடைய ப்ரஸ்தாவமில்லாமலிராது. அந்த ப்ரஸ்தாவமும் நிந்தாரூபமேயொழிய வேறுவிதமாகவன்று. இங்ஙனம் வெளிவந்த பிரசுரங்களுக்கெல்லாம் அடியேனைச் சேர்ந்தவர்கள் உடனுக்குடனே விடையான பத்திரிகைகளை வெளியிட்டுக் கொண்டே வந்தார்கள். நிந்தாலேசமுமில்லாமல் ஜ்ஞாதவ்யார்த்த பூயிஷ்டமாகவே புஸ்தகரூபமாகவே வெளியிட்டு வந்தார்கள். இவையெல்லாம் காஞ்சிபுரத்திற்கு அப்பால் வெளியேறவில்லை. அடியேனைச் சேர்ந்தவர்கள் வெளியிட்ட நூல்களை உலகமெல்லாம் காணவேணுமென்கிற ஆசை உண்மையாக அடியேனுக்கிருந்தபடியால் இந்தஸஞ்சிகையில் சிலவற்றைச்சேர்த்திருக்கிறேன். மேலேகாண்பது.

அநாமதேயமாகவும் அவ்யக்தநாமதேயமாகவுமே யெழுதி வெளியிட்டுக் கொண்டிருந்தவர்கள் வ்யக்தநாமதேயத்துடன் வெளியிடவேண்டிய நிர்ப்பந்தமேற்பட்டபடியால் 1—4—60 தேதியில் பண்டிதராஜ திருவரங்கம் திருமலை தாதாசாரியார் பெயராலும், திருமலை சங்கபுரம் ஈகை வேதாந்ததேசிக தாதாசாரியர் பெயராலும் இரண்டு துண்டுப்புத்தகங்கள் வெளிவந்தன. அவற்றுக்கும் ப்ரத்யாக்க்யானம் இந்த ஸஞ்சிகையிலேயே காணலாம். அநாமதேய பத்ரிகைகளோடு ஸநாமதேய பத்ரிகைகளோடு வாசியற எல்லாவற்றிலும் நிந்தைக்கு அளவே கிடையாது. பிரபந்தசாரமென்று வழங்கி வரும் நூல் தேசிகன் ஸாதித்ததாகச் சொல்லி வருவது அபத்தமென்றும் இடையில் கல்பிதமென்றும், இதுமட்டுமன்று, இத்தோடுகூட இன்னும் ஆறேழு வாங்மயங்களும் கல்பிதமென்றும் அடியேன்—எத்தனைபேர் எத்தனை பரிச்ரமங்கள் பட்டாலும் மறுக்கவொண்ணாதபடி நிரூபித்திருக்கிறேன். இந்த ஸஞ்சிகையிலும் பிரபந்த

ஸாரதத்வப்ரதிஷ்டா என்னும் பெயருள்ள நூலினால் ஸாரார்த்தஸம்க்ஷேபம் வெளியிட்டிருக்கிறேன். உண்மையையுணர்ந்து கொள்ள விருப்பமுடையார் ஸாவதானமாக எல்லாவற்றையும் வாசித்துப் பார்ப்பது.

இந்த விவாதங்களில் நாம் ஏதுக்குத் தலையிடவேணுமென்கிற வெறுப்புடையார் இந்த ஸஞ்சிகையை நமக்குத் திருப்பி யனுப்பிவிட்டால் அவர்களுக்கு லோகாபிராமமான வேறு நல்லநூலை அவர்களின் விருப்பப்படி யனுப்பிவைப்போம். "லோகோ பிந்நருசி:" ஆகையாலே 'இந்த விவாத புத்தகங்களை யெல்லாம் இவர் நமக்கு ஏதுக்கனுப்புகிறார்' என்று சிலர் வெறுக்கவுங் கூடும். அங்ஙனம் வெறுப்பு உண்டாகாமைக்காக இது விஜ்ஞாபித்தபடி.

ஏறக்குறைய எண்பது ஆண்டுகட்கு முன்பு நடந்ததொரு விஷயம் விஜ்ஞாபிக்கிறேன், கேண்மின். ஸுப்ரஸித்த வித்வத்ஸார்வபௌமராக எழுந்தருளியிருந்த மைஸூர் அனந்தாழ்வான் ஸாதித்த வேதாந்த வாதாவளியில் ப்ரஹ்மபத்சக்திவாதமென்கிற வொரு க்ரந்தத்திற்கு மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சி. திருப்புட்குழிஸ்வாமி கண்டனமொன்றெழுதி வெளியிட்டிருந்தார். அதன்மேல் மறுப்பெழுதிய வொரு வித்வத் வரேண்யர் தம்முடைய அந்த மறுப்பு நூலில் தேசிகனுடைய அதிகரணஸாராவளிக்கு வியாக்கியானமான சிந்தாமணியென்னும் க்ரந்தத்திலிருந்து சிலசில பங்க்திகளை யுதாஹரித்து 'குமாரவேதாந்தாசார்யரான நயனாராசார்யர் இப்படியருளிச் செய்திருக்கிறார்' என்று எழுதியிருந்தார். அதற்கு மறுப்புரைக்கவெழுந்த [திருப்புட்குழி ஸ்வாமியின் ப்ரதமசிஷ்யராய் மஹாவித்வம்மணியான தன்றி பட்டப்பா தாதாசார்யஸ்வாமி, அதிகரணசிந்தாமணி யென்கிற அந்த வியாக்கியானம் தேசிகனுடைய திருக்குமாரர் ஸாதித்ததன்று என்றும், அவருக்கு மிகவும் பிற்பட்டவொரு சிறந்த வித்வான் எழுதிவைத்ததென்றும், அநுபபந்நங்களான பல அர்த்தங்கள் அந்த சிந்தாமணி வியாக்கியானத்தில் இன்னின்னவை யிருப்பதால் திருப்புட்குழிஸ்வாமி முதலான மஹநீயர்கள் இப்படித்தான் நிர்ணயித்திருக்கிறார்களென்றும் விரிவாக எழுதியிருந்தார். திருப்புட்குழிஸ்வாமியின் பரம்பரையில் வருமவர்கள் இதை ஸுத்ருடமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். இவ்விஷயத்தின் உண்மையை இக்காலத்தில் ஸாதிக்கக்கூடியவர் ஸ்ரீஉவே. வித்வான் இளங்காடு ரங்காசார்ய ஸ்வாமியொருவர் எழுந்தருளியிருக்கிறார். தன்றி பட்டப்பா தாதாசார்யஸ்வாமி யெழுதியிருப்பதில் அதிகரணசிந்தாமணியிலுள்ள அநுபபந்நார்த்தங்களென்று நிரூபிக்கப்பட்டிருக்குமவற்றில் ஒன்றுக்குக்கூட ஒருவரும் பதில் சொல்ல முடியாதென்கிற ப்ரவாதமிருந்து வருகிறது. ஆனாலும் திருப்புட்குழிஸ்வாமி யநுபந்திகளின் இவ்வபிப்ராயத்தை மற்றுள்ள எல்லாரும் அங்கீகரிக்கிறார்களென்பதில்லை. 1940ஆம் வருஷத்தில் ஸ்ரீமத் அஹோபிலமடத்திலிருந்து அச்சிடுவித்த 'இரண்டு வியாக்கியானங்களோடு கூடிய அதிகரணஸாராவளியில் அதிகரணசிந்தாமணி நயனாராசார்யர் பணித்ததாகவே பதிப்பிக்கப்பட்டுள்ளது.

பிரபந்தசாரத்தின் போக்கு இத்தகைத்தன்று. இதைப்பற்றின பிஷ்டபேஷணம் போதும். இந்நூல் தேசிகனருளியதன்று என்று ஸ்திரீகரணம் செய்வது நம்முடைய மனனக மலத்தினாலன்று. தேசிகன் திருமுடிமேல் வீணான அவத்யம் ஏறத்தகாது என்பதனாலேயே. இதனால் என்ன அவத்யம் தேசிகன்மீது ஏறிவிடுமென்று சங்கிப்பவர்கள் ஸாரஸம்க்ஷேபமாக இதில் வெளியிடப்படுகிற ப்ரபந்தசார தத்வப்ரதிஷ்டாவை வாசிக்கக்கடவர்கள். இந்த தத்வப்ரதிஷ்டை மூலமும் வியாக்கியானமுமாகக் கொள்ளத்தக்கது. முதலிலுள்ளது மூலமான தத்வக்ரந்தமாயும், பிறகு சிறிய லிபியிலுள்ளது (ப்ர. என்பது) வியாக்கியானமான ப்ரதிஷ்டாக்ரந்தமாயும் கொள்ளத்தக்கது.

பகவத்கீதையில் பதினோராமத்யாயத்தில் இருபத்தேழாம் ச்லோகத்தின் தாத்பர்யசந்திரிகையில் வேதாந்ததேசிகன் ஸாதித்திருக்கிற சில பங்க்திகளை அவசியம் உற்று நோக்கவேணும். என்ன எழுதியிருக்கிறாரென்னில், கீழே மூன்றாவது அத்யாயம் முப்பத்தேழாம் சுலோகத்திற்குப் பிறகு [*வித்த்யேநமிஹ வைரிணம்* என்றதற்குப் பிறகு] யாதவப்ரகாசீயர்கள் "இவ்வடத்தில் சிலர் ஐந்து ச்லோகங்களைப் படிக்கிறார்கள்" என்று சொல்லி ஐந்து ச்லோகங்களை யெழுதி வியாக்கியானம் செய்திருக்கிறார்கள்—என்று ஒரு விஷயமெழுதினார். மற்றுமொரு விஷயம்—ப்ரக்ருதமான பதினோராமத்யாயம் 27 ஆம் சுலோகத்திற்குப் பிறகு நான்கு சுலோகங்களையும். மேலே 39 ஆம் சுலோகத்திற்குப் பிறகு ஒரு சுலோகத்தையும் சேர்த்திருக்கிறார்களென்பது. இப்படி யெழுதிவிட்டு

"இந்த சுலோகங்கள் உண்டோ இல்லையோ என்பதை பகவான்தான் அறியவேணும். முந்தின வியாக்கியான கர்த்தாக்கள் இந்த சுலோகங்களைக் கையாளவில்லை. பாடபரம்பரையிலும் வரவில்லை. ஆகவே பாஷ்யகாரர்கள் இந்த சுலோகங்களை ஆதரித்திலர். கீதையில் இத்தனை சுலோகங்களிருக்கின்றனவென்று வியாஸாதிகள் கணக்கிட்டு வைக்கவில்லை. பிற்காலத்தவர்கள் நம்பத் தகாதவர்களாயிருக்கின்றார்கள்."

என்றிவ்வளவும் ஸாதித்திருக்கின்றார். ப்ரக்ஷிப்தங்களாகத் தாம் கருதுகின்ற அந்த பத்து சுலோகங்களையும் அவ்விடத்திலே தமது திருக்கையினாலெழுதியுள்ளார். அவற்றை வாசிக்கும்போதே அவை கல்பிதங்களென்று நிஸ்ஸந்தேஹமாகத் தெரிய வருகின்றது. வேணுமென்றே கற்பனை பண்ணிச் சேர்த்தார்களென்பதும் நன்கு தெரிகின்றது. அப்படியிருந்தும் ஸ்வாமி "ஏதே ச்லோகாஸ் ஸந்தி ந வேதி தேவோ ஜாநாதி' என்று எழுதியிருக்கின்றார். பிரபந்தசார விஷயத்தில் 'தேவோ ஜாநாதி' என்றெழுத நமக்குக் கைவரவில்லை. அபிநிவேசமின்றி ஆராய்ச்சி செய்யவல்லவர்களுக்கு இவ்வுண்மை நெஞ்சில் பதியாமல் போக ப்ரஸக்தியேயில்லை.

## ப்ரக்ருதவிவாதவிஷயத்தில் ஸாரமானவார்த்தை இவ்வளவே

திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் ஏகப்ரபந்தமேயென்று சிலர் சொல்லிவிட்டால் அதனால் நம்முடைய ஸித்தாந்தப் பொருளொன்றுக்கும் பங்கம் விளைந்திடாது. திருநெடுந்தாண்டகம் சரமப்பிரபந்தமன்று என்று பேசிவிட்டதனாலும் ஒரு ஹாநிவிளைந்திடாது. திருமடல்களை நாங்கள் பல பாட்டுக்களாகப் பிரித்துக்கொள்ளுகிறோமென்றாலும் குடிகெட்டுப்போய்விடாது. 'ப்ரபந்தசாரத்தை தேசிகக்ருதியாக நாங்கள் நூறுவருஷங்களுக்கு மேலாகச் சொல்லிவருகிறோம்; இதை நீ எதற்கு மறுக்கிறாய்?' என்று கேட்டாலும் இதற்கொரு பிரபல காரணம் சொல்லித்தீரவேண்டிய அவசியமுமில்லை. உலகத்தில் எத்தனையோ இடங்களில் எத்தனையோவிதமான விபர்யயங்கள் நடந்திருக்கின்றன, நடந்துகொண்டிருக்கின்றன, நடக்கவும்போகின்றன. அவற்றையெல்லாம் விமர்சிக்க நாம் ப்ரவர்த்திக்கின்றோமோ? இல்லை. ப்ரக்ருத ப்ரபந்தசார விஷயத்தில் இத்தனை வாதப்ரதிவாதஸம்ரம்பங்கள் ஏதுக்கு? என்று சிலர் நினைக்கக் கூடும். இதற்குத் தெரிவிக்கலாகிறது.

காளிதாஸக்ருதியான மேகஸந்தேசத்தில் "ஆஷாடஸ்ய ப்ரதமதிவஸே" என்பது ஒரு சுலோகம். இதில் 'ப்ரதமதிவஸே' என்று பாடமன்று, 'ப்ரசமதிவஸே' என்றுதான் பாடம் என்று சில பண்டிதர்கள் கூறினார்கள். ஆஷாடமாஸம் பிறந்த முதல்நாளில் என்பது முந்தினபாடத்தில் அர்த்தம். ஆஷாடமாஸம் முடியும் நாளில் என்பது பிந்தினபாடத்தின் அர்த்தம். இதில் வித்வான்

களுக்கு விவாதம் க்ரமேண வளர்ந்திட்டது. மைஸூரில் மஹாவித்வானுக விளங்கியிருந்த கஸ்தூரி ரங்காசாரியர்ஸ்வாமி பிந்தினபாடமே ஸாதுவென் கிருர். அந்த ஸ்வாமிக்குத் தோள்தீண்டியான மற்றெரு மஹாபண்டிதர் முந் தினபாடமே ஸாதுவென்கிருர். வாதப்ரதிவாதங்கள் முற்றிவிட்டன. ப்ரசமபாட தத்வம் என்று பல ஸஞ்சிகைகள் எழுதிக்கொண்டு போகிருர் கஸ்தூரிஸ்வாமி. மற்றெரு மஹாபண்டிதரும் 'ப்ரதமபாடதத்வம்' என்று பெயரிட்டு அபரிமித மாக எழுதிக்கொண்டுபோகிருர். இந்த ஸஞ்சிகைகளெல்லாம் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையில் ஒரு ஸம்வத்ஸரகாலம் இடைவிடாது வெளிவந்துகொண் டிருந்தன. 55 ஆண்டுகட்கு முந்தின ஸங்கதி இது. மேகஸந்தேச மென்பது ஒரு கற்பனைக் காவியம். மேகத்தைத் தூதுவிட்டதுமில்லை, தூதுவிட்டவனுமில்லை. தூதுவிட வேண்டிய ஹேதுவுமில்லை. எல்லாம் கற்பனை. ஆஷாடமாஸத்தின் முதல் நாளானுலென்ன? முடிவுநாளானுலென்ன? மிகச்சிறந்த வேதவேதாந்தப் பொருள்களில் சர்ச்சை செய்வதைவிட்டு இந்த கற்பனைக்காவியத்தில் ஒரெழுத் தைப் பற்றிக்கொண்டு வாதப்ரதிவாதங்களை வளர்த்திக்கொண்டு போனது விவேகிக்ருத்யமா என்று ஒருவர் நினைத்ததுண்டா? பேசினதுண்டா? விமர்ச குசலர்களுக்குள் எந்த சர்ச்சை விளைந்தாலும் அதில் ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக எத்தனை விஷயங்கள் வெளிவரும் தெரியுமோ? எத்தனை நுட்பங்கள்! எத்தனை மருமங்கள்! வெளிவரும்.

ஹரிதிநதிலகம் என்றெரு க்ரந்தம். இது ஏகாதசீச்ராத்த விஷயமான ச்லோகரூப க்ரந்தம். இதை தேசிகக்ருதியாகச் சிலர் வெளியிட்டுவிட்டார்கள். அது தவறு தவறு தவறென்று பலர் கோஷித்தார்கள். ஆயினும் இன்னமும் பலர் அதை தேசிகக்ருதியாகவே சொல்லிவருகிருர்கள். கிம்கிருஹேசஸ்துதி யென்று ஒரு ஸ்தோத்ரநூல். இது எவ்வுள்கிடந்தான் விஷயம். இதையும் தேசிகக்ருதியாகச் சிலர் அச்சிட்டுவிட்டார்கள். இதையும் பலர் நம்பிவிட்டார் கள். ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகியசிங்கர் இதைப்பற்றி ஒரு ஸமயம் ஸாதித்தது வெகு ரமணீயமாயிருந்தது. அதாவது, 'இந்த ஸ்தோத்ரம் ஒரு ஸாமாந்ய கவி இயற்றினது; இதை ஸ்வாமி தேசிகன் திருமுடிமீது ஏற்றிவிட் டார்கள். ஏற்றினதுமல்லாமல் கோவிலிலும் சொல்லி வழக்கப்படுத்திவிட்டார் கள். 'இது ஒரு ஸாமான்யன் செய்தது' என்ருலுங்கூட என் வார்த்தையை மதிப்பாரில்லை; இதன் ப்ரசாரமோ தடுக்கமுடியாததாய் வளர்ந்துவருகிறது. அதற்காக ஒரு வழிசெய்தேன்; இதையொரு அவ்யபதேச்யன் செய்தானென்று சொல்லிவிடாமல் ஒரு வ்யபதிஷ்டர்தலையிலேயே ஏற்றிவிட.லாமென்று தோன்றி 'அத்திப்பட்டு அழகியசிங்கர் அருளிச்செய்தது' என்றெழுதிவிட்டேன் என்று ஸாதித்தார். அப்படியே யெழுதி அச்சிட்டிருப்பதை மடத்தின்மூலமாக வெளி வந்த வ்யாக்க்யாநத்வயோபேதமான அதிகரண ஸாராவளியின் பூமிகையிலே யாவரும் காணலாம். இந்த ஸ்துதிநூலுக்கு தேசிகக்ருதி யென்கிற அபப்ரதை இன்னமும் போகவில்லை. க்ருஹீதக்ராஹிகளைத் திருத்த யாரால் முடியும்?

பிரபந்தசாரத்தை தேசிகக்ருதியென்று இசைந்தால் தேசிகனுடைய பெருமைக்கு மிகவும் இழுக்காகின்றதென்னு முண்மையைத் தெரிந்துகொள்ள கில்லாமல் 'நம்முடைய ஸங்கேதம் பாழாய்ப்போய்விடுகிறதே!' என்று இவ் வளவுக்காகவே வருத்தமுற்று, ப்ராமாணிகஸரணியில் விடைகூறமாட்டாமல் வீணான நிந்தைகளையே பொழிந்துகொண்டிருக்கு மவர்களைப்பற்றி நமக்கு விசாரலேசமுமில்லை. தேசிகனுடைய திருவருளால் கண்டறிந்த உண்மையை ஊர்ஜிதப்படுத்துவது நமக்குற்ற கைங்கரியமாதலால் அதனை வழுவறச் செய் கின்ருேம். இதனுடைய பலனைப்பற்றி நமக்கு யாதொரு விசாரமுமில்லை. *

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# பிரபந்தஸாரதத்வப்ரதிஷ்டா

[ஸ்ரீகாஞ்சி. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்]

## — அவதாரிகை —

*1.* பிரபந்தஸாரமென வழங்கும் ஒரு தமிழ் நூலைப்பற்றி ஆழ்ந்து விமர்சிக்க ப்ரஸக்தியேற்படாத காலத்தில் பிறருடைய பேச்சுக்களின்படி அதை தேசிகக்ருதியாக நாம் நெடுநாள் நம்பியிருந்ததுண்டு. அந்த நம்பிக்கை மிகத் தவறென்று தேறியதை பிரபந்தஸாரதத்வஸாரமென்னும் விமர்ச நூலினால் விவரித்தோம். எத்தனையோ விஷயங்களில் நாம் ஆராய்ச்சி செய்யப்புகாத வளவில் சிலர் சொல்லிக்கொண்டிருப்பதை நம்பிவிடுவது ஸஹஜந்தானே. ஸ்ரீராமாயண ஸ்ரீவிஷ்ணுபுராண ஸ்ரீமஹாபாரதாதிகளான பலபல மஹாக்ரந்தங்களிலும் ஏற்பட்டுள்ள ப்ரக்ஷேப உத்க்ஷேபங்களை நெடுநாள் தெரிந்து கொள்ளாமல் ஸாமாந்யமாகத் தவறுகளை அப்படியே நம்பியிருந்து ஆராய்ச்சிக்கு அவகாசமேற்படும் போதுகளிலும் ஆப்தோபதேசாதிகள் ப்ராப்தமாகும் ஸமயங்களிலும் பழைய கொள்கையைத் திருத்திக் கொள்ளப்பெறுகிறோமென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நமேயன்றோ. அசைக்கவொண்ணாத உபபத்திகளைக்கொண்ட ஆராய்ச்சியினால் தேறுகின்ற வஸ்துஸ்திதி பிராமாணிகர்களின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டே தீரும். பல நாட்களில் தோன்றாத ஆராய்ச்சியானது ஒரு ஸமயவிசேஷத்தில்தான் தோன்றும். 'இவ்வாராய்ச்சி இத்தனை நாட்களாக ஏன் உதிக்கவில்லை?' என்று விவேகிகள் வினவமாட்டார்கள். பரமைகாந்தியானவொரு வைதிகர் தமது திருமாளிகையில் தளிகை செய்வதற்கு ஒருவரை அமர்த்திக்கொள்ளுகிறார். அந்த பரிசாரகர் பலபெரியார்களிடத்திலும் கலந்து பழகிக்கொண்டும் ஆங்காங்கு தளிகை செய்துகொண்டு மிருந்ததனால் அவருடைய சரிதையிலும் உத்பத்தியிலும் எவ்விதமான விசிகித்ஸையும் தோன்றாமலே அவரைப் பரிசுத்தராகவே நினைத்திருந்ததனால் கல்மஷமற்ற நெஞ்சினராயிருந்தார் அந்த வைதிகர். ஒரு ஸமய விசேஷத்தில் சில ஆப்தர்களினால் தத்துவம் தெரிந்துகொள்ள நேர்ந்தது. அவர் தகப்பனார் காலஞ்சென்ற பலவாண்டுகட்குப் பின்னர் தோன்றியவ்யக்தியென்று தெரியவந்தது. பிறகு ஆர அமர விசாரிக்கவும் ப்ராப்தமாயிற்று பல ஹேதுக்களினால் நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயமாய்விட்டது. பிறகு அந்த வைதிகருடைய நெஞ்சு எவ்வளவு தாபமுற்றிருக்குமென்பதை நாம் சொல்ல வேணுமோ? 'இத்தனை நாளாக இதை ஏன் இவர் ஆராய்ச்சி செய்யவில்லை?' என்று யாரேனும் கேட்பாருளரோ? அவரைப் பல ஸமயங்களில் மாதாபித்ரு ச்ராத்தங்களில் நிமந்த்ரித்து அவருடைய ஸ்ரீபாததீர்த்தத்தையும் ஸ்வீகரித்தவரே இந்தவைதிகர். அக்காலத்துக் கொள்கையின்படி நடந்த காரியங்களுக்கு அவத்யம் சொல்லப்போகாதன்றோ. பிறகு பிறர் வஞ்சிக்கப்படாதபடிக்கு உண்மையை யுணர்த்துவதும் அவருடைய கடமையாகுமன்றோ. .... *(1)*

(ப்ர.) ***1.*** பிரபந்தஸாரதத்வஸாரத்தில் மிக விரிவாக எழுதப்பட்ட அவதாரிகையை மேலே கண்டவாறு ஸங்க்ரஹித்தோமிங்கு. இதனால் "கீழ்நாட்களில் பிரபந்தசாரத்தை தேசிகரியற்றிய நூலாகவேகொண்டு உதாஹரித்திருந்தவிவர் இப்போது அதற்கு முரணாக எழுது

வது யுக்தமன்று” என்று சிலர் இதையே ஒரு பெரிய ப்ரஹ்மாஸ்த்ரமாகக்கொண்டு க்ஷேபிப்பது அஸங்கதமென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. ஸஹஸ்ரநாமம், ஸந்தியாவந்தன மந்திரம் முதலானவற்றில் எத்தனையோ பாடப்ரமங்களை ஸதுபதேசத்தாலும் விமர்சத்தாலும் பரிஹரித்துக் கொள்வது முதலான பலவிஷயங்களை இதற்கு நிதர்சனமாகக் கொள்வது. (1)

## பெரியாழ்வாருடை திவ்யஸூக்தி விமர்சம்

2. பெரியாழ்வார் திருப்பல்லாண்டென்கிற ஒரு பிரபந்தமும் பெரியாழ்வார்திருமொழியென்கிற மற்றொருபிரபந்தமுமாக இரண்டுதிவ்வியப்பிரபந்தங்களை அருளிச்செய்தாரென்பது சிறியாரோடு பெரியாரோடுவாசியற அனைவருமறியத்தக்கதும் அறிந்ததுமாம். ‘இரண்டல்ல, ஒரே பிரபந்தந்தான்’ என்று சாதிப்பதற்குச் சிறிதேனும் உபபத்தியுண்டோவென்று பார்த்தால், உபபத்தி சிறிதுமில்லாததோடு அநுபபத்திகளே அதிகமாகப் புலப்படும். நூறு பாசுரங்களை ஒரு பத்தாகக்கொள்வது ஸம்பிரதாயம். இந்த ரீதியில் *வண்ண மாடங்கள்சூழ்* தொடங்கி *மெச்சூது சங்கமளவும் ஒரு பத்தாக எங்கும் ப்ரஸித்தியுள்ளது. இப்பெரியாழ்வார் திருமொழிக்குத் திருப்பல்லாண்டைத் தொடக்கமாக வைத்திட்டால் *மெச்சூதுசங்கப்பதிகம் இரண்டாம் பத்தின் ஆரம்பமாக இருக்கமுடியாது; *மெச்சூது சங்கத்தையே இரண்டாம்பத்தின் தொடக்கமாக அறுதியிட்டிருப்பது அபலபிக்க வொண்ணாததொன்றும். *வண்ணமாடங்கள் தொடங்கி *மெச்சூது சங்கமளவும் நூறு பாசுரங்களிருப்பதனால் முதற்பத்தின் ஆதிபந்தங்களில் விப்ரதிபத்தி கொள்ளக்காரணமேயில்லை. திருப்பல்லாண்டைப் பெரியாழ்வார் திருமொழிக்கு முதற்பதிகமாகக் கொண்டால் முதற்பத்து நூற்றுப்பத்துப் பாசுரங்கள் கொண்டதென்று அஸம்பத்தமாகச் சொல்லவேண்டிவரும். இங்கே சிலர் சொல்லுவதாவது, “திருப்பல்லாண்டைத் தனிப் பிரபந்தம்போல் ஸேவித்துவருகிறார்களே யென்னில், அது ஒருபெரிய பிரபந்தத்தின் ஏகதேசமாயிருக்கச் செய்தேயும் அதைத் தனிப்பிரபந்தம்போல் ஸேவித்து வரும்படி பூருவாசாரியர்கள் ஒரு நிபந்தனை செய்திருந்தபடியாலே அதன்படி ஆசாரம் வருகிறதென்றும், அதுகொண்டு அதைத் தனிப்பட்ட பிரபந்தமாக்கிவிட முடியாதென்றும்” சொல்லுகிறார்கள். பூருவாசாரியர்கள் அப்படியொரு நிபந்தனை செய்திருந்தது உண்மையாகில் பெரியவாச்சான்பிள்ளை-முதலான பேராசிரியர்கள் அதனைக் கடந்து தனிப்பிரபந்தமாகக்காட்டி வியாக்கியானம் செய்தருளியிருக்கவே மாட்டார்கள். திருப்பல்லாண்டுக்கும் பெரியாழ்வார் திருமொழிக்கும் ஸ்ரீபரகாலஸ்வாமியின் வியாக்கியானம் தோன்றியேயுள்ளது. அதிலும் திருப்பல்லாண்டைத் தனிப்பிரபந்தமாகவும் பெரியாழ்வார் திருமொழியைத் தனிப்பிரபந்தமாகவுமே கொண்டமை ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ‘திருப்பல்லாண்டு வியாக்கியானத் தொடக்கத்தில் ஒரு ச்லோகமும், பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானத் தொடக்கத்தில் ஒரு ச்லோகமும் அவர் இட்டிருக்கிறார். “விஷ்ணுசித்தம். நத்வா ததீயமம்ருதோபமதிவ்யஸூக்தம் க்ருஷ்ணவதார விஷயம் விவ்ருணோமி பக்த்யா” என்கிற சுலோகம் ஸ்ரீபரகாலஸ்வாமியின் பெரியாழ்வார் திருமொழிவியாக்கியான ப்ராரம்பத்தில் விளங்கா நின்றது. இதனால் இது தனிப்பட்ட பிரபந்தமென்பது ஸுஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டது. அடுத்தபடியாக அவதாரிகையிலும் “கீழ் திருப்பல்லாண்டில் மங்களாசாஸனம் செய்து” இத்யாதி வாக்யங்களாலே இது ப்ரத்யேகப்ரபந்தமேயென்பதை நன்கு காட்டியிருக்கிறார். அவர் காட்டியிருக்கிறாரென்பது நமக்கு விஷயமேயன்று. திருப்பல்லாண்டின் பிரமேயம் வேறு; பெரியாழ்வார் திருமொழியின் பிரமேயம்வேறு. அதற்குமிதற்கும் என்னசேர்த்தி ? பூர்வோத்தர

மீமாம்ஸைகளுக்கு ஐகசாஸ்த்ர்யம் சொல்லுகிருேமென்பதை நிதர்சநமாக்கி வாதிக்கவெழுந்தால் ஸகல திவ்யப்ரபந்தங்களேயும் ஏகப்ரபந்தமாகவே கொள்ளவேண்டி வரும். எம்பெருமாளுருடைய திவ்யாஜ்ஞையால் திருவவதரித்த கருடவாஹந பண்டிதப்ரணீதமான திவ்யஸூரிசரிதத்திலும் ஐந்தாவது ஸர்க்கத்தில் 70, 71, 72 சுலோகங்களில் திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் தனித்தனிப் பிரபந்தங்களென்பது நன்கு காட்டப்பட்டுள்ளது. ஆக, “திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழியின் முதற் பதிகம்” என்னும் கூற்று ஸர்வாத்மநா அஸம்ப்ரதாயமென்று முடிந்தது. அத்யந்தம் அஸங்கதமானவிதனே தேசிகனுடைய மதமாகச் சொல்லுவது சிறிதும் தகாது. அஸங்கதார்த்தமென்று மூதலிக்கப்பட்டவிதனேக்கொண்டிருக்கின்ற ப்ரபந்தசாரம் விவேகியானவொரு ஆசாரியருடைய நூலாக இருக்க ப்ரஸக்தியே கிடையாதென்பது திண்ணம். .... .... (2)

(ப்ர.) 2. பிரபந்தசாரம் தேசிகனுடைய நூலாக இருக்கத் தகுதியில்லையென்பதை ப்ராமாணிகர்கள் அறுதியிடுவதற்குப் பலஹேதுக்கள் காட்டப்பட்டன. அவற்றுள் இது முதல் ஹேது. திருப்பல்லாண்டைப் பெரியாழ்வார் திருமொழியின் முதல் தசகமாக ஒரு பேதையனும் கொள்ள ப்ரஸக்தியில்லை. இவர்களின் ஸம்பிரதாயத்தில் காலக்ஷேபம் செய்வதற்கென்று திவ்யப்ரபந்தங்களில் சிலவற்றுக்கு வியாக்கியானமிட்டுவைத்த பெரிய பரகால ஸ்வாமி யென்பவர் தமது வியாக்கியானத்தில் இவையிரண்டையும் தனித்தனிப் பிரபந்தங்களாகவே ஸுஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளார். பிரபந்தசாரம் பிறப்பதற்கு முன்னமே அந்த வியாக்கியானம் பிறந்திருந்தும் அது அப்போது பிரசாரத்திலில்லாமையினுல் பிரபந்தசாரகாரர் அதைக் கவனிக்கவில்லை யென்பது ஸ்பஷ்டமாகிறது. இப்போது பதில் சொல்ல எழுந்தவர்களில் ஒருவரும் இதைப்பற்றி வாய்திறக்கவுமில்லை. திவ்யஸூரிசரிதத்தில் பெரியாழ்வார் இரண்டு பிரபந்தங்கள் ஸாதித்ததாகச் சொல்லியிருப்பது திருப்பல்லாண்டையுத்தேசித்து அன்றென்றும் கல்பஸூத்ரவியாக்கியானத்தை யுத்தேசித்தென்றும் ஒருவர் எழுதியிருப்பது அஸங்கதம். இரண்டு ப்ரபந்தங்களென்றதன் விவரணத்தை அவர் தாமே காட்டியிருப்பதாலும் கல்பஸூத்ரவியாக்கியான ப்ரஸ்தாவமே பண்ணியிராமையாலும். (2)

## திருநெடுந்தாண்டகமே சரமப்ரபந்நமென்பதுபற்றி

3. *மாறன்பணித்த தமிழ்மறை நான்குக்கும் ஆறங்கங்கூற அவதரித்தவரான திருமங்கையாழ்வாரருளிச்செய்த திவ்யப்பிரபந்தங்களாறில் எது சரமப்பிரபந்தம்? எது சரமப்பிரபந்தமாக இருக்கத் தகுதியுடையது? என்பதைச் சிறிது ஆராய்வோம். இவ்வாறு பிரபந்தங்களின் அடைவுபற்றி ஆராய்வதற்கு மூன்னே ஒரு விஷயம் தெரிவிக்கலாகிறது. ஆழ்வார்களின் பௌர்வாபர்யத்தில் வைஷ்ணவேதரர்கள் இன்னமும் விவாதப்பட்டுக்கொண்டு வேறுபாடாகவே யெழுதி வருகிருர்கள். இதுபோலவே பிரபந்தங்களின் பௌர்வாபர்யத்திலும் விவாதப்படுவாருளர். அன்னவர்களேப்பற்றி நமக்கு விசாரமில்லை. வடமொழி வேதத்திற்கு வியாஸர்போல நமது தென்மொழி வேதத்திற்கு ஸ்ரீமந்நாதமுனிகள் பரிஷ்காரகர் என்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். அப்போசிரியர் தாம் திவ்யப்பிரபந்தங்களே ஸாக்ஷாத்கரித்து ஸம்பாதித்தவர்; ஆழ்வார்களின் வரிசைக்கிரமத்தையும் திவ்யப்பிரபந்தங்களின் வரிசைக்கிரமத்தையும் ததநுபந்திகளான விஷயங்களேயும் உபதேசித்தருளினவரும் அவரே. திருப்பல்லாண்டானது திவ்யப்பிரபந்தங்களுள் பதிஞேராவதாக இருக்கச்செய்தேயும் அதனே முதற்பிரபந்தமாக வைத்தருளினவர் நாதமுனிகளேயாவர். இன்னின்ன பிரபந்தங்கள் சேர்ந்து முதலாயிரம், இன்னின்ன பிரபந்தங்கள் சேர்ந்து இரண்டாவதாயிரம்..........இத்யாதி வ்யவஸ்தைகளேச் செய்தருளினவரும் அவ்வாசிரியரேயாவர். மற்றுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்து

உதித்து முதலாழ்வார்களென்று பெயர்பெற்ற பொய்கைபூதம் பேயாழ்வார் களின் திவ்யப்ரபந்தங்களை முதலிலே வைத்திடவேண்டியது ப்ராப்தமா யிருக்க அவற்றை மூன்றாவதாயிரத்தில் கொண்டு சேர்த்தது, திருமழிசை யாழ்வாருடைய இரண்டு திவ்யப்ரபந்தங்களில் ஒன்றை முதலாயிரத்திலும் மற்றொன்றை மூன்றாவதாயிரத்திலும் சேர்த்தது, அதுதன்னிலும் முதற்பிர பந்தத்தை முதலாயிரத்திலே சேர்க்காமல் மூன்றாவதாயிரத்திலே சேர்த்து, இரண்டாம் பிரபந்தத்தைக் கொணர்ந்து முதலாயிரத்திலே சேர்த்தது, நம் மாழ்வார் பிரபந்தங்களையும் திருமங்கையாழ்வார் பிரபந்தங்களையும் பிரித்துப் பிரித்து வெவ்வேறாயிரங்களிலே சேர்த்தது..........ஆக இத்தகைய விபாகங் களைப் பலவகைப்பட்ட ஔசித்யங்களை நோக்கி ஸ்ரீமந்நாதமுனிகள் தாமே செய்தருளினபடியாலன்றோ இவற்றில் அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் எவ்விதமான பிறழ்வும் நேராமலுள்ளது. 'திருமழிசைப்பிரானுடைய திருச் சந்த விருத்தம் முதலாயிரத்திலே சேர்க்கப்பட்டிருப்பதனால் அவ்வாழ்வா ருடைய இரண்டு பிரபந்தங்களுள் இதுவே முதற்பிரபந்தமாக இருக்கத் தகும்' என்று சிலர் கூறினால் 'அப்படியுமிருக்கலாம்' என்றோ 'அதுதான் பொருத்தமானது' என்றோ சொல்லக்கூடியவர்கள் ஒருவருமிலர். நான்முகன் திருவந்தாதியில் ஆழ்வார் தாம் பேறுபெற்றபடியைச் சொல்லிற்றிலர்; அது தன்னைத் திருச்சந்தவிருத்தத்திலே சொல்லியுள்ளார்; முடிவில் இரண்டு பாசு ரங்களிலும் அது சொல்லப்பட்டுள்ளது. (119) *பொன்னிசூழரங்கமேய பாசுரத்தில் *என்னதாவி...........உன்னபாதமலர் மன்னவந்து பூண்டு வாட்ட மின்றியெங்கும் நின்றதே* என்றும் அதற்கடுத்த பாசுரத்தில் (120) *மயக் கினான் தன் மன்னுசோதி ஆதலாலென்னாவிதான் இயக்கெலாமறுத்து அறாத வின்பவீடு பெற்றதே* என்றும் அருளிச்செய்திருக்கக் காண்கையாலே இது தான் சரமப்ரபந்தமாயிருக்கவடுக்கும் என்று விவேகசாலிகள் நிர்ணயிக்கக் குறையில்லை. ஸ்ரீமந்நாதமுனிகள் திருவுள்ளம்பற்றினதும் இந்த ஔசித்யமே யாம். ஏவஞ்ச, திருச்சந்தவிருத்தம் முதலாயிரத்தில் சேர்ந்திருப்பதனாலேயே அதற்கு முதன்மை வந்துவிடாதென்று அறியலாகும். இந்த ரீதியிலே திரு மங்கையாழ்வாருடைய திவ்யப்பிரபந்தங்களாறனுள் திருநெடுந்தாண்டகம் இரண்டாவதாயிரத்தில் சேர்ந்திருந்தாலும் அதுவே சரமப்பிரபந்தமாகும். *என்னில் அங்கமெல்லாம் வந்தின்பமெய்த எப்பொழுதும் நினைந்துருகியிருப் பன் நானே* என்று பேரின்ப வெள்ளமாகத் தலைக்கட்டியுள்ளவதனைச் சரமப் பிரபந்தமாகக் கொள்ளாமல், ஆழ்வார் பேறுபெறாத கிலேசத்தினால் எம்பெரு மானைப் பழித்துக்கொண்டு தெருவேற மடலூர்வேன் என்று ஸ்வப்ரபந்த ஸமாப்திபண்ணினார் என்று எழுதிவைக்க ஆசார்ய பீடத்திலமர்ந்தவர்கள் நெஞ்சாலும் நினையார்கள். நம்மாழ்வார் அவாவற்று வீடுபெற்றமை சொல் லித் தலைக்கட்டினவாறுபோலத் திருமங்கையாழ்வாரும் அங்ஙனே தலைக்கட் டினதான திருநெடுந்தாண்டகம் தவிர மற்றொன்று சரமப்ரபந்தமாயிருக்க என்ன ஔசித்யமுள்ளது. திருமங்கையாழ்வாருடைய பிரபந்தத்தைச் சாத்துமுறை செய்யும்போது எங்கும் நியமேந திருநெடுந்தாண்டகமும் சாத்துமுறை செய்யப்பட்டுவருவது அபலபிக்க முடியாததொன்று. பிரபந்த சாரகாரருடைய கொள்கையின்படி இது மூன்றாவது பிரபந்தமாயிருந்தால் இதனை எதற்காகச் சாத்துமுறை செய்வதென்று விமர்சிக்கவேணுமே; விமர் சித்தால், இது த்ருதீய ப்ரபந்தமன்று சரமப்ரபந்தமே யென்பது பக்ஷபாதி களுக்குங்கூட மறுக்கவொண்ணாதபடி மதிக்கப்படும்.

(ப்ர.) 3. திருநெடுந்தாண்டகமே கலியன் ஸ்ரீஸூக்திகளில் சரமப்ரபந்தமாயிருக்க அதை த்ருதீயப்ரபந்தமாக்கியும் பெரியதிருமடலை சரமப்ரபந்தமாக்கியும் பேசியிருக்கின்ற பிரபந்த

சாரம் தேசிகக்ருதியாயிருக்கத் தகுதியேயில்லையென்ற இந்த ஹேதூபபாதனமும் அசைக்க வொண்ணாதது. இவ்விஷயத்தில் பதிலெழுதினவர்களில் ஒருவர் (D. T. T.) "திருநெடுந் தாண்டகம் சரமப்பிரபந்தமன்று என்பதைப் பாடக்ரமங்கொண்டே தெரிந்துகொள்ளலாம்" என்றார். ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை நான்கு ஆயிரமாகப்பகுத்த ஸ்ரீமந்நாதமுனிகள் திருநெடுந்தாண்டகத்தை இரண்டாவதாயிரத்தில் சேர்த்தும், திருமடலை மூன்றாவதாயிரத்தில் சேர்த்துமிருக்கையாலே இந்த பாடக்ரமங்கொண்டே தெரிந்துகொள்ளலா மென்பது இவருடைய கருத்து. இது மிகவும் அஸங்கதம். திருமழிசையாழ்வாருடைய இரண்டு ப்ரபந்தங்களில் முதற்பிரபந்தத்தை மூன்றாவதாயிரத்தில் சேர்த்தும், இரண்டாம் பிரபந்தத்தை முதலாயிரத்தில் சேர்த்துமிருப்பதுகொண்டு அவற்றின் பௌர்வாபர்யத்தை மாறுபடுத்த வேண்டிவருமாகையாலே. இதை நாம் முன்னடியே விவரித்திருந்தும் குருடன் கிணற்றில் விழுந்த கதையாயிற்று. மற்றொருவர் (சகையென்பவர்) திருமடல்தான் சரமப்ரபந்தம், திருநெடுந்தாண்டகமன்று என்பதை நாதமுனிகளே தேசிகனுக்கு உபதேசித்துவிட்டதாக எளிதில் எழுதிமுடித்திட்டார். இது ப்ரத்யஸ்த்ரமில்லாத ப்ரஹ்மாஸ்த்ரம். இதைக்கொண்டே ஸகல பூர்வபக்ஷங்களையும் எளிதாகப் பரிஹரித்துவிடலா மிவர்கள். ஒரு அபத்தத்தை ஸ்தாபிக்கப் பல அபத்தங்களை அவலம்பிக்க வேண்டியதாகிறது. முடிவில் அத்தனையும் அபத்தமாகத்தேறும். இதனாலும் பிரபந்தசாரம் தேசிகக்ருதியன்றென்று முடிந்தது. (3)

## திருநெடுந்தாண்டகமே சரமப்ரபந்தமென்பதற்கு மிகச்சிறந்ததொரு நிதானம்

4. திருமங்கையாழ்வார் ஸர்வப்ரகாரங்களாலும் நம்மாழ்வாரை யடியொற்றி யருளிச்செய்பவரென்பது ஸம்ப்ரதாயத்தலைவர்களனைவர்க்கும் ஸம்ப்ரதிபந்நமானது. நம்மாழ்வார்க்குத் திருக்குடந்தையிலே ஒரு வியாமோஹமுண்டாயிற்று. *சூழ்ந்து நின்றமால் விசும்பில் தொல்லைவழிகாட்ட, ஆழ்ந்ததனை முற்றுமநுபவித்து, வாழ்ந்தங்கடியருடனேயிருந்தவாற்றையுரை செய்ததான *சூழ்விசும்பணிமுகில் திருவாய்மொழியிலே நிலவுலகத்தின் நினைவு வருவதற்கு ப்ரஸக்தியே கிடையாது. அப்படியிருந்தும் அப்பதிகத்தில் திருக்குடந்தையைப்பற்றி ஆச்சரியமாகப் பேசியுள்ளார் நம்மாழ்வார். எங்ஙனே பேசியுள்ளாரென்னில்; (7) *மடந்தையர் வாழ்த்தலும்......குடந்தையெங்கோவலன் குடியடியார்க்கே* என்னும் அந்தப்பாசுரத்திற்கு அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையுரை வாக்கியங்கள் சிலவற்றை ஈண்டெடுத்துக் காட்டுகிறேன்;

[நமது தீபிகை வாக்கியங்கள்]

"வழியில் ஆதரிப்பவர்களெல்லாரும் என்னவென்று சொல்லியாதரிக்கிறார்களென்னில்; [குடந்தை யெங்கோவலன் குடியடியார்க்கே தோத்திரஞ் சொல்லினர்] இவர்கள் திருக்குடந்தைப் பெருமானிடத்திலே குடிகுடியாக அடிமைப்பட்டவர்களென்று சொல்லிக்கொண்டு ஆதரிக்கிறார்களாம். இதனால் நம்மாழ்வாருக்குத் திருநாட்டிலுங்கூட மறக்கமுடியாதபடி திருக்குடந்தைப்பதியின் அநுபவம் செல்லாநின்றதென்று தெரியவரும். திவ்யப்பிரபந்தமெல்லாம் லோபமடைந்திருந்த வொரு காலவிசேஷத்தில் ஸ்ரீமந்நாதமுனிகள் அவற்றைப் புநருத்தாரம் செய்வதற்குத் திருக்குடந்தைப் பதி விஷயமான *ஆராவமுதே யென்கிற பதிகமே மூலகாரணமாயிற்றென்று ஐதிஹ்யமுள்ளது. த்ரிகால ஜ்ஞான ஆழ்வாரது திருவுள்ளத்தில் இது முன்னமே படிந்திருந்ததனால் இதையிட்டு இங்கு திருக்குடந்தைப் புகழ்ச்சி ப்ராப்தமாயிற்று என்றுணர்க. திருமங்கையாழ்வார் நம்மாழ்வாருடைய திருவுள்ளத்தையே பின்பற்றிப் பேசுபவராதலால் நம்மாழ்வாருக்குத் திருக்குடந்தையில் அளவுகடந்த அபிநிவேச முண்டென்பதையறிந்தே தாம் திருமொழிபாடத் தொடங்கும் போதே *தூவிசேரன்னம் துணையொடும் புணரும் சூழ்புனற் குடந்தையே தொழுது* என்றும், *சொற்பொருளாளீர் சொல்லுகேன் வம்மின் சூழ்புனற் குடந்தையே தொழுமின்* என்றும் அருளிச்செய்து, சரமப்பிரபந்தமாகிய

திருநெடுந்தாண்டகத்தின் முடிவிலும் *தண்குடந்தைக் கிடந்தமாலை நெடியானை யடிநாயேன் நினைந்திட்டேனே* என்று திருக்குடந்தையையே பேசித் தலைக்கட்டினார். அன்றியும் திருக்குடந்தைக்கென்றே தனிப்பிரபந்தமுமொன்று [திருவெழுகூற்றிருக்கை] திருவாய் மலர்ந்தருளினார்."

என்னுமிவை தீபிகையுரை வாக்கியங்கள். முப்பதாண்டுகட்கு முன்னமே இத்தத்துவம் அடியேனால் நிரூபிக்கப்பட்டுள்ளதென்கைக்காக திவ்யார்த்த தீபிகைவாக்கியங்களை இங்கெடுத்துக்காட்டினபடி. திருநெடுந்தாண்டகமே சரமப்பிரபந்தமென்பதற்கு இது அசைக்கவொண்ணாத நிரூபகம். நம்மாழ்வார் திருக்குடந்தையைச் சொன்ன பிறகு வேறு திருப்பதியைச் சொல்லாமல் பேறுபெற்றார். திருமங்கையாழ்வார் திருக்குடந்தையிலே தொடங்கித் திருக்குடந்தையிலே தலைக்கட்டினார் என்கிற இந்த ரஸ்யரஹஸ்யார்த்தம் பரம்பரையிற் படியாது இடையிலே ஸ்பர்த்தைக்கென்று வந்து புகுந்தவர்களுக்குத் தெரியவழியேது? தெரிவித்தாலும் எதிரம்புகோப்பதே! இவ்வளவு உபபத்திகளையும் திருவுள்ளம்பற்றியே பெரியவாச்சான்பிள்ளை திருநெடுந்தாண்டக வியாக்கியான ப்ரவேசத்தில் பெரியதிருமொழிக்கும் திருக்குறுந்தாண்டகத்திற்கும் ஸங்கதியிட்டருளி, திருக்குறுந்தாண்டகத்திற்கும் திருவெழுகூற்றிருக்கைக்கும் ஸங்கதி காட்டி, திருவெழுகூற்றிருக்கைக்கும் திருமடல்களுக்கும் ஸங்கதி காட்டி, திருமடலுக்கும் திருநெடுந்தாண்டகத்திற்கும் ஸங்கதி காட்டி அதனையே சரமப்ரபந்தமாக நிகமித்தருளினார். திருநெடுந்தாண்டகம் சரமப்ரபந்தமாக வன்றிக்கே இடைப்பிரபந்தமாக இருக்குமாகில் திருமடல்களவதரிக்க ப்ரஸக்திலேசமு மில்லையாகுமன்றோ. பேறுபெற்றுத் தலைக்கட்டினபிறகு மடலூர்வதற்கு ப்ரமேயமுண்டோ? கேவலம் தம்முடைய கவிதா சாதுர்யத்தைக் காட்டுதற்கென்றே திருமடல்களைப் பாடினாரென்றுதானே சொல்லலாகும். இங்கு முக்கியமான விஷயம் ஒன்றே. திருமங்கையாழ்வாருடைய பிரபந்தங்களில் எது சரமப்பிரபந்தமென்று விசாரங்கொள்ளவேண்டிய ப்ரஸக்தி ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கிடையாது. 'துடுப்பிருக்கக் கைவேகவேணுமோ?' என்கிற கதையாக இந்த விசாரம் நமக்கேதுக்கு? வேதத்தில் "ப்ரஜாபதேர்ஹ்ருதயேந" என்றொரு வாக்குள்ளது. இது ஒருபதமா? இரண்டுபதமா? என்கிற விசாரம் ஸாமான்ய ஜனங்களுக்கு உண்டாக ப்ரஸக்தியில்லை. வைதிகர்களுக்கு உண்டானால் பதபாடம் எப்படியுள்ளது? என்று பார்க்க வேண்டியது கடமையேயல்லது தாமாக வொன்று ஆலோசித்து முடிவுசெய்ய வொண்ணுமோ? ஒண்ணாது. அதுபோல இங்குப் பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத்தால் திருநெடுந்தாண்டகம் சரமப்பிரபந்தமாகத் தேறுகின்றதா இல்லையா? என்பதுதான் பார்க்கவேண்டியது. "பெரியவாச்சான்பிள்ளை திருநெடுந்தாண்டகத்தை சரமப்பிரபந்தமாக வைத்துத்தான் வியாக்கியானித்தருளினார்" என்று ஒப்பவேண்டியதாயிற்று. ஆக, இதற்கு மாறாகச் சொல்லிப் பிரபந்தசாரமென்று ஒன்றெழுத முன்வருபவர் வேதாந்த தேசிகனாக இருக்கமுடியாது என்பது சபதம் செய்து சொல்லத்தக்கது. ஸம்ப்ரதாயார்த்தங்களில் க்வசித் கிஞ்சித் அபிப்ராய பேதமுளதென்னு மளவால் இத்தகைய விஷயங்களிலும் அபிப்ராய பேதமுண்டாக அவகாசமே கிடையாது. முதலாழ்வார்களின் பிரபந்தங்களிலும் திருமழிசைப்பிரான் திருப்பாணாழ்வார் பிரபந்தங்களிலும் திருவாசிரியம் பெரிய திருவந்தாதிகளிலும் திருவெழுகூற்றிருக்கை திருமடல்களிலும் ஆக பதினொரு பிரபந்தங்களில் இவற்றுக்குக் கர்த்தா இன்னாரென்று சிறிதும் காட்டப்பட்டிருக்கவில்லை; அப்படியிருந்தும் கர்த்தாக்களை வேறுபடுத்திச் சொல்லும் ஆஸ்திக ஸ்ரீவைஷ்ணவர் ஒருவருமில்லை. இத்தகைய அனேக

விஷயங்களில் பரம்பராப்ராப்தமான உபதேசங்களையே நம்முன்னோர்கள் நிதியாகக் கொண்டு வந்திருக்கிறார்கள். இவற்றில் ஆசார்ய பீடஸ்தர்களி லொருவரும் அபிப்ராய பேதம் காட்டினதுமில்லை, கொண்டதுமில்லை. தேசிகன் கொண்டாரென்னில் நாக்கு வேம். ப்ரக்ருதவிஷயத்தில்—திருநெடுந் தாண்டகத்தைச் சரமப்பிரபந்தமாகவே பெரியவாச்சான்பிள்ளை கொண்டிருக் கிறாரென்பதில் தேசிகனுக்கு அஜ்ஞானமோ அந்யதாஜ்ஞானமோ கல்பிக்க முடியாது. இங்குப் பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத்தை தேசிகன் ஏற்றுக் கொள்ளாமல் புறக்கணித்து விட்டார் என்று இந்த நவீனர்கள் சொல்ல வேண்டும். இது ஸூர்யசந்திரர்கள் மேற்கே தெற்கே உதித்தாலும் ஸங்கதமாகக் கூடிய வார்த்தையன்று. அப்படி புறக்கணிப்பதானால் தேசிகன் தகுந்த உபபத்திகளைக்காட்டியே புறக்கணிப்பர். ஒரு உபபத்தியும் காட்ட வில்லை, காட்டவும் முடியாது. ஆக இதனாலும் பிரபந்தசாரம் ஒரு வழிப் போக்கர் கல்பனை செய்ததென்பது கல்வெட்டாகும். நம்முடைய இந்த நிஷ்கர்ஷத்திற்குச் சார்பாக, தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை நிதியாகக் கொண்டவர் என்பதைப்பலகால் விரிவாக நிரூபித்திருக்கிறோம். (4)

(ப்ர.) 4. மற்ற விஷயங்களெல்லாம் ஒருபுறமிருக்க; 'திருநெடுந்தாண்டகம் சரமப்பிரபந்த மன்று, பெரிய திருமடல்தான் சரமப்பிரபந்தம்' என்று முஷ்டிபிடித்து வாதிப்பவர்கள் மிகவும் சோசநீயர்கள். ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயத்தில் ஜனித்தவர்கள் இதில் ஆக்ரஹிப்பது அத்யந்தம் அநுசிதம். பிரபந்தசாரத்தை இவர்கள் உச்சிமேல்வைத்து மெச்சினாலுங்கூட, பிரபந்தசாரகாரர்க்குத் திருநெடுந்தாண்டகத்தைபபற்றி இங்ஙனே விபரீதாபிப்ராயமிருந்த தென்று கொள்வதற்கு இடமேயில்லையே. இன்ன ஆழ்வார் இன்னின்ன பிரபந்தங்கள் இயற்றினார்களென்பதைத் தெரிவிப்பதாகப் பிரதிஜ்ஞை செய்திருக்கிறாரேயன்றி அப்பிரபந் தங்களின் பௌர்வாபர்யத்தையுங்கூட நிபந்திப்பதாகச் சொல்லியிருக்கவில்லை. அப்படி யிருக்க, திருநெடுந்தாண்டகத்தைச் சரமப்பிரபந்தமாக சாரத்தில் கொள்ளவில்லையென்று வீணான பிடிவாதத்தை வளரச்செய்துகொண்டுபோவது விவேகிகளுக்கு உற்றதா? ஸ்ரீமத் D.R. என்பவர் திருமடல்களைப் பலபாட்டுகளாகப் பிரிப்பதற்கு ஏதேனும் வழியுண்டாவென்று ஆங்காங்குப் பலபல ஆப்தர்களுக்கு எழுதிக்கேட்பதாக அவரவர்கள் நமக்குத் தெரிவிக் கிறார்கள். அஃது எங்ஙனேயாயினுமாகுக. திருநெடுந்தாண்டகத்தைப்பற்றி [திருக்குடந்தை யநுபவத்தை யெடுத்துக்காட்டி] நாமெழுதியிருக்கும் விஷயத்தில் இவருள்ளமுருகியிருக்க வேண்டாமா? திவ்யப்பிரபந்தங்களில் தமக்கு ஏதோ ரஸிக்யமிருப்பதாக இவர் காட்டிக் கொள்வதற்கு என்ன பயன்? நம்மாழ்வார் *சூழ்விசும்பணி முகிலிற்செய்த பரமபதாநுபவத் திலுங்கூட திருக்குடந்தையை 'மறக்கமுடியாதவரா' யிருக்கின்றாரென்பதைக் கண்டறிந்த திருமங்கையாழ்வார் தம்முடைய திவ்யப்பிரபந்தத்தைத் திருக்குடந்தையில் தொடங்கித் திருக்குடந்தையிலே தலைக்கட்டி யிருக்கின்றாரென்கிற ரஸ்யாஹஸ்யத்தை யெடுத்துக்காட்டி யிருந்தும் இவருடைய மனம் கனியவில்லை, தெளியவில்லை—என்றால் *தம் பிறப்பால் பய னென்னே சாதுசனங்களிடையே* என்கிற பாட்டைத் தவிர வேறொன்றையும் நினைக்கமுடிய வில்லையே பாவியேனுக்கு. "நம்மாழ்வார் திருக்குடந்தையைச் சொன்னபிறகு வேறு திருப்பதி யைச் சொல்லாமல் பேறுபெற்றார்; திருமங்கையாழ்வார் திருக்குடந்தையிலே தொடங்கித் திருக்குடந்தையிலே தலைக்கட்டினார் என்கிற இந்த ரஸ்யார்த்தம் பரமபரையிற்படியாது இடை யிலே ஸ்பர்த்தைக்கென்று வந்து புகுந்தவர்களுக்குத் தெரிய வழியேது? தெரிவித்தாலும எதிரம்பு கோப்பதே!" என்கிற நமது பங்க்திகள் இவர்களை உருக்கவில்லையென்றால் இத் தகைய அரஸிகபுஞ்ஜங்களோடு நாம்வாதாடுவது உண்மையில் வெறுப்பையேவிளைக்கின்றது.

## திருமடல்களைப் பலபாட்டுக்களாகப் பகுக்கும் விஷயம்

5. திருமங்கையாழ்வாருடைய நான்காவது ஐந்தாவது பிரபந்தங்களா கிய திருமடல்களிரண்டும் தனித்தனியே ஒவ்வொரு பாட்டுக்களென்பதை யறிவதற்கு அதிகமான படிப்பு அநபேக்ஷிதம்; திருவெழுகூற்றிருக்கை ஒரே பாட்டு என்பதில் எப்படி ஒருவர்க்கும் விவாதமில்லையோ அப்படியே திருமடலும் ஒரேபாட்டு என்பதிலும் யார்க்கும் விவாதலேசமுமிருக்க ப்ரஸக்தி

யில்லை. *காரார் வரைக்கொங்கை* என்று தொடங்கி *வாரார் பூம்பெண்ணை மடல்* என்று தலைக்கட்டுமளவும் ரகரவெதுகை யொன்றேயிட்டு அமைத்த சிறிய திருமடலையும், *மன்னிய பல்பொறி சேர்* என்று தொடங்கி *மன்னிய பூம்பெண்ணை மடல்* என்று தலைக்கட்டுமளவும் னகரவெதுகை யொன்றே யிட்டு அமைத்த பெரியதிருமடலையும் பலபாட்டுக்களாகப் பிரித்தவர் ஆசார்ய பீடஸ்தராக ஒருவருமில்லை. நாற்சீர்கொண்ட மூன்றடிகளும், முச்சீர்கொண்ட ஈற்றடியுமாக முடிவது வெண்பா; இரண்டடியால் வருவது குறள்வெண்பா; மூன்றடியால் வருவது சிந்தியல் வெண்பா; ஐந்தடி முதல் பன்னிரண்டடி யளவும் வருவது பஃறொடை வெண்பா; பன்னிரண்டடிக்கு மேற்படின் கலி வெண்பா—என்றிங்ஙனே யாப்பிலக்கண நூல்களில் கூறப்பட்டுள்ளதை நாம் நமது திவ்யார்த்த தீபிகையுரையில் மிகவிரிவாக விளக்கியிருக்கின்றோம். சங்கத்துச் சான்றோரியற்றிய பன்னிருபாட்டிய லென்னுமிலக்கண நூலில் இனவியலில் மடலிலக்கணஞ் சொன்னவிடத்து "இவ்வாறு வந்தன மங்கை யர் கோனருளிச்செய்த பெரியதிருமடல் சிறியதிருமடல் என்பன" என்று விவரணம் காட்டியிருக்கின்றார்கள். "ஆகவே திருமடல்களைப் பல பாட்டுக் களாகப் பிரித்தல் இலக்கண முறைமைக்கு எவ்வகையானும் இணங்காது" என்று 45 ஆண்டுகட்கு முன்னமே யெழுதி முடித்திருக்கின்றோம். பிரயந்த சாரத்தினுட்புகுந்து நாம் ஆராய்ச்சி செய்ய அவகாசம் பெறாத காலத்தில் நாம் எழுதியிருந்தவற்றை யெடுத்துக்காட்டி வாதிப்பவர்கள் விவேகிகளல்லர். முதன்முதலாக நாம் திருமடல் திவ்யார்த்ததீபிகை யெழுதி வெளியிட்டது 1927-ஆம் ஆண்டில், அது இற்றைக்கு 33 வருடமாகிறது. அப்போது பிரபந்தசாரம் தேசிகனுடையது-என்று நவீனர்கள் சொல்லிக்கொண்டிருந்த தில் அநுபபத்தி தோன்றப் பெறுமையினாலுண்டான நம்பிக்கையினால் திரு மடல்களைத் தேசிகன் பல பாசுரங்களாகப் பிரித்திருக்கிறாரென்று உதாஹரித் தோம். இரண்டு மூன்று வருடங்களுக்கு முன்பு சிறிது ஆராய்ச்சி செய்ய ப்ரஸக்தியேற்பட்டதனால் 'இது தேசிகனுடைய க்ருதியன்று' என்றும், 'நவீனர்கள் திவ்யப்ரபந்த கோஷ்டிகளில் கலந்து சிலபல சேஷ்டைகள் செய்ய ஆரம்பித்தபோது கல்பனைகள் செய்தவற்றில் இதுவும் ஒன்று' என்றும் நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கலாயிற்று. அப்போது நம்முடைய திருமடல் திவ்யார்த்ததீபிகை மறுபதிப்புச் செய்யத்தொடங்கியிருந்ததனால் அதில் பிரபந்த்ஸாரம் தேசிகக்ருதியன்றென்பதை ஸம்க்ஷேபமாகத் தெரி வித்திருக்கிறோம். அதாவது, 1927-ல் அச்சிட்ட திருமடல் தீபிகை முன்னுரை யில் (பக்கம் 12-ல்) வேதாந்த தேசிகன் திருமடல்களைப் பலபாட்டுக்களாகப் பிரித்ததாய் எழுதினதை நீக்கி 1957-ஆம் வருஷத்து மறுபதிப்பில் (பக்கம் 22-ல்) பிரபந்தசாரகாரர் என்றே இரண்டிடங்களில் திருத்தி வெளியிட்டுள்ளோம். அப்போது அங்கு விவரித்தெழுத ஆவச்யகதை தோன்றவில்லை. இன்னமும் ஆராய்ச்சி செய்வோமென்கிற எண்ணமே கொண்டிருந்தோம். மணவாள மாமுனிகளீறாகவுள்ள பூருவாசாரியர்களில் ஒருவர்கூடத் திருமடல்களைப் பல பாட்டாகப் பிரித்தது கிடையாது. .... .... .... (5)

(ப்ர.) 5. திருமடல் விஷயத்தில் இன்னமும் விரிவாக எழுத என்ன இருக்கிறது. இதைப் பற்றி மறுப்பெழுதின இருவருடைய வார்த்தைகள் நிச்சேஷமாகக் கண்டிக்கப்பட்டிருப்பதை மேலே பாரிஜாதாபஹரணத்திலும் ஸாரஸ்வாதிநி ப்ரஹரணத்திலும் பரக்கக் காண்பது. பிரபந்தசாரத்தின் பதினேழாம்பாட்டு மிகவும் அஸம்பத்தமென்பதும் முடிந்து போனதே. ஆகவே, பிரபந்தசாரம் தேசிக க்ருதியன்றென்பதைத் திடமாகக் கொள்வர் விவேகிகள். *

பிரபந்தசாரதத்வப்ரதிஷ்டா முற்றிற்று.

---

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீரங்கநாதோ ஜயது ஸ்ரீரங்கஸ்ரீச்ச வர்த்ததாம்.

# ஸ்ரீரங்கநாதனும் யுகாதி யுத்ஸவமும்.

பங்குனித் திங்களில் சுக்லப்ரதமையன்று யுகாதியென்றும் ஸம்வத்ஸராதி யென்றும் வழங்குவது ஸுப்ரஸித்தம். அந்த நன்னுளில் திருவரங்கம் பெரிய கோயிலில் ஆழ்வாராசாரியர்களெல்லார்க்கும் மார்கழித் திருவத்யயன மஹோத்ஸ வத்திற்போல் ஸ்ரீரங்கநாத மங்களாசாஸனம் பெறுவிப்பது அவ்விடத்து வழக்கம். அங்கு ஸன்னிதியிலுள்ள வேதாந்தவாசிரியர்க்கும் 150 வருஷங்களுக்கு முன்பு இது நடந்து கொண்டிருந்தது. அவர் அணிந்துகொண்டிருந்த தென்கலைத் திருமண் காப்பை மாற்றி வடகலைத் திருமணைப் போட்டு அதற்காக ஆயிரம் ரூபா அபராதம் செலுத்தி சென்னை ஹைகோர்ட்டு வரையில் ஊர்ஜிதமான காலத்திலிருந்து அந்த வேதாந்தாசார்ய விக்ரஹத்திற்கு வெளிப்புறப்பாடு அறவே நின்றுவிட்ட தென்பது உலகமறிந்தது. அந்தப்புறப்பாட்டை எப்படியாவது நடத்திவைக்கவேணுமென்று நேற்று மார்கழிமாதத் திருவத்யயன மஹோத்ஸவத்தில் சிலர் பிரபல ப்ரயத்தனங் கள் செய்தும் அது நடைபெறவில்லை யென்பதும் ப்ரஸித்தமானதே. நேற்று நடந்த யுகாதி மஹோத்ஸவத்திலாவது அதை நடத்திவைக்க வேணுமென்று மீண்டும் விசேஷ ப்ரயத்னங்கள் நடந்தன. இப்போதும் முயற்சிகள் பலிக்கவில்லை. இதற்கு ப்ரதானகாரணம் ஸத்தர்சநதுரந்தரனுன ஸ்ரீரங்கநாதனுடைய திருவுள்ளமொன்றே யன்றி வேறென்றுமன்று.

நடந்த ப்ரயத்னத்தின் ப்ரக்ரியை எப்படிப்பட்ட தென்றுல், வேதாந்தவாரி யரை இப்போது அபிமானிக்குமவர்களின் உத்தேசப்படி வடகலை நாமமிட்டு அவர்க்கு வெளிப்புறப்பாடு செய்ய அதிகாரிகளுக்கு விருப்பமில்லை; புராதன வழக்கப்படிக்கும் ராஜகீய சாஸனப்படிக்கும் தென்கலைத் திருமண்காப்பிட்டுப் புறப்பாடு செய்வது அபிமானிகளுக்கு ஸுதராம் அநபிமதமாய் விட்டது. இரண்டு புண்ட்ரமுமில்லாமல் எம்பெருமான்களுக்குப் போலே திலகமிட்டுப் புறப்பாடு செய்வ தென்று ப்ரயத்னங்கள் நடந்தன. ஆசார்யர்களுக்குத் திருமண்காப்புதவிரத் திலகமிடுவ தென்பது அஸங்கத மென்று நிர்வாஹகர்கள் முடித்துவிட்டார்கள். இது நிற்க.

இந்த சர்ச்சை நாடு நகரங்களில் பிரபலமாக உலாவி வருகையில் பலபேர் கள் சொல்லிக்கொள்வது என்னவென்றுல் "வடகலை ஸம்பிரதாயத்திற்கு குருவான தேசிகருக்கு வடகலைத் திருமண் போடக்கூடாதென்பதும் தென்கலைத் திருமண்தான் போடவேணுமென்பதும், தனியன் முதலான விஷயங்களிலும் கட்டுப்பாடு விரும்பு வதும் எவ்வளவு அநியாயமானது! அவரவர்கள் ஸம்பிரதாயப்படியே நடத்திக் கொள்ள இசைய வேண்டாமா?" என்கிற பேச்சு அதிகமாக அடிபட்டு வருகிறது. நீதிமன்றங்களில் அதிகாரிகளாயிருப்பவர்களிடத்திலும் சென்று அவர்களுக்கு புத்தி பேதம் விளையும்படி இத்தகைய பேச்சுக்களைப் பரவச்செய்ய முயலுகிருர்கள். உண்மையுணராத ஸாமான்ய ஜனங்கள் "வாஸ்தவமாக இது அநீதியான செய்கையல்லவா" என்று நினைக்கவும் சொல்லவும் நேர்ந்து விடும். இந்நிலைமையில் உலகுக்கு உண்மையை யுணர்த்த வேண்டியது மிக அவசியமாகின்றது. வேதாந்த வாசிரியர் வடகலை குருவல்ல வென்பதையும் தென்கலை யாசிரியர்களில் அவரும் ஒருவரே யென்பதையும் க்ராந்திக ரீதியிலும் அனேக திவ்யதேச பரிஸ்திதியைக் காட்டியும் நாம் பலகால் மூதலித்திருக்கிறேம். நீதிபதிகளுக்கும் இவ்வுண்மை நன்கு விளங்குமாறு வேதாந்தவாசிரியரின் அவதாரஸ்தலமான விளக்கொளி ஸன்னிதி வ்யவஹாரஸம்பந்தமான ஹைகோர்ட் ஜட்ஜ்மெண்டு ஒன்று வெளியிடப்படுகிறது.

இது தென்கலை வடகலைக் கக்ஷியைச் சேர்ந்த வியவஹாரமன்று. விளக்கொளி ஸன்னிதி தர்மகர்த்தாக்களான கைக்கிளையர்களுக்கும் வடகலை தாதாசாரியர்களுக்கும் நடந்த வியவஹாரம். மூன்று கோர்ட்டுகளில் நடந்து முடிவுபெற்றது. மஹா மேதாவியென்று உலகம் போற்ற நின்று சென்னை ஹைகோர்ட்டில் சிலா விக்ரஹ ப்ரதிஷ்டை பெற்று விளங்குகின்ற கனம் முத்துஸாமி ஐயரவர்கள் முடிவாக ஜட்ஜ் மெண்டு எழுதினவர். அந்த ஜட்ஜ்மெண்டின் அஸலுக்குச் சரியான காபி அப் படியே அச்சிடப்படுகிறது. அனைவர்க்கும் தெரியும்படி தமிழ்மொழிபெயர்ப்பும் உடன் சேர்க்கப்பட்டுள்ளது. இதிலிருந்து அவதாரஸ்தல தேசிகன் பிராசீனமாகத் தென் கலையே யென்பது நன்கு விளங்குவதைக் காண்க.

# In the High Court of Judicature at Madras.

## Thursday the 19th day of April 1883.

PRESENT:

THE HON'BLE. MR. JUSTICE INNES.
THE HON'BLE MR. JUSTICE MUTHUSAMI IYER, C.I.E.

**SECOND APPEAL No. 411 OF 1881.**

*(Civil Miscellaneous Petition No. 23 of 1882.)*

1. Ellappa Mudali
2. Arumuga Mudali
3. Peruma Mudali

..............................

..............................

10. Chappani Mudali

} *Appellants (1st to 4th and 6th to 11th Plaintiffs).*

1. Sri Kristna Tatachariar
2 Srinivasavarada Tatachariar

..............................

..............................

7. P. Tata Desika Tatachariar

} *Respondents (6th, 10th, 12th, 17th, 19th and 30th Defendants.)*

Second appeal against the Decrees of the District Court of Chingleput in Appeal Suits Nos. 182 and 97 of 1879, reversing the decree of the Court of the District Munsiff of Tiruvallur in Original Suit No. 297 of 1878.

The Second Appeal came for hearing on Wednesday. the 1st day of March 1882, and stood o er for consideration till Tuesday, the 11th July 1882, when the Court delivered the following Judgement

"The Plaintiffs of the weaver caste sued to establish their exclusive right to the Trusteeship of the temple of Vedanta Desikar in Conjeevaram.

.................The District Munsiff, V. Sundara Ramaiya who disposed of the case now before us, in a careful, elaborate and very able judgement came to the conclusion that the Plaintiffs were hereditary Trustees and gave them the decree asked for."

"The District Judge has reversed the decree of the District Munsiff, and the case comes now in Second Appeal before the High Court."

.................. . ...............

..................................

"Assuming the hereditary right of the Tatacharis, they must have had it in 1811, but in the suit of that year (Exhibit 32), it was decided that the service was to commence with the Thengalai Mantram. It is in the highest degree improbable that the Tatacharis, if they had the hereditary right of Trusteeship, would have allowed the Thengalais to introduce their ritual. On the other hand assuming the dependence of the smaller temple on the larger, and its subordination consequently to the Kakkalaya trustees of the larger temple, the introduction of a Thengalai ritual is not unintelligible."

We think the following issues should be sent for determination on the evidence already given :—

'Whether the temple of Vedanta Desikar is subordinate to the temple of Dipaprakasaswami ?'

'Whether, at the date of the agreement Q and its counterpart Aw, the plaintiffs were the trustees of the temple of Vedanta Desikar ?'

..................................

We remit the case for the trial of these issues directing a return to be made in two months from the date of the receipt of this order when 14 days will be allowed for filing objections."

In compliance with the above order the District Judge submitted the following.

## FINDING

1. "The following issues have been referred by the High Court for determination by this Court :—

1st.—"Whether the temple of Vedanta Desikar is subordinate to the temple of Dipaprakasaswami ?

2nd.—"Whether, at the date of the agreement Q and its connterpart Aw, the plaintiffs were the trustees of the temple of Vedanta Desikar ?

## 1ST ISSUE

6. "3rd.—The Patram is the same in both This obviously proves nothing. The same Patram is recited in all the 18 temples of Vishnu in Conjeevaram. The Patram question was decided on the suit of 1811 in favour of the Thengalais not because theirs was the Patram of the adjacent Dipaprakasaswami; but because it was the Patram prevailing in all the other Vishnu Pagodas in Conjeevaram."

..................................

8. "5th—It is reputed to be the Vahanamantapam of Dipapra kasaswami turned into a temple. One witness (Plaintiff's 7th) deposed that it had the appearance of a Vahana Mantapam and another (the 13th) that he had seen in some circar account that it was a Vahana Mantapam. The account in question, giving full weight to it, can be nothing more than a mere record of the fact that such a tradition exists. It refers to a time separated from the present by an interval of *probably* several centuries. There is, curiously enough, another tradition inconsistant with this one to the effect that the Desikar's temple was built on the spot where he was born, or that the house where he lived (six centuries ago) was converted into a temple where his idol was set up to be worshipped. The judgements of our Courts regarding this temple usually start with this tradition as if it were an unquestioned fact—vide the judgement in the great Patram suit of 1811, and that of the District Munsiff, Virasami Iyer in Original Suit 637 of 1876, and this judgement under appeal paragraph 18. If this tradition is accepted, it would go far towards establishing the independence of Desikar's temple. But I do not believe there is any foundation for either the one tradition or the other. I will revert hereafter to the hearing of the Tarapadi account and the Pymash on the question at issue."

14. "On the strength of the admission of the Tatacharis in 1861 and 1865 and of the evidence afforded by the Tarapadi and Pymash accounts, my finding on the 1st issue is that the temple of Vedanta Desikar is subordinate to the temple of Dipaprakasaswami."

## 2ND ISSUE

15. "The subordination of Desikar's temple to Dipaprakasaswami's being established there is no great difficulty in arriving at the conclusion that the trustees of the latter must also be the trustees of the former...... It is probable enough that the reason why no evidence is forthcoming as to the trusteeship prior to 1861 is that it was never a question of any

practical importance in the days when the Government took upon themselves a general control over the religious institutions of the country."

16. 'My finding on the 2nd issue is that at the date of Q and its counterpart Aw: the plaintiffs were the trustees of the temple of Vedanta Desikar."

This second appeal came again for hearing on Thursday the 14th December 1882, on return to the order of the 11th July 1882, and stood over for consideration till this day, when the Court delivered the following final

## JUDGEMENT

The matter in contest in this second appeal is the trusteeship of Vedanta Desikar's temple at Vilakudi a suburb of Conjeevaram. Vilakudi is reputed to have been the birth place of Vedanta Desikar, and the temple which is dedicated to him adjoins and touches that of Dipaprakasaswami, which is one of the names under which the image of Vishnu is worshipped by all classes of Vaishnavas as that of the supreme Being. The Kakkalars or weavers residing in Vilakudi are sivhites by religion, but they do not appear to have any sectarian prejudice against the worship of Vishnu.

The history of litigation regarding this temple, which commenced in 1811, discloses four rival claimants as regards its trusteeship.

.......................................................................................................

And in addition to them, the Thengalais claimed the trusteeship. But their claim was disallowed in Suits 307 and 310 of 1865, and as their right is not one of the rights on which an adjudication is desired in this suit, it is not necessary to refer to it further for the purpose of this Second Appeal. Among the Vadagalais, the Tatacharis represent the descendants of one Tata Desikar who was the founder of a very learned and influential family at Conjeevaram. The Suit from which this Second Appeal arises was originally instituted by eleven defendants, of whom the first five were weavers and the other six were Tatacharis; and the plaintiffs prayed that their right of trusteeship be declared and that an injunction be issued restraining all the Tatacharis from interfering with the exercise of such right.

...............................

As to the first of the two issues, we sent for determination, the District Judge found on the strength of the Tarapadi and Pymash accounts and of the admission of Tatacharis in 1861 and 1865 that the

temple of Vedanta Desikar was subordinate to that of Dipaprakasaswami. He found also the 2nd issue in plaintiff's favour. Against this finding, the Respondents have filed a memorandum of objections We do not think that the objections taken to the findings returned by the District Court are well founded. The first five objections have reference to the weight to be attached to the Tarapadi and Pymash accounts.........Having regard to the nature of the Tarapadi account as a general survey, we think that the inference drawn by the Judge is fair and reasonable, and concur in his opinion that the difference in extent is not of importance

As to the objections 6 and 7......... ..in 1861, it was the present 8th defendant and the 15th defendant's father who acknowledged that Desikar's temple was attached to Dipaprakasaswami's temple (Ex. Ac.), but they then only sued* to compel the Archakar to put on the idol the Vadagalai mark or namam in their right (which is common to them and other Tatacharis) as owners of the first Tirtam; and there was no motive for referring to the dependence of Desikar's temple if it were not true. There is no reliable evidence in their favour prior to 1861 except what is alleged to have taken place in the suit of 1811 and in 1828. The suit of 1811 related to the "Patram" or hymn with which prayers were to be commenced in the temple and it was eventually decided that the hymn that ought to be sung was, according to THE USAGE of the institution, "Sri Sila Dayapatram" which is a verse composed in honour of Manavala Mahamuni. Is it likely that, if it were not true as alleged in that suit by the Thengalais that the Kakkalayars had been managers, and if, on the contrary Tatacharis had been hereditary Dharmakarthas the Thengalai "Patram" would have been in use?...... ..

The erection of a new temple in 1828 does not show anything beyond this, that Thirumalai Aiyangar, who incurred the expense desired to build a good temple in honour of Vedanta Desikar. The history of litigation subsequent to 1864 discloses a series of manoeuvres on the part of Tatacharis first to curtail and eventually to destroy the right of the Kakkalars, and it does not appear that Tatacharis bethought themselves of their hereditary right until 1876. Upon these grounds and for the reasons mentioned in our former judgement, we have no hesitation in accepting the finding of the District Judge.

*This suit was dismissed.

# ஹைகோர்ட்டு - மதரூஸ்

## 19—4—1883

**ஜட்ஜ்கள் : கனம். இன்னிஸ்துரையும் கனம். முத்துஸ்வாமி ஐயர், C.I.E. அவர்களும்**

ஸெகண்டபபீல் நெ. 411 ஞூ 1881.

ஸிவில் மிஸலேனியஸ் பெடிஷன் நெ. 23 அப்பீல் 1882.

(1) எல்லப்ப முதலி
(2) ஆறுமுக முதலி
(3) பெருமாள் முதலி
..........................
..........................
(10) சப்பாணி முதலி
} அப்பீல் வாதிகள்

(1) ஸ்ரீக்ருஷ்ணதாதாசாரியர்
(2) ஸ்ரீநிவாஸவரததாதாசாரியர்
..........................
..........................
(7) பி. தாததேசிகதாதாசாரியர்
} பிரதிவாதிகள்

1—3—1882ல் ஸெகண்டு அப்பீல் விசாரணைக்கு வந்து 11—7—1882ல் மேல் கண்ட தீர்ப்பு பண்ணப்பட்டது.

" கைக்கோ ஜாதியைச் சேர்ந்த வாதிகள் காஞ்சீபுரம் வேதாந்த தேசிகர் கோவிலில் ப்ரத்யேக தர்மகர்த்த உரிமையை அனுபவிக்க ஸூட் கொண்டு வந்தார்கள்.

" இந்த கேஸை முன்சீப் கோர்ட்டில் தீர்ப்பு செய்த டி. மு. வி. ஸுந்தர ராமய்யர் கவனத்துடனும் விவரமாகவும் எழுதின திறமுள்ள ஜட்ஜ்மெண்டில் வாதிகள் பரம்பரை ட்ரஸ்டிகள் என்று முடிவுக்கு வந்து அந்த ப்ரகாரம் மனு கொடுத்தபடி டிக்ரி கொடுத்தார்.

" டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ் இந்த தீர்ப்பைத் தள்ளிவிட்டதின் பேரில் இப்பொழுது ஸெகண்டு அப்பீலாக ஹைகோர்ட்டுக்கு வந்திருக்கிறது. தாதாசாரியர்களுக்கு பரம்பரை தர்மகர்த்தம் இருந்ததாக வைத்துக்கொண்டால், அந்த தர்மகர்த்தம் 1811ல் இருந்திருக்க வேண்டும். ஆனால் அந்த வருஷத்துக் கேஸில் (எக்ஸ். 32) பூஜை தெங்கலை மந்திரத்தால் தொடங்கப்பட வேண்டும் என்று தீர்ப்பு செய்யப்பட்டிருக் கிறது. அப்படி அவர்களுக்கு தர்மகர்த்தம் இருந்திருக்கிற பக்ஷத்தில் தென்கலை யார் தென்கலை மந்திரத்தைச் சொல்லும்படி பார்த்திருப்பார்கள் என்பது நம்ப முடியாமலிருக்கிறது. மேலும் தேசிகர் கோவில் கைக்களயருடைய தீபப்ரகாசர் கோவிலைச் சேர்ந்தது என்று வைத்துக் கொண்டால், தென்கலை மந்திரம் சொல் லப்படுவதற்கு அது ஹேதுவாகிறது. கீழ்கண்ட இஷ்யூக்களை விசாரித்து இரண்டு

மாஸத்துக்குள் திரும்பும்படி ரிமிட் பண்ணுகிறோம்". இந்த ஆர்டர் ப்ரகாரம் டிஸ்டிரிக்ட் ஜட்ஜ் மேல் கண்ட முடிவுகளை ஹைகோர்ட்டுக்கு அனுப்பிவைத்தார்.

"இஷ்யு 1. வேதாந்த தேசிகர் கோவில் தீப ப்ரகாச கோவிலைச் சேர்ந்ததா?

இஷ்யு 2. அக்ரிமெண்டு தேதியில் வாதிகள் வேதாந்த தேசிகர் கோவிலுக்கு ட்ரஸ்டிகளாயிருந்தார்களா?

இஷ்யு 1.

....................................

6. டி. மு. வின் மூன்ருவது ஆர்க்யுமெண்டு-ப்ரபந்த பாத்திரம் இரண்டு கோவிலுக்கும் ஒன்ருய் இருந்தது என்று; இதனுல் ஒன்றும் தேறிவிடாது. காஞ்சியிலிருக்கும் 18 விஷ்ணு கோவில்களிலும் இந்த ஒரு பாத்திரமே சொல்லப் படுகிறது. 1811ல் நடந்த ஸூட்டில் தென்கலை பாத்திரம் தான் என்று பண்ணப் பட்ட தீர்ப்பு பக்கத்தில் இருக்கும் தீபப்ரகாச ஸ்வாமி கோவிலில் அந்த பாத்திரம் என்ற காரணத்தாலன்று. காஞ்சியிலிருக்கும் எல்லா விஷ்ணு கோவில்களிலும் அந்த பாத்திரமே என்ற காரணத்தினுல் அந்த தீர்ப்பு செய்யப்பட்டது.

8. டி. மு. வின் ஐந்தாவது ஆர்க்யுமெண்டு—தீபப்ரகாச ஸ்வாமி கோவிலின் வாஹன மண்டபமே தேசிகர் கோவிலாக மாற்றப்பட்டது என்பது ப்ரஸித்தம் என்று.

ஒரு ஸாக்ஷி அந்த கோவிலைப் பார்த்தால் வாஹனமண்டபம் போலிருக்கிறது என்ருர். மற்றெருவர் ஒரு ஸர்க்கார் ரிகார்டில் அதை வாஹந மண்டபமாகக் குறிக்கப் பட்டிருப்பதை நான் பார்த்தேன் என்ருர். இந்த ஸர்க்கார் ரிகார்டை நம்பினுலும் இந்த மாதிரி ஒரு பரம்பரா வார்த்தை வழங்குகிறது என்பதை மாத்திரம் தெரிவிக்க எழுதப்பட்டதாக இருக்க வேண்டும். அதில் குறிக்கப்பட்ட காலம் பல நூற்ருண்டு களுக்கு முன்னதாக வென்று ஏற்படுகிறது. ஆனுல் ஒரு ஆச்சர்யம்; இந்த பரம்பரா வார்த்தைக்கு நேர் முரண்பாடாக மற்றெரு பரம்பரா வார்த்தை வழங்கி வருகிறது. அதாவது தேசிகர் கோவில் அவர் பிறந்த இடத்திலே கட்டப்பட்டது என்றும், அல்லது அவர் ஆறு நூற்ருண்டுகளுக்கு முன் வசித்திருந்த வீடே கோவிலாக மாற்றப் பட்டு அதில் அவருடைய விக்ரஹத்தை நாட்டி தொழப்பட்ட தென்றும். நம் கோர்ட்டு களில் இந்த கோவில் விஷயமாக நடந்த தீர்ப்புகள் சாதாரணமாக இந்த பரம்பரா வார்த்தையை நிராக்ஷேபமானது போன்ற விஷயமாகக் கொண்டே தொடங்குகின்றன. 1811ல் பாத்ர விஷயமான பெரிய ஸூட்டின் ஜட்ஜ்மெண்டிலும், 1876ல் ஒரிஜினல் ஸூட் 657ல் டி. மு. வீராஸாமி ஐயர் ஜட்ஜ்மெண்டிலும், இந்த அப்பீலுக்கு வந்த ஜட்ஜ்மெண்டின் 18-வது பாராவிலும் இதைக் காணலாம். இந்த பரம்பரா வார்த் தையை ஒத்துக்கொண்டால் தேசிகர் கோவிலானது தீபப்ரகாச கோவிலுக்கு ஆதீன மல்லாதது என்று தீர்மானித்து விடலாம். ஆனுல் இந்த இரண்டு பரம்பரை வார்த்தைகள் ஒன்றுக்கும் ஒரு ஆதாரமும் இருப்பதாக எனக்கு நம்பிக்கை ஏற்பட வில்லை. ஆகையால் தரபடி பைமாஷ் ரிகார்டுகளையே ஆதாரமாக எடுத்துக் கொள்ளுகிறேன்.

14. தாதாசாரிகள் 1861லும் 1865லும் ஒத்துக்கொண்டதின்பேரிலும் தரபடி பைமாஷ் கணக்குகளில் ஏற்பட்ட ஆதாரங்களாலும் முதல் இஷ்யூவின் என்னுடைய

முடிவு என்னவென்றால் - வேதாந்த தேசிகர் கோவில் தீபப்ரகாச கோவிலைச் சேர்ந்ததே என்று.

## இரண்டாவது இஷ்யூ

15. "தீப ப்ரகாச கோவிலுக்கு தேசிகர் கோவில் ஆதீனமானது என்று ஏற்பட்ட பின்பு, முன் சொன்ன கோவிலுக்கு டிரஸ்டிகளாயிருப்பவர்கள் பின் சொன்ன கோவிலுக்கும் டிரஸ்டிகளாக இருக்கவேண்டும் என்ற முடிவுக்கு வர கஷ்டமொன்றுமில்லை. 1861க்கு முன்பு டிரஸ்டிஷிப்பைப் பற்றி ரிகார்டு ஒன்றும் காணுமலிருப்பதற்குக் காரணம் அந்த காலத்தில் கோவில்கள் முதலான மத நிலயங்கள் எல்லாவற்றையும் ஸர்க்கார் நேராக தங்கள் மேல் பார்வையில் வைத்துக் கொண்டதுவே

16. இரண்டாவது இஷ்யுவில் என்னுடைய முடிவு வாதிகள் குறித்த தேதியில் வேதாந்த தேசிகர் கோவிலுக்கு டிரஸ்டிகளாக இருந்தார்கள் என்பதுவே"

இரண்டாவது அப்பீல் 14—12—1882ல் விசாரணைக்கு வந்து இன்றுமேல் கண்ட தீர்ப்பு செய்யப்பட்டது.

## தீர்ப்பு

இந்த இரண்டாவது அப்பீலில் வாதத்துக்கு விஷயம் தீப ப்ரகாசர் கோவிலிலிருக்கும் வேதாந்த தேசிகர் கோவிலின் டிரஸ்டிஷிப்பைப் பற்றி. தீபப்ரகாசர் வேதாந்த தேசிகர் பிறந்த இடமாகப் பேர் பெற்றது; அங்கு அவருக்குக் கட்டியிருக்கும் கோவில் தீபப்ரகாசர் கோவிலுக்குப் பக்கத்திலும் அதோடு ஒட்டியும் இருக்கிறது. வைஷ்ணவர்களில் எல்லா வகுப்பினராலும் பரந்தெய்வமென்று தொழப்படுகிற விஷ்ணுவின் ஒரு பெயர் தீபப்ரகாச ஸ்வாமி என்பது. இங்கே வசிக்கும் கைக்கோயர் சிவ மதத்தைச் சேர்ந்தவர்; ஆகிலும் விஷ்ணுவையும் தொழுகிறவர்களே.

இந்தக் கோவிலைப் பற்றிய விவாதம் 1811ல் தொடங்கி தர்மகர்த்த பாத்யதைக்கு நாலுபேர் போட்டியாகக் கிளம்பினார்கள்.........................................
.........................................................................அதற்குமேல் தென் கலையார் தங்களுக்கு தர்மகர்த்தமும் உண்டென்றார்கள். ஆனால் ஸூட் 307, 310 of 1865 களில் அவர்களின் உரிமை அங்கீகரிக்கப்படவில்லை. இப்பொழுதும் அதைப்பற்றி அவர்கள் கேட்காததால் அது இங்கே இஷ்யு ஆகவில்லை. வடகலையாருக்குள் தாதாசாரியர் என்ற வம்சத்தார் காஞ்சியில் செல்வாக்குள்ளவர்களாக இருந்தார்கள். இப்பொழுது இரண்டாவது அப்பீலாக வந்திருக்கும் ஸூட் முதலில் 11 கைக்கோயர்களால் 11 பிரதிவாதிகள் மேல் போடப்பட்டது. அந்த 11 பிரதிவாதிகளில் முதல் 5 பேர் கைக்கோயரும் மற்ற 6 பேர் தாதாசாரி வம்சத்தினரும். இதில் வாதிகள் கேஸ் தங்களுக்கு ப்ரத்யேக டிரஸ்டிஷிப் என்றும் தங்கள் உரிமையை செலுத்துவதில் தாதாசாரிகளின் தொந்திரவு இருக்கக்கூடாது என்றும் தீர்ப்பு செய்யவேண்டுமென்று.........................................................................

நாம் டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜுக்கு ரிமிட் பண்ணின இரண்டு இஷ்யுவில்—முதல் இஷ்யுவில் டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ் தரபடி பைமைஷ் கணக்குகளின்

ஆதாரத்தின்பேரில், தாதாசாரிகள் 1861, 1865 களில் வேதாந்த தேசிகர் கோவில் தீபப்ரகாச கோவிலைச் சேர்ந்ததே என்று ஒத்துக்கொண்ட ஸ்டேட்மெண்டுகள் பேரிலும், அப்படியே முடிவுக்கு வந்திருக்கிருர். அந்த முடிவின் பேரில் ரெஸ்பாண் டண்டுகள் ஒரு அப்ஜக்ஷன் மெமோ தாக்கல் பண்ணி யிருக்கிருர்கள். அதில் முதல் 5 அப்ஜக்ஷன்கள் நம்மால் சோதிக்கப்பட்டு, தள்ளப்பட்டு டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜின் முடிவு அங்கீகரிக்கப்படுகிறது.

6, 7, அப்ஜக்ஷன்கள் விஷயமாக சர்ச்சை பண்ணுல் 1861ல் 8 வது பிரதி வாதியும், 15-வது பிரதிவாதியின் தகப்பனும் தேசிகர் கோவில் தீபப்ரகாசர் கோவிலைச் சேர்ந்தது என்று ஒத்துக் கொண்டார்கள்; ஆனுல் அவர்கள் தாதாசாரி ஒதாவில் தங்களுக்கு இருக்கும் முதல் தீர்த்தம் உரிமையைக் கொண்டு தேசிகர் விக்ரஹத்துக்கு வடகலை திருமண் போடவேண்டுமென்று அர்ச்சகருக்கு நிர்ப்பந்த உத்திரவு பண்ணவேண்டுமென்று ஸூட் கொண்டு வந்தார்கள்.* அந்த ஸந்தர்ப் பத்தில், உண்மையில்லாதிருந்தால், தேசிகர் கோவில் தீபப்ரகாச கோவிலுக்கு ஆதீனமானது என்று ஒத்துக்கொள்ள அவர்களுக்கு ஒரு நிர்ப்பந்தமுமில்லை..........

தாதாசாரிகளுக்கு டிரஸ்டிஷிப்பைப்பற்றி 1861க்கு முன் ஒரு ரிகார்டும் இருப் பதாகத் தெரியவில்லை; இதின் ஸம்பந்தமாக 1811லும் 1828லும் நடந்த விவஹாரங் களை குறிக்கிருர்கள். 1811 ஸூட் பாத்ரத்தைப் பற்றினது. பாத்ரமாவது கோவிலில் பூஜைகள் தொடங்கப்படும்போது சொல்லப்படுவது; அந்த விஷயமாகக் கடைசி யாகத் தீர்மானம் பண்ணப்பட்டது என்னவென்ருல், கோவிலில் தொன்று தொட்டு வந்த வழக்கத்தின்படி "ஸ்ரீசைலேச பாத்ரம்" என்ற மணவாள மாமுனியின்பேரில் உள்ள தனியனையே சொல்ல வேண்டுமென்று. ஸூட்டில் தென்கலையார்களின் ஸ்டேட்மெண்டின்படி கைக்கனையரே மேனேஜர்களாக இருந்தார்கள் என்பது உண்மையாயில்லாவிட்டால், தாதாசாரிகள் பரம்பரை தர்மகர்த்தாக்களாக இருந் திருக்கும் பக்ஷத்தில், இந்த தென்கலை பாத்ரம் வழக்கத்தில் வந்திருக்கக்கூடுமா? 1828ல் கோவில் புதிதாக கட்டப்பட்டது என்பதுவும், அதுக்காக செலவு பண்ண திருமலை ஐயங்கார் வேதாந்த தேசிகருக்கு ஒரு நல்ல கோவில் கட்டவேண்டு மென்று இச்சித்தார் என்பதுக்குமேல் ஒன்றும் தேறிவிடாது. 1864க்குப் பின் நடந்த வ்யவஹாரங்களைப் பார்த்தால் கைக்களையர்களுடைய ஆதீனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்து அறவே ஒழித்துவிடவேண்டும் என்ற எண்ணங் கொண்டே தாதாசாரியர்கள் பல விதமான சேஷ்டைகளைப் பண்ணி வந்தார்கள் என்று ஏற்படுகிறது. தவிர, 1876 வரையில் தங்களுக்கு தர்மகர்த்த பாத்யதை கொண்டாடவேண்டுமென்ற எண்ணம் இருந்ததாகத் தெரியவில்லை. இந்தக் கார ணங்களினுலும் நம்முடைய முன் ஜட்ஜ்மெண்டில் கண்ட ஹேதுக்களாலும் டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜின் முடிவை ஒத்துக்கொள்ள எங்களுக்கு ஒருவித தயக்கமுமில்லை.

---

*இந்த ஸூட் டிஸ்மிஸ் செய்யப்பட்டது.

# வேதாந்தவாரியரின் விபவமும் அர்ச்சையும்

பண்டித. ஸ்ரீசைல. கிருஷ்ணமாசாரியர், ஸ்ரீகாஞ்சீ.

## 1. அவதாரிகை.

பரிகஸிதரான வொருவர் தம் பெயரைப் பூர்த்தியாக வெளியிட்டுக்கொண்டு ருஜுவான வழியில் உண்மையான விஷயங்களைப் பிரசுரம் செய்யாதவளவில் நாம் பதில் தெரிவிக்க வேண்டிய அவசியமே கிடையாது. ஆனாலும் உண்மைகளை வெளியிடுவதற்கு அவகாசம் கிடைத்ததென்று கொண்டு ஸாத்விகமான வழியில் ஸாதுவான செய்திகளை ஸப்ரமாணமாக வுணர்த்துகிறோம். 25 நாளாக இதுவரையில் நீங்கள் கிளப்பின விஷயங்களில் ஒன்றுக்காவது எங்கள் வகுப்பில் விடை வெளி வராததுண்டோ? அவற்றில் ஒன்றுக்காவது நீங்கள் மறுவாய் திறந்ததுண்டோ? "எடுத்துக்கொண்ட விஷயங்களை விட்டிட்டு வேறு வீண் வம்புகளைத்தான் நீங்கள் கிளப்பப்போகிறீர்கள்" என்று ஏற்கெனவே தெரிவித்திருந்தது எள்ளளவும் பழுது படாமல் அப்படியே ஒரு தவறான புதிய விஷயத்தைக் கிளப்பியிருக்கிறீர்கள்.

"தேசிகன் எழுந்தருளி யிருந்தகாலத்தில் அவர் தலையிலே படும்படி
செருப்பைக் கட்டித் தொங்கவிட்டவர்கள் தென்கலையார்களே"

என்று அநுவதிக்கவும் அநர்ஹமான தப்புவார்த்தைகளைக் கூசாமல் வெளியிடுகிறீர்கள். "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:. ராம பூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி." என்கிறபடியே ஸ்ரீராமபிரா னெழுந்தருளியிருந்த காலத்தில் உலகமெல்லாம் ராமாத்வைதமாயிருந்தது போல தேசிகன் எழுந்தருளியிருந்த காலத்தில் ஜகத்தெல்லாம் தேசிகாத்வைதமாக இருந்ததென்று வெளியிட்டுக்கொண்டு ஆனந்திக்க பாக்யமற்ற நீங்கள், அந்த மஹாசார்யரோடு உறவு கொண்டாடத் தொடங்கினநாளில் தென்கலையார்களைப் பழிக்க வேணு மென்று கட்டிக்கொண்ட கங்கணத்தை இற்றைக்கும் கழற்றாமல் அவிழ்க்காமல் இருந்துவருகிறீர்கள். இது உங்களுடைய சோசநீயமான நிலைமை.

## 2. ஆசார்யசம்புவின் அநாதரம்.

தேசிகனுடைய வைபவங்களை உள்ளது உள்ளபடி ஆச்சரியமாக எழுதிவைத்த நூல் ஆசார்ய சம்பூ என்பதொன்றே. ஸம்ஸ்க்ருத வாக்குக்களில் அதைப்போன்ற வாக்கு துர்லப மென்று ஸம்ஸ்க்ருத வித்வான்கள் கொண்டாடுகிறார்கள். அந்த நூலில் பிரவேசித்து அநுப விக்க உங்களுக்கு பாக்யமில்லாமல் போயிற்று. அதில் தென்னாசார்யர்களைப் பற்றின நிந்தை அடியோடு இல்லாமையால் அந்த நூல் நமக்கு வேண்டாவென்று அதை ஒதுக்கியும் விட்டீர் கள். தென்னாசார்ய நிந்தாமயமாக ஒரு வைபவநூலைத் தமிழில் புதிதாக எழுதி இது ப்ரஹ்ம தந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமி ஸாதித்ததென்று வெளியிட்டீர்கள். அதில் உள்ள அஸம்பத்தங்க ளைக் கண்டு திருப்புட்குழி ஸ்வாமி, தன்றி பட்டப்பா ஸ்வாமி, சாமா. திருமலை தாதாசார், சேட்லூர் நரஸிம்ஹாசார் ஆக நால்வர் அது நவீந கல்பிதமென்று எழுதிவைத்துப் போனார்கள். (1) தேசிகன் தலையில் இடிக்கும்படி தென்கலையார்கள் செருப்பைக் கட்டிவைத்தார்கள்; (2) தேசிகன் செய்யும் ச்ராத்தம் கெடும்படி நிமந்த்ரண ஸ்வாமிகளைத் தலைமறையச் செய்

தார்கள்; (3) ஏகாதசியன்று பொங்கலைக் கொணர்ந்து கொடுத்து உண்ணும்படி நிர்ப்பந்தித் தார்கள்; (4) திருமாளிகை வாசலிலே யெழுந்தருளியிருந்து க்ரந்தாவலோகனம் செய்து கொண்டிருக்கையில் திருவடிகளைப் பிடித்திழுத்துத் தெருவிலே விழவிட்டார்கள். என்றிப் படிப்பட்ட அசட்டுக் கந்தகளையும் அம்மையார் புராணங்களையும் எழுதிவைத்து இதுதான் தேசிக வைபவமென்று குலாவி வருகிறீர்கள். "கர்மாவலம்பகா: கேசித் கேசித் ஜ்ஞாநாவலம் பகா:, வயம் து ஹரிதாஸாநாம் பாதரக்ஷாவலம்பகா:" என்று ஸ்வரூப ப்ராப்தமான நைச்சி யத்தை ஸ்வாமி அநுஸந்தித்திருக்க, அதற்கு ஒரு அவதூறான கதையைக் கற்பனை செய்தீர்கள். ச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்காக வரிக்கப்படுமவர்கள் ஆப்தபந்துக்களா யிருப்பார்களே தவிர வழிப்போக்கர்களா யிருக்கமாட்டார்களே. இதிலென்ன ஸம்சயம். அப்படி ஆப்த பந்துக்க ளானவர்கள் நிமந்த்ரணத்திற்கு இசைந்திருந்து ஸமயத்தில் வாராதே வஞ்சித்துவிட்டார்க ளென்று கதை யெழுதினால் இது மஹா வைபவநிதியான ஸ்வாமி விஷயத்திலே பொருந்தமா வென்று கூட ஆராயமாட்டாமல் ஒரு அவிவேகி 1860ல் எழுதிவைத்ததை 1960-ஆம் வருஷத்திலும் புதுப்பித்து வைக்கின்ற அசடுகளை யாரே திருத்தவல்லார்? இக்காலத்து தூர்த்தர்கள்கூட செய்யமாட்டாத இத்தகைய குறும்புகளை நல்லடிக்காலமான அக்காலத்திலே சிலர் செய்யும்படி தேசிகன் யார்தலையிலே என்ன பாறையைப் புரட்டினாரோ தெரியவில்லையே. அஸூயை கொண்டவர்கள் எக்காலத்திலு மிருக்கலாம்; அவர்களின் கலஹத்தினால் நேர்ந்த தென்றால், கலஹவார்த்தைக் கிணங்கி ஒருவர் வஞ்சித்துவிட்டாலும் மூவருமே வஞ்சித்து விட்டார்களென்று கதை யெழுதிவைப்பது என்ன பேதைமையோ! இக் கதையை அப்பய தீக்ஷிதர் சரித்திரத்தில் எழுதிவைத்திருக்கிறார்கள். அதை நீங்கள் காப்பியடித்திருக்கிறீர்கள்.

### 3. ஸ்ரீ பரகால மடத்தார் எழுதியுள்ள தேசிக ப்ரதிஷ்டைகள்.

ஒரு திவ்ய தேசத்திலும் நீங்கள் பிரவேசியாமலே யிருந்தகாலத்தில் தேசிகனை விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து உத்ஸவாதிகளும் நடத்திவருகின்ற தென்னாசார்யர்களை, பஹிர்ப்பூமி களிலே தேசிக விக்ரஹ ப்ரதிஷ்டை செய்துவரும் நீங்கள் பழிப்பதுதவிர வேறு என்ன செய்யமுடியும்? மைஸூரில் இப்போதெழுந்தருளியிருக்கிற ஸ்ரீபரகால ஸ்வாமிக்கு ஷஷ்டி யப்த பூர்த்தி நடந்தபோது அவருடைய வைபவத்தைத் தமிழ் ஸம்ஸ்க்ருதம் கன்னடம் ஆகிய மூன்று பாஷைகளிலும் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள். அதில் ப்ராஸங்கிகமாக இவர்க்கு முன்னிருந்த சில பரகாலஸ்வாமிகளின் சரித்திரமும் சுருக்கமாக எழுதப்பட்டுள்ளது. 150 வருஷங்களுக்கு உள்பட்டவரான பெரிய பரகாலஸ்வாமி யென்பவர் ஏராளமான தேசிக விக் ரஹங்களைச் செய்வித்து தென்னாடுகளில் கொண்டுவந்து ஆங்காங்கு ப்ரதிஷ்டை செய்வித்ததாக பக்கம் 42ல் எழுதப்பட்டு விளங்குகின்றது. இது நாம் பொய்யாக எழுதுவதென்று நிரூபித்து விட்டால் அன்றே நாம் தேசிகன் ஸன்னிதியிலிருந்து விலகிவிடத் தடைகிடையாது. ஒரு ஸபை சேருங்கள். மேலே குறிப்பிட்ட ஸ்ரீபரகாலஸ்வாமி வைபவ புத்தகங்களை வரவழைத் துப் பாருங்கள். அவற்றில் இவ்விஷயம் இல்லையானால், (அல்லது) நாம் சொல்லுகிற புத்த கமே கிடையாதென்றாலும் ஸரி, அப்போது நாம் வந்து எடுத்துக்காட்டப் பின்வாங்கினால் நீங்கள் கண கண கண வென்று ஜயபேரியடிக்கலாம். இதனால் நீங்கள் தேசிகனை அபிமானிப் பது மிக நவீனம், மிக நூதனம், மிகப் புதிது என்பது கல் வெட்டாகித் திரும். இந்த மரு மங்கள் உங்கள் மனதில் நன்றாகப் பதிந்தே யிருப்பதால் அடுத்தபடியாக இதை விட்டு விட்டு வேறொரு கந்தல் பொந்தலைக் கிளப்பப் போகிறீர்கள். ஆதிகாலத்திலிருந்து வேதாந்தவாசிரி யரை வழிபட்டுவரும் வகுப்பினர் தென்னாசாரியர்களே யொழிய நீங்கள் அல்லீர்களென்

பந்தையும் கல்வெட்டாகக் காட்டும் விஷயங்களையே நாங்கள் நிரூபித்து வருகிறோம். இதில் நீங்கள் மௌனமாயிருப்பதுதான் கௌரவம். இதெல்லாம் ஸத்யமும் ஹிதமுமானவார்த்தை.

## 4. நீதிமன்றங்களின் ரிகார்டு நிருபணம்.

இனிக் கோர்ட்டு விஷயங்கள். நூல் விஷயங்களில் சர்ச்சையைவிட்டிட்டு கோர்ட்டு விஷயம் காட்டப் புறப்பட்டிருக்கிறீர்கள். எதற்கும் நாங்கள் பதில்சொல்லக் காத்திருக்கிறோம். எங்கள் தரப்பிலிருந்து கோர்ட்டு விஷயங்கள் பலபல வெளியிடப்பட்டிருக்கின்றன. அவற்றில், ஸூட் நம்பர், அப்பீல் நம்பர், வாதிப்ரதிவாதிகளின் பெயர்கள், ஜட்ஜ்மெண்டு தேதி முதலிய ஸகல விவரங்களும் கண்ணாடிபோல் காட்டியிருக்கிறோம். பொய்யும் புளுகும் சூதும் வாதும் பித்தலாடகமுமாக ஒரு சிறு விஷயமும் நாம் வெளியிட்டதில்லை. இப்போது சில தீழ்மக்களை மயக்குவதற்காக நீங்கள் வெளியிட்டிருக்கின்ற இங்கிலீஷ் வார்த்தைகளைக் கண்டு ஒரு பாமரனும் ஏமாந்துபோக வழியில்லையே. என்றைக்கு யார் என்ன நடத்தினார்கள்? என்ன பிராது? யாரிடம் பிராது? யார் வாதி? யார் பிரதிவாதி? என்பதொன்றையும் காட்டாமல் தலைகாலில்லாதபடி "This is very sensational..." என்று தொடங்கி மஹமத் ரஜாகான் என்று ஒரு பெயரையிட்டு True Copy என்று வெளியிட்டுவிட்டதனால் என்னாகும். விளக்கொளி ஸன்னிதிக்கு அநாதி தர்மகர்த்தாக்களான கைக்கிளவர்களில் தென்கலைக் கலைக் கைக் கிளவர்களென்றும் வடகலைக் கலைக் கைக்கிளவர்களென்றும் 2. வகுப்பு இருந்தது, இப்போது முண்டு. அன்னவர்களுக்குள் ஏதோ சச்சரவு நடந்ததாகப் பெரியோர் சொல்லிவந்ததுண்டு. அது சம்பந்தமாக மஹமட் ரஜாகான் ஏதோ ரிபோர்ட்டு செய்திருக்கலாம். நீங்கள் இப்போது வெளியிட்டிருப்பது டிக்ரியல்ல, ஜட்ஜ்மெண்டல்ல. வாதிப்ரதிவாதிகளின் பெயர் முதலான முழு விவரங்களுடன் ஜட்ஜிமெண்ட் இருக்குமே. அதை வெளியிட்டாலன்றோ உலகுக்கு உண்மை தெரியும். சின்ன காஞ்சிபுரம் ஸன்னிதி வீதியில் ஸ்ரீ உ. வே. N. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி என்கிற அட்வொகேட் ஞானசில வயோவ்ருத்தர் இருக்கிறார். அவரிடம் ஷை ரிகார்டுகளைப் பூர்த்தியாகக் காட்டுங்கள். உங்களுக்கு விருப்பமான வேறு எந்த பெரியாரிடம் காட்டினாலும் ஸரி. வ்யபதிஷ்டரான ஒரு பெரியவர் மூலமாக இந்த விஷயம் வெளிவரட்டும். அநாமதேயத் துண்டுப் பிரசுரத்தினால் யாதொரு பலனும் தேறாது.

## 5. வரதன் ஸன்னிதி வரலாறு நிதர்சனம்.

நாங்கள் எந்த விஷயம் காட்டினாலும் கண்ணாடிபோல் உள்ளது உள்ளபடியே காட்டுகிறோம். 1955 ஆம் வருஷத்தில் ஸ்ரீ உ. வே. D. ராமஸ்வாமி ஐயங்காரவர்கள் "காஞ்சிபுரம் தேவராஜஸ்வாமி தேவஸ்தான வரலாறு" என்றொரு சிறு புத்தகம் வெளியிட்டார்; அதிலுள்ளதெல்லாம் அபத்தமென்பதை விரிவாக நிரூபித்து ஸ்ரீ ப்ர. அ. ஸ்வாமி "வரதன் ஸன்னிதி வரலாறு" என்னும் புத்தகத்தை வெளியிட்டார். அது பதினாறு அத்யாயங்கள் கொண்டது. அதில் பன்னிரண்டாமத்யாயம் "ஸர்க்கார் ரிகார்டுகளால் உண்மையை விளக்குவது" என்றே மகுடம் புனைந்தது. அதில் இங்கிலீஷிலேயே எத்தனை ரிகார்டுகள் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. ஒன்றிலாவது ஒரு ஸந்தேஹமுண்டா? ஒரு விபர்யயமுண்டா? ஸ்ரீ உ. வே. வேதவ்யாஸபட்டர் ஸ்வாமி வெளியிட்ட ஸ்ரீரங்கச் செய்தி என்னும் புத்தகத்திலும் இங்கிலீஷிலேயே ரிகார்டுகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. அதிலாவது ஒரு அவத்யம் சொல்ல முடியுமா? ப்ரஹ்ம ஸ்ரீ V. கிருஷ்ணஸாமி ஐயரென்கிற சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் அவர்கள் தாதாசார்ய குடும்பஸ்தர்களைப் பற்றி யெழுதியிருப்பதும் அது திருமலை திருப்பதி

வியாஜ்ஜியத்தில் ப்ரிவிகௌன்ஸில் அதிகாரிகளால் கையாளப்பட்டுப் போற்றப்பட்டு மிருப்ப தாக வெளியிட்டிருக்கிறதே, இதில்தான் ஒரு அவத்யமுண்டா?

மேலே குறிப்பிட்ட வரதன் ஸன்னிதி வரலாறு 100, and 101. ஆவது பாராக்கள் இவை—

"100. வருஷம் 1883க்கு முன்னே (8, 9 வருஷங்களுக்கு முன்னே) 1874-ம் ஷூத்தில் வடகலை வகுப்பினர் ஷை தேசிகர்கோவிலிலிருந்த (பெரிய) காரைக்கட்டிடமான தென் கலைத் திருமணை இடித்துத் தள்ளிவிட்டார்களென்று அப்போதே செங்கற்பட்டு ஜாயிண்டு மேஜிஸ்டிரேட் கோர்ட்டில் தாவா நடந்திருக்கிறது. அந்த தாவாவின் நம்பர். 72. அதில் பிரதிவாதியா யிருந்த (அக்யூஸ்டு) திருப்புட்குழியப்பா தாதாசார்ஸ்வாமி கொடுத் திருக்கிற வாக்குமூலம் (அதாவது) 19—8—1874ல் கலெக்டர் மிஸ்டர். குருல்துரை முன்னிலையில் கொடுத்த ஸ்டேட்மெண்டு

"விளக்கொளி தேசிகன் ஸன்னிதிவாசலில் தென்கலைத் திருமண்தான் இருந்தது. 6, 7 மாதத்திற்கு முன் நான் வெளியூர் போயிருந்தபோது யாரோ வடகலையார் அதை இடித்து விட்டதாகக் கேள்விப்பட்டேன்.........அந்த தேசிகன் ஸன்னிதியிலுங்கூட தென்கலை யார்களே தென்கலை மந்திரம் சொல்லியே திவ்யப்ரபந்த ஸேவை செய்து வருகிறார்கள்; அங்கு வடகலையார் வடகலை மந்திரம் சொல்லிவரக்காணோம்". என்று.

101. அந்த வாக்குமூலம் அச்சாகி விளங்குகின்றது. அது 1874-ம் வருஷத்தில் என்பது ஸ்பஷ்டம். அதன்பிறகு ஏழு வருஷங்கள் கழித்தே கைக்கோளர்களின் வழக்கு ஹைகோர்ட்டில் (1881-ல்) முடிந்திருக்கிறது. 1874-ல் வெளியிலிருந்த காரைக் கட்டிடமான தென்கலைத் திருமண்காப்பை இடித்துவிட்ட போதிலும், மற்றும் அழிக்கப் படாமலிருந்த திருமண்களைக்கொண்டு தென்கலை ஸம்பிரதாயமே அங்கு ஓங்கியிருப்பதாக ஹைகோர்ட் ஜட்ஜுகளிருவர் எழுதிவைத்திருப்பதிலிருந்து அறிகிறோம்." என்று.

இவ்வண்ணமாகவன்றோ விஷயங்களை விளக்கமாகக் காட்டவேண்டும்.

### 6. விளக்கொளி ஸன்னிதி வ்யவஹாரமுடிவு.

மற்றொன்றும் கேண்மின். விளக்கொளி தேவஸ்தானத்திற்கு தேசிகன் ஸன்னிதியுட் பட தர்மகர்த்த பாத்யதை கைக்கோளர்களைச் சேர்ந்தது. தாதாசாரவாள் தேசிகன் ஸன்னி திக்கு மட்டும் நாங்களே தர்மகர்த்தாக்களென்று வழக்காடினார்கள். ஹைகோர்ட்டுவரைக்கும் போய் இந்த வியாஜ்ஜியம் முடிவுபெற்றது. மஹாமேதாவியான முத்துஸாமியையரவர்களால் "தென்கலை ஸம்பிரதாயப்படி நடந்துவருகிற தேசிகர் கோவிலுக்கு வடகலை தாதாசாரிகள் தருமகர்த்தாக்களாக இருந்திருக்க முடியாது" என்று ஜட்ஜ்மெண்டு அவதரித்திருப்பது யாராலும் அபலபிக்க முடியாது. இப்படி நாம் எழுதுவது பொய்யென்றால், நீங்கள் எழுதி வது பொய்யா? நாங்கள் எழுதுவது பொய்யா என்பதை மத்யஸ்தர்களான விவேகிகள் நிர்ணயிக்கும்படி செய்யுங்கள். அதற்கு செ. கி. வ. என்கிற தப்புக் கையொப்பத்தை விலக்கி, பரிகணிதரான ப்ரஸித்தவ்யக்தியொருவர் முன்வரவேண்டும்.

### 7. ஸ்ரீரங்க தேசிகன் திருமண் மாறுதல்.

"ஸ்வாமி தேசிகனுக்கு உள்ள திருமண்காப்பை மாற்றித் திலகமிடுவது எவ்வளவு பெரியகுற்றம். யோசியுங்கள்" என்று எழுதியிருக்கிறீர்கள். திருவஹீந்திரபுரம் ஸன்னிதியில்

நூறு வருஷகாலமாகத் தென்கலையாருக்கு ஒருவிதமான ப்ரவேசமுமில்லை. அங்கு தேசிகனுக்குத் திலக மிட்டிருக்கிறதே, இது என்ன அநியாயம்? இது யார் செய்த குற்றம்? யோசியுங்கள். "தேசிகனுக்கு உள்ள திருமண்காப்பை மாற்றி" என்கிறீர்கள். ஆயிரம் ரூ. அபராதம் செலுத்தினவர்களன்றோ மாற்றினவர்கள். அவர்கள் யாரென்பதை உலக மறிந்துள்ளது. மறைந்தும் மறந்தும்போன விஷயங்களை நன்றாக ஸ்தாபனம் செய்துகொள்ளுகிறீர்கள்.

## 8. ஸேவா பத்ரிகையின் வெளியிடொன்று காட்டுதல்.

உங்களுடைய ஸம்ப்ரதாயத்திற்கே அஸாதாரணமாக ஸேவா என்றொரு பத்திரிகை நடத்தி வருகிறீர்கள். அதில் 4–2. என்று லக்கமுள்ள மே மாதப் பத்திரிகையில் விளக்கொளி யெம்பெருமானையும் தேசிகனையும் சேர்த்துப் பிடித்த பழைய படத்தைபடம் பிடித்து ப்ளாக் கெடுத்து வெளியிட்டிருக்கிறீர்கள். அதில் தேசிகன் திருநெற்றியிலும் பாதுகையிலும் தென்கலைத் திருமண் காப்பே ஜ்வலிக்கிற தென்பதை ப்ர. அ ஸ்வாமி பஹிரங்கப்படுத்தியிருக்கிறார். அதற்கு மறுவாய் திறக்கமுடியாமல் தேள் கொட்டின தஸ்கரன் போல் இருந்து வருகிறீர்கள். அந்த ஸேவா பத்ரிகை அபலபிக்க முடியாமல் பெரிய ஸாக்ஷியாக, தைவ ஸாக்ஷியாக விளங்குகின்றது. அதில் நிஸ்ஸந்தேஹமாக விளங்குவது தென்கலைத் திருமண் அன்று, வடகலை நாமந்தான் என்று எழுதி விடுங்கள்; ஒரு ஸபையில் அந்த 4—2. ஸேவா பத்ரிகையை யாவரும் ஸேவிக்கும்படி செய்யுங்கள். இதுவே முதற்காரியமாக நடக்கத்தக்கது.

## 9, 10. இருவருடைய சபதங்கள்

இந்த வாத ப்ரதிவாத சர்ச்சைகள் இப்போது ப்ரபலப்பட்டு வருவது எதற்காக? நாளை யுகாதியன்று ஸ்ரீரங்கத்தில் மற்ற ஆழ்வாராசாரியர்களுக்குப்போல் வேதாந்தவாசிரியர்க்கும் புறப்பாடு செய்விக்கவேணு மென்பதற்காகவே. அதை உங்கள் பத்ரிகையில் வெளியிட்டுமிருக்கிறீர்கள். ஒரு உத்தமாச்ரமி இதற்காகப் பலவாறு சபதங்கள் செய்திருக்கிறார். நாளை யுகாதியில் ஸ்ரீரங்க தேசிகன் வடகலைத் திருமணோடு புறப்பாடு கண்டருளாவிட்டால் தண்டகாஷாயங்களை எறிந்து விடுகிறேன்; எனது நெற்றியையும் பாழாக்கிக் கொள்ளுகிறேன்—இத்யாதி. லக்ஷக்கணக்கில் பணம் செலவழிப்பதாகவும் உறுமுகிறார்.

நம்முடைய சபதம் கேண்மின்; தென்னாசார்ய தர்சநதுரந்தரரான பெரிய பெருமாள் தாமணிந்திருக்கும் திருமண் காப்புக்கு விருத்தமான நாமத்தைக் கண் கொண்டு பார்ப்பராகில் யுகாதிக்கு மறு நாளிலிருந்து "ஸர்வ தேசதசாகாலேஷு—ஸ்ரீமந் ஸ்ரீரங்க ச்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய" இத்யாதிகளை யநுஸந்திப்பதை நாம் விட்டிடுவோம்—என்பது நமது சபதம். யாருடைய சபதம் தெய்வ ஸம்மத மென்பதை இரண்டே நாளில் உலகம் காணக்கடவது. 26—3—60.

இது வரையில் செ. கி. வ. என்றே மறைபெயர் வைத்துத் துண்டுக்காகிதங்களை வெளியிட்டு வந்தவர் இப்போது உண்மையான பெயருடன் விவேக பாரிஜாதம் என்கிற க்ஷுத்ர புஸ்தகத்தை வெளியிட்டிருக்கிறார். இதை எழுத்தெழுத்தாகக் கண்டித்த பாரிஜாதா பஹரண திவ்யக்ரந்தம் அடுத்தபடியாக வெளிவரக் கண்டு களிமின்.

---

ஸ்ரீ:

# பாரிஜாதாபஹரணம்.

ஸ்ரீசைல க்ருஷ்ணமாசாரியர், ஸ்ரீகாஞ்சி.

## 1. முகவுரை

ஸ்ரீ க்ருஷ்ணகதாஸுதாநிதியில் பாரிஜாதாபஹரணமென்பது மொன்று. அது என்றைக்கோ நடந்தது. புராண நூல்களில் கேள்விப்படுகிறோமத்தனை. கண்ணாரக் கண்டு களித்திலோம். அதுதன்னை இப்போது கண்ணாரக் காண்மின் கண்ணுடையீர். அந்த பாரிஜாதாபஹரணம் செய்தது ஸ்ரீ க்ருஷ்ணனே யாதலால் இந்த பாரிஜாதாபஹரணமும் ஸ்ரீ க்ருஷ்ணநாமவானாகிய அடியேனே செய்ய ப்ராப்தமாகிறது. ஆனால் அதற்குமிதற்கும் ஒரு வாசியுண்டு. ஸ்ரீ கிருஷ்ணன் பாரிஜாதத்தை வேரோடே களைந்து "மாதர்க்காய் வண்துவரை நட்டான்" என்கிறபடியே ஸத்யபாமைப் பிராட்டியின் நிலாத்திகழ் முற்றத்துள் நட்டான்; அடியேன் செய்யும் பாரிஜாதாபஹரணம் வேராடே பிடுங்கிக் களைந்தொழிப்பதாமத்தனை. இதுவரையில் அநாமதேயத் துண்டுக்காகிதங்களாக வெளிவந்தது போலல்லாமல் இப்போது திருவரங்கம் திருமலைதாதாசாரியார் என்னும் பெயரால் வெளிவந்தது விசேஷம். அது விவேக பாரிஜாதமாம். பாரிஜாதமென்று சொல்லப்பட்டவுடனே பாரிஜாதாபஹரணமும் செவிப்படவேண்டியது ப்ராப்தமாதலால் இந்த பாரிஜாதாபஹரணத்தின் அவதரணம் மிகப் பொருத்தமானது. பிரபந்தஸார விமர்சத்தைப்பற்றியதாம் விவேகபாரிஜாதம். அதற்குப் பரிபூர்ணமான மறுப்பை ப்ரபந்தஸாரதத்வஸாரமருளிச்செய்த ஸ்வாமியே ஸம்ஸ்க்ருத பாஷையில் பணித்துள்ளார். அதை விரைவில் வைதிக மநோஹராவில் வெளியிட்டருள்வர். அதனுடைய ஸாரஸம்க்ஷேபமாக அடியேன் இதை எழுதுகின்றேன்.

## 2. திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமே.

பிரபந்தஸாரம் வேதாந்த வாசிரியர் செய்ததன்று என்பதை அசைக்க முடியாத பல ஹேதுக்களால் நிரூபணம் செய்திருக்கிறது ஸ்ரீஸ்வாமியின் பிரபந்த ஸாரதத்வஸார நூல். அவற்றுள் தலையான ஹேது—தனிப் பிரபந்தமாகிய திருப்பல்லாண்டைப் பெரியாழ்வார் திருமொழியோடு சேர்த்து ஏகப்ரபந்தமாகப் பிரபந்தஸாரம் பேசியுள்ளது—என்பதாம். இதைப்பற்றி ஸ்ரீஸ்வாமி யெழுதியுள்ள விஷயங்களில் அணுவளவும் தொடாமல் ஸ்ரீ உ. வே. வித்வான் கோமல். சேஷாத்ரியாசார்ய ஸ்வாமியின் அந்தேவாஸியான மாம்பலம் வரத ராஜாசார்யர் எழுதி வெளியிட்டுள்ள ப்ரபந்தசாரபரிசீலனம் என்கிற நூலை இந்த D. T. தாதாசாரியர் விமர்சிப்பதாகத் தெரியவருகிறது. அந்த மாம்பலம் ஸ்வாமி யெழுதியிருப்பதாவது,

> "திருப்பல்லாண்டையும் பெரியாழ்வார் திருமொழியையும் ஒரே பிரபந்தமாகக் கணக்குசெய்வது ஒவ்வாததுதான், ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்கள் இப்படிச் சொல்லமுடியாததுதான். ஆனால் பிரபந்தசாரத்தில் இப்படிச் சொல்லியிருக்கிறதேயென்றால், சொல்லியிருக்கவில்லையென்றே திடமாகச் சொல்லலாம். அதில் "ஏரணி பல்லாண்டு முதற்பாட்டு நானூற்றெழுபத்தொன்றிரண்டும்" என்றிருப்பது பெரியாழ்வார் ஸாதித்த பாசுரங்கள் மொத்தம் இத்தனை என்று கணக்கிட்ட மாத்திரமாகத் தேறுமேயொழிய வேறொன்றும் தேறாது. "ஆண்டாளருளிச் செய்த பாட்டுக்கள் 173" என்றொருவர் எழுதிவைத்திருந்தால் அதனால் எப்படி ஒரு அவத்யமும் வாராதோ, அப்படியே இங்குமென்க. திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் ஏகப்பிரபந்தமேயென்று தேசிகன் ஸாதித்துவிட்டதாக நாம் கொண்டிருக்கிற ஜடமான கொள்கையை விட்டொழித்துவிடலாம். தேசிகன் மேலேறிய அவத்யம் தீரவேண்டுவது முக்யமாதலால் அது தீர்ந்துவிட்டதென்று மகிழ்வோம். இதில் நம்முடைய எண்ணம் மட்டும் தவறு என்று முடிந்து நிற்கும். தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போன கதையாம்" என்று.

மாம்பலம் ஸ்வாமி இங்ஙனே காட்டியுள்ள நிர்வாஹத்தை நான்முகனும் மறுக்ககில்லான். D. T. T. மறுக்க ஆசைப்படுகிறாரே யொழிய மறுப்பதற்கு விஷயம் கிடைக்காமல் "அவருடைய அறியாமை மிகவும் வருந்தத்தக்கது" என்று நிந்தித்தொழிகிறார். ஒரு க்ஷணமும் நிற்கமாட்டாத இரண்டு காரணங்கள் காட்டுகிறார். (1) தேசிகன் கையாண்டிருக்கும் நியமத்திற்கு பங்கம் வருமாகையால் இது கூடாது. (2) ப்ரபந்தசாரத்தின் பதினேழாம் பாட்டோடும் விரோதிக்கும். என்பதாக இரண்டு விஷயம் தெரிவிக்கிறார். இவ்விரண்டும் க்ஷண ஸங்குரமே. ஸ்வாமி என்ன நியமம் கையாண்டிருக்கிறாரென்பதை இவர் காட்டிற்றிலர். ஆனாலும் இவர் எண்ணியிருப்பதை நாமறிவோமாதலால் அதை நிரஸிக்கிறோம்.

## 3. ப்ரக்ரமபங்க மென்றது ஸ்வகீயாஜ்ஞாநாங்கம்.

ஸ்வாமி அதிகரணஸாராவளியில் "ஸௌத்ரீ ஸங்க்யா" என்று தொடங்கும் பதினாறாவது சுலோகத்தில் ப்ரஹ்மஸூத்ரமென்னும் சாரீரகமீமாம்ஸையிலுள்ள ஸூத்ரங்களின் லக்கத்தையும் அதிகரணங்களின் லக்கத்தையும், ஒவ்வொரு பாதத்திலுமுள்ள அதிகரணங்களின் லக்கத்தையும் காட்டுகிறார். எப்படி காட்டுகிறாரென்பதைக் காணவேணும். ஸூத்ரலக்கத்தையும் அதிகரண லக்கத்தையும் சுபாசீ: என்றும், சிந்மயீ என்றும் கடபயாதி க்ரமத்தாலே காட்டினார். உடனே பதினாறு பாதங்களிலுள்ள அதிகரண லக்கங்களைத் தனித்தனி காட்ட விரும்பி அப்போது கடபயாதிக்ரமத்தைவிட்டு "சதுரொகதூலிஸா நக்ஷ ராசி ஸம்வத்ராதிதேஹ்ஸு:" என்று வ்யாக்யாதா எழுதவேண்டும்படி முன்புகொண்ட க்ரமத்தை மாற்றி வேறொரு க்ரமத்தில் காட்டினார். அடுத்த பதினேழாம் சுலோகத்தில் இவ்விரண்டு க்ரமங்களையும் விட்டிட்டு "ஷோடசாங்க்ரி, த்விகயுமஷித்வஷ்டி" என்று ஸாக்ஷாத் ஸங்க்யா நிர்தேசமாகிற மூன்றாவது க்ரமத்தைக் கைப்பற்றினார். இவை தூஷணமென்பதை யாரும் அபலபிக்க முடியாது. இந்த ஷணத்தைப் பரிஹரிக்க முடியுமாவென்பதைத் தெரிந்து கொள்ளாமல் பிரபந்தசாரத்தில் தூஷணம் வந்துவிடுமென்று ஆபத்தி காட்டுமிவர் அந்தோ! பண்டிதராஜராம்.

## 4. வைதத்யதூஷணம் பரிஹார்யமென்பது.

ப்ரபந்தசாரத்தின் பதினேழாம் பாட்டோடும் விரோதிக்குமென்கிற இரண்டாவது ஆபத்தியும் அஸமஞ்ஜஸம். ஸ்வாமியின் தத்வஸாரத்தில் (பக்கம் 18ல்) "மிகமிக முக்கியமானவொரு அஸங்கத ப்ரதர்சனம்" என்று மகுடமிட்டு (பாரா-39) "பிரபந்தசாரத்தில் * வையகமெண் * என்கிற பதினேழாம்பாட்டு மிகவும் பிற்பட்டது; நூல்செய்து முடித்தபிறகு வேறொருவரால் செய்து நுழைக்கப்பட்டதென்கை" என்றெழுதி "இதற்கு மறுக்கொணாத சான்று கேண்மின்" என்று தொடங்கி அப்பாட்டு மிக நவீனமென்பது மூதலிக்கப்பட்டுள்ளது. அதற்கு உயிர் வந்தபிறகல்லவோ அதை ப்ரமாணமாக இவர் எடுத்துக் காட்டமுடியும். ப்ரேதத்தை ஸாக்ஷிபோடுவது எங்கேனுமுண்டோ? இந்த பாரிஜாதாபஹரணத்திலும் மேலே நாம் அந்தப்பாட்டின் வைதத்யத்தைக் கல்வெட்டாக்கப்போகிறோம். ஆக இவ்விஷயத்தில் மாம்பலம் ஸ்வாமியின் லேகனம் அவிசால்யமென்று முடிந்தது.

## 5. ஸ்ரீபரகால ஸ்வாமி வியாக்கியான—திவ்யஸூரி சரிதயோ: தூஷணம்.

தென்கலை ஸம்பிரதாயத்திற்போல் வடகலை ஸம்பிரதாயத்திலும் திருப்பல்லாண்டுக்கும் பெரியாழ்வார் திருமொழிக்கும் ஸ்ரீபரகால ஸ்வாமியின் வியாக்கியானம் வெளிவந்திருப்

பதைக்காட்டி அதிலும் திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமாக விளக்கப்பட்டிருப்பதை ச்லோக பூர்வகமாக ஸ்ரீஸ்வாமி நிரூபித்துள்ளார்; எம்பெருமானுருடைய திருவாணையால் திருவவதரித்த கருடவாஹநபண்டித ப்ராணித திவ்யஸூரி சரிதத்திலும் ஐந்தாவது ஸர்க்கத்தில் 70, 71, 72 சுலோகங்களில் திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் தனித்தனிப் பிரபந்தங்களென்பது நன்கு காட்டப்பட்டுள்ள தென்பதையும் ஸ்வாமி நிரூபித்துள்ளார். இவ்விரண்டும் பிரபல ப்ரமாணம். இதில் D. T. T. வாய் திறக்க முடியாமல் நின்றது நன்றே. பெரிய பரகால ஸ்வாமி காலத்தில் ப்ரபந்தசாரம் பிறக்கவில்லை யென்றோ அதை அவர் பார்த்திலரென்றோ மற்றென்றோ சொல்லித் தீரவேண்டுமிவர். திவ்யஸூரி சரிதத்திற்கு இவர் வைதேசிகராதலால் அதை விட்டிட்டாலும் பரகால ஸ்வாமியின் எழுத்துக்கு விடை கூறியாக வேண்டுமே. அதற்கு வழி ஏது? விவேக பாரிஜாதமென்று பெயரிட்டு விவேகிக்கப் புகுந்தவர் விஷயங்களை அலசி யலசியன்றோ பேசி முடிக்கவேண்டும். இவர் அஸூயையினால் ஸ்வாமியை நிந்திக்கப் பிறந்தாரே யொழிய ஸ்வாமியின் ஸரணியை அணுமாத்ரமும் பின்பற்ற பாக்யம் பெற்றிலரே!.

### 6. பெரியாழ்வார் திருமொழி முதற்பத்தின் பிரிவு மிகநன்றே.

நூறு பாசுரங்களை ஒரு பத்தாக வழங்குவது ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயம். அதன்படி * வண்ணமாடங்கள் முதலாக * மெச்சூது தொடங்கும் வரையில் நூறு பாட்டு குறையற்றிருப்பதால் முதற் பத்தின் பிரிவு நிரவத்ய மானதே. திருப்பல்லாண்டைச் சேர்த்தால் நூற்றுப் பத்துப் பாசுரங்கட்கு மேற்படும். இதனாலும் திருப்பல்லாண்டு தனி நூலேயாகும். தனக்கு ஸாதக மின்னது, பாதகமின்னது என்பதைக்கூட எள்ளளவுமறியாத D. T. T. தம்முடைய துரவஸ்தையைப் பிறர்மீது ஏறிடுகிறார். இடையில் "நம் ஸித்தாந்தத்திற்கு ப்ரமாணம்" என்கிறார். உக்திரமிகளில் ரகுவம்ஸமொன்றுதான் உத்தம ப்ரபந்தமென்பது இவருடைய ஸித்தாந்தமென்று உலகமறிந்தது. அதற்கு இங்கே என்ன ப்ரமாணம் கிடைத்து விட்டதோ?

### 7. துரபிநிவேஶம் யாருக்கென்பதை ஆராய்தல்.

துரபிநிவேஶ முள்ளவர்கள் திருப்பல்லாண்டை அநியாயமாகத் தனிப்பிரபந்தமாய்ப் பிரித்து விட்டார்களென்கிறார் D. T. T. இது அசட்டு வார்த்தைகளில் தலையானது. பிரிப்பதிலும் சேர்ப்பதிலும் ஏதேனும் லாபநஷ்டமிருந்தால் துரபிநிவேஶமென்னலாம். உள்ளதை உள்ளபடி வெளியிட்டவர்களை வீணாகப் பழிப்பது பேதைமை. பெரிய பரகால ஸ்வாமியையும் திவ்யஸூரி சரிதகாரரையுமன்றோ இவர் பழிக்கிறார். "ஒரு ப்ரபந்தமாகினால் ஸ்ரீவைஷ்ணவத்வம் குலைபட்டதோ வென்னில்" என்கிற ஆக்ஷேபொத்தாவநமும் தத்ஸமாதானமும் * வ்யவஹிதவிதம் வ்யவதாநாதியில் சேர்ந்தது.

### 8. பெரியதிருமடல் ஒருகாலும் சரமப்ரபந்தமாகாது.

திருமங்கையாழ்வாருடைய திவ்யப்ரபந்தங்களில் திருநெடுந்தாண்டகமே சரமப்ரபந்தமாயிருக்கத் தகுதியுடையதென்பதை ஸ்ரீ ஸ்வாமி தத்வஸாரத்தில் நான்கு ஏடுகளால் பரக்க நிரூபித்திருக்கின்றார். மாம்பலம் ஸ்வாமியும் தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போம்படியான வழியை இங்கும் காட்டியுள்ளார். இவை யொன்றையும் கணிசியாத D. T. T. "பாடக்ரமமே இதற்குப்ரமாணம்" என்றெழுதுகிறார். இதன்கருத்து என்னவென்றால்,

திருநெடுந்தாண்டகம் இரண்டாவதாயிரத்தில் சேர்த்துப் படிக்கப்பட்டு வருவதாலும் திருமடல் மூன்றாவதாயிரத்தில் சேர்த்துப் படிக்கப்பட்டு வருவதாலும் இந்த பாடக்ரமத்தினால் திருமடலே சரமப்ரபந்தமாகத் தக்கது என்பதாம். இப்படி அசடுவழிய எழுதக்கற்றவரைத் தேடிப்பிடித்தார்களிவர்கள். திருமழிசைப்பிரானுடைய இரண்டு திவ்யப்ரபந்தங்களில் இரண்டாவதான திருச்சந்தவிருத்தம் முதலாயிரத்தில் சேர்த்துப் படிக்கப்பட்டு வருகிறது. முதற்பிரபந்தம் மூன்றாவதாயிரத்தில் சேர்த்துப்படிக்கப்பட்டுவருகிறது. இந்த பாடக்ரமத்தைக் கொண்டு இவர் பிரபந்த சாரத்தை தூஷிக்கவேண்டியவராயினர். ஏன்? அதில் பாடக்ரமவிருத்தமாக நான்முகன் திருவந்தாதியை முதற்பிரபந்தமாகக் கூறியிருக்கையாலே. இங்கே இவர் 'சிற்றஞ்சிறுகாலே' என்கிறார். அச்சுப்பிழையென்பர். தலையெழுத்துப் பிழை தவிரவேறில்லை. மிகவும் ஆர்த்தியைக் காட்டுவதால் பெரிய திருமடலே சரமப்ரபந்தமாயிருக்கத்தக்கதென்கிறார். நம்மாழ்வாருடைய மிகுந்த ஆர்த்தியைக் காட்டுவதான திருவிருத்தமே சரமப்ரபந்தமாயிருக்கத் தகுமென்று நாளைமறுநாளில் எழுதுவரிவர். *ஶா-ா-ஶ ஊ-வஊநயீக்தி வாய்வந்தபடி பேசுமிவர் எதையும் பேசலாம்.

### 9. இராமாநுசநூற்றந்தாதி உடையவருடைய க்ருதியன்றென்பது.

ப்ரபந்தசாரத்தில் இராமாநுச நூற்றந்தாதியை உடையவர் இயற்றியதாக ப்ரமித்துச் சொல்லியிருப்பதால் இதனாலும் பிரபந்தசாரம் தேசிகக்ருதியன்றென்று தேறுவதாய் தத்வஸாரத்தில் ஸ்வாமி நிரூபித்திருக்கிறார். அதற்கு பதிலெழுதுகின்ற D. T. T. "நூற்றந்தாதியின் கர்த்தாவைக் கூறுமிடத்தில் அமுதனாரை வெளிப்படையாகக் கூறுவதில்லை யென்பதும் யதிராஜனையே கூறுவது என்பதும் ஸம்பிரதாயமுறை" என்கிறார். அந்தோ! இந்த அவ்யபதேச்ய ஸம்பிரதாயத்தை எங்குக் கற்றாரோ இவர். ரகுவம்சபண்டிதராஜான இவர் பிரபந்தசாரத்தைக் கண்ணெடுத்துப் பார்த்தவரேயல்லர். அதில் பதினைலாம்பாட்டில் "எதிராசா முன், பூசுரர்கோன் திருவரங்கத்தமுதனாருன் பொன்னடிமேலந்தாதியாகப் போற்றி" என்று ஸ-ஷ்பஷ்டமாக அமுதனாரையே கூறியுள்ளது. இவ்விஷயத்தில் நம் ஸ்வாமி தத்வஸாரத்தில் செய்திருக்கும் க்ஷேபம் இன்னதென்பதையே தெரிந்துகொள்ளாதவிவர் நூற்றந்தாதியின் கர்த்தாவாக அமுதனாரைக் கூறுவதே கிடையாதென்கிறார். இதற்குப்ரமாணமாக * பூதம்ஸரச் ச * என்கிற சுலோகத்தையுமெடுத்துக் காட்டுகிறார். அந்தச்லோகத்தில் மதுரகவிகளையும் ஆண்டாளையும் நிர்தேசிக்காமையாலே அவ்விருவரும் அருளியவை நாலாயிரத்தில் சேர்ந்ததல்லவென்றும் சொல்லவருவர். கருணையினாலே இவர்க்குத் தத்துவமுணர்த்துவோம்;

### 10. * பூதம் ஸரச்ச * ச்லோகத்தின் மருமப்பொருள்.

பட்டாருளிச் செய்த * பூதம் ஸரச் சேத்யாதி ச்லோகமானது திவ்யப்ரபந்தாவதாரணத்தைப்பற்றியதேயன்று ஆழ்வார்களில் நம்மாழ்வார் அங்கியானவர்; மற்றையாழ்வார்களும் எம்பெருமானாரும் அவர்க்கு அங்கபூதர்கள் என்பதைத் தெரிவிப்பதாமத்தனை. ஆகவேதான் எம்பெருமானாரையும் முன்னேயிட்டு ஸ்ரீமத் பராங்குசமுனியை முடிவிலிட்டது. ஆண்டாளை நம்மாழ்வார்க்கு அவயவமாகச் சொல்லத் தகுதியில்லாமையாலே இந்த ச்லோகத்தில் அவளை ஸ்பர்சிக்கவில்லை. மதுரகவிகளுடையதான திருவடி ஸ்தானத்தை எம்பெருமானார் லபித்துவிட்டபடியால் மதுரகவிகளை இதில் நிர்தேசிக்கவில்லை. *ஶ-ஐதஂஶிரொ ஶுதஊஹாஹுயஊக்ஷிய-ஶழ் என்கிற ச்லோகத்தையுமுடன்கொண்டு நம் ஸ்வாமியின் விபுல

வியாக்யானம் அவதரித்திருப்பதால் ப்ரக்ருதம் இந்த D. T. T. யின் மருளுக்கு அநுசோகித்து நிற்கிறோம். பிரபந்தசாரத்தின் பதினேழாம்பாட்டு அஸம்பத்த மஸம்பத்தமே.

### 11. தமிழ்ச் செய்யுளில் 'ப்ர' முதலில் வரவே தகாது.

'வேதாந்த குருமொழிந்த ப்ரபந்தசாரம்' என்று பாட்டிலிருப்பது மிகத் தவறு—என்று ஸ்ரீஸ்வாமியின் நிர்ணயம். அதற்கு D. T. T. எழுதுகிறார்—பரமாத்மனே, திருச்சித்ரகூடம், வைட்ணவர் முதலிய திவ்யப்ரபந்த ப்ரயோகங்கள் காண்க—என்று. இப்படி ப்ரபலப்ரமாணம் காட்டி எதிரியை வாய்திறக்கவொட்டாதபடிசெய்ய இவர்தவிர வேறு யாரால் முடியும்? தே, மே என்பவை வடமொழியில் வாக்யாரம்பத்தில் வாரா என்று ஒரு வித்வான் சொல்ல, தேஜஸ்வி, மேதாவீ இத்யாதிகள் தாராளமாக வரக்காண்கிறோமே! என்றாராம் இவருடைய திருத்தந்தையார். அவருடைய திருக்குமாரரிறே இவர்தாம். நடுவுக்கும் ஆதிக்கும் வாசியில்லையென்னுமிவர் ஆதியிலே ஒருதாரணமெடுத்துக்காட்ட இன்னுமொரு பிறவி பிறக்கட்டும். 'உனக்கு முதல் தீர்த்தம் கிடையாது' என்றால் 'எட்டாம் தீர்த்தமுண்டே' என்பவனை பொத்திருக்கிறாரிவர். மெய்யெழுத்தை முதலிலே கொண்டசொல் செய்யுளில் தலைகாட்டவே மாட்டாதென்று ஸ்வாமி எழுதியான பின்பு வாய்திறக்க இவரார்?

### 12. திருமடல்களைப் பற்றின முடிவுக்கு அவதாரிகை.

ஒருவர்க்கு ப்ரபலமான நோய் கண்டது. பல சிகித்ஸைகளும் செய்துபார்த்து அறவே கைவிட்டாயிற்று. பிராணவியோகமுமாய் விட்டது, எதோ மூர்ச்சையேயொழிய உயிர்போகவில்லை, இருக்கிறது என்றெண்ணிய உறவினர் சடக்கென ஓடிப்போய் ஒரு பெரிய மருத்துவனைக் கொணர்ந்தார்கள். அவன் வந்து பார்த்தவுடனே உயிர்போய் ஒரு நாழிகையாயிற்றென்று அறிந்து வைத்தும் வெறுங்கையோடு திரும்பக்கூடாதென்றெண்ணி "அஞ்சேல்மின்; இதோ உயர்ந்த மருந்து தருகிறேன்; கல்லாலடித்தாலும் இவர்க்குச் சாவில்லை" என்று சொல்லித் தெருமண்ணைத் தன் பெட்டியிலிருந்தெடுத்துக்கொடுத்து அதை உடல்முழுதும் பூசும்படி சொல்லிவிட்டு நூறுரூபாய் முழுநோட்டைப் பெற்றுக்கொண்டு போனானென்கிற கதைதவிர வேறு எதுவும் இங்கு நிதர்சனமாகாது. திருமடல்களைப் பல பாட்டாகப் பிரிக்க ஸர்வசக்தனான ஸர்வேச்வரனாலுமாகாதென்று முடிந்துபோய் மூன்று யுகங்களானபிறகு, ஸர்வாத்மநா திவ்யப்ரபந்தமஹாநபிஜ்ஞரும் திவ்யப்ரபந்த வித்வேஷியுமான இவர் இதில் தலையிட என்ன ப்ரஸக்தி? ஸ்வாமி தம்முடைய தத்வஸாரக்ரந்தமுடிவில் ஆப்தர்களான நான்கு வடகலை ஸ்வாமிகளைக் குறிப்பிட்டு அவர்கள் நிந்தையில்லாமல் எழுதக்கூடியவர்களென்றும், ப்ராமாணிகர்களென்றும் கொண்டாடி யெழுதியிருக்கிறார். அவர்கள் ஏன் முன்வந்து எழுதக்கூடாது? அந்த நால்வர்களின் நிலைமையைத் தெரிவிப்போம்.

### 13. நால்வரில் மூவருடைய தன்மைநவிற்சி.

இளையவில்லி ஸ்வாமி "தேவரீருடைய வியாக்கியான நூல்களையும் உபந்யாஸ க்ரந்தங்களையுமே ஸேவித்துப் போதுபோக்கி ரஸாயன ஸேவை பண்ணினாற்போலே களித்திருக்குமடியேனுக்கு இந்த விவாதங்களில் ப்ரவேசம் ருசிக்கவில்லை" என்று 12—1—60ல் நம் ஸ்வாமிக்குக் கடிதமெழுதிவிட்டார்; ஒருமாதத்திற்குமுன் திருநாட்டுக்குமெழுந்தருளிவிட்டார். அடுத்தவரான ஸ்ரீ உ. வே. திருக்குடந்தை கண்ணன் ஸ்வாமியானவர் நம் ஸ்வாமி ஸாதிக்கும் விஷயங்களை வேதவாக்காக நினைப்பவரேயொழிய மறுப்பதாக முன்வந்து பரிபவப்படுவார்திரளில் ஒருநாளும் சேர்ந்தவரல்லர். இதை அவர் தாமே பல

ஆப்தர்களிடமும் கூசாமல் சொல்லிக்கொண்டிருப்பவர். தவிரவும், (வர்த்தமாந) ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஆண்டவன் பக்கலில் அவர் அதிமாத்ரம் ப்ரவணர். அந்த ஆண்டவன் நம் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகள் ப்ரளயத்திலுமழியமாட்டாதவை யென்பதை நிஸ்ஸங்கோசமாக ப்ரவர்த்தநம் செய்தருளினவராதலால் அவருடைய திருவுள்ளம் கன்றும்படி ப்ரவர்த்திக்க பக்தருமல்லர் கண்ணன்ஸ்வாமி. அடுத்தவரான ஸ்ரீ உ. வே. (உப்பிலியப்பன் ஸந்நிதி) நவநீதம் ஸ்ரீராமதேசிகாசார்யர் அப்ராமாணிக ஸரணியில் அடியிடக் கூசுமவராதலால் அவரும் மறுப்பில் ப்ரவேசித்திலர். லக்ஷம்ரூபாய் கொடுத்து நிர்ப்பந்தித்தாலும் நிலைதளும்பார்.

## 14. நால்வரில் நாலாமவரைப்பற்றி.

ஸ்ரீ உ. வே. D. ராமஸ்வாமி ஐயங்காரவர்களும் பதிலெழுதவேண்டியவராக நம் ஸ்வாமியால் நிர்த்தேசிக்கப்பட்டிருக்கிறார். அவர்க்கு மறுப்பெழுத மிக ஆவலுண்டு. ஆனாலும் உண்மையில் அவர் மஹாவிவேகியாதலால் "ப்ரயாஸ ஶதங்களினாலும் வெற்றிபெற முடியாமல் தோல்வியோடு தலைக்கட்டும்படியான விஷயத்தில் நாம் தலையிடுவது தகாது தகாது" என்று ஹார்த்தமான நிர்ணயமுள்ளவராதலால் ப்ராமாணிகராகவே விளங்குகின்றார். தவிரவும் அந்த வக்கீல் ஸ்வாமி உண்மையை யொளிக்கமாட்டாமல் நம் ஸ்வாமியைப்பற்றி யெழுதி வெளியிட்டிருக்கிற "ஸ்ரீ வைஷ்ணவமே வடிவெடுத்தவர்" என்று மகுடம் புனைந்த மதிப்புரையில்

"இம் மஹாபுருஷர் விஷயத்தில் அஸூயையையும் பொறாமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர்பார்க்கலாம்; ஆனால் எவ்வித வாதப்போரிலும் (P. B. A.) ஸ்வாமி பின்வாங்க மாட்டார்; ஸ்வாமியினுடைய வாதமே கடைசியாக ஓங்கிநிற்கும்"

என்று உலகமறிய எழுதியிட்டபடியால் அதற்கு முரணாக ப்ரவர்த்திக்க முடியாமையுமொன்று. "எட்டொன்பது வருஷங்களுக்கு முன் நான் அப்படி யெழுதினது வாஸ்தவம்; ஆனால் அது மதிமயக்கத்தாலெழுதியது; அதை நம்பவேண்டா" என்று அவரே பீடிகையிட்டு மறுப்பெழுதினால் இதைத் தடுக்க முடியாதுதான். ஆனாலும் ப்ரக்ருதவிஷயத்தின் போக்கை அவர் நன்குணர்ந்தவராதலால் அஸமஞ்ஜஸமாகத் தலையிட்டுத் தத்தளிக்கமாட்டாரென்பது தான் ஸாரமான வார்த்தை. புகழ்ந்தவாயினால் இகழ முடியாமை யென்பதில்லை. ப்ரக்ருத விஷயம் யாரும் மறுக்க நினைக்கவும் முடியாததென்பதே தத்வமென்றார் கோமல்ஸ்வாமி.

## 15. ப்ரக்ருதவாதியின் பரிசு.

தேசிகன் நியாஸவிம்ஶதியில் சிஷ்யலக்ஷணம் ஸாதிக்கிற * ஸத்புத்திஸ் ஸாதுஸேவீத்யாதி ச்லோகத்தில் ஆறாவதாக ஸாதித்த தன்மையுண்டே [த்யக்தமாந: என்பது], அது ப்ரக்ருதவாதியினிடத்தில் அதிஸாதாரணமாகப் புஷ்கலமாதலால் "இவ்விஷயத்தில் வாய் வைக்க நமக்கென்ன யோக்யதை? என்ன அதிகாரம்!" என்பதைச் சிறிதும் விமர்சியாமல் 'அப்படிச் சொல்லிவிடலாம், இப்படிச் சொல்லிவிடலாம்; இப்படி மௌனமாக நிர்வஹித்துவிடலாம்' என்று கைபோனபடியெல்லாமெழுதிவருகிறார். ஐயோ பாவம்!

திருமடல்களைப் பல பாட்டுக்களாகப் பிரிக்க சாஸ்த்ரீயமான உபபத்தி லவலேஶமாவது தேறிவிட்டாலும் நம் ஸ்வாமி ஜீவநஸந்யாஸம் பண்ணிவிடுவதாக ஶபதம் கூறியிருக்கும்போது இவர் எடுத்துக் காட்டும் ஸமாதானங்கள் சப்பைசாடியாக இருக்கலாமா? நம் ஸ்வாமியின் நூல்போல ஸபக்ஷர்களோடு விபக்ஷர்களோடு வாசியற ஒவ்வொருவரும்

கன்னி லொற்றிக்கொள்ளும்படியாகவன்றோ இருக்கவேண்டும். திருமடல்களை 40–78 ஆகப் பிரிக்கத் தடையில்லையென்னுமிவர் காட்டும் உபபத்திகளினழகைக் காண்போமினி.

### 16. D. T. T.-யின் அஸம்பத்தப்ரலாபங்கள்.

அச்சிட்டவர் எவரோ கோடுகள் போட்டிருக்கிறாராம், லக்கங்களும் போட்டிருக்கிறாராம். இது ஒரு பெரிய ப்ரமாணமாம். கோவில்களில் ஸேவிக்கிற க்ரமம் என்று ஒன்று காட்டுகிறார். இதெல்லாம் ஸ்ரீஸ்வாமியின் தத்வஸாரத்தில் பொடிபொடியாய்ப் போன விஷயங்களல்லவா? "சென்ற துர்மதிக்கு முன்துர்மதி வருஷத்தில்" என்று தொடங்கி யெழுதியிருப்பதும் என்றைக்கோ மாண்டுபோன ஸர்த்தாவை நினைத்துக்கொண்டு அழுகிற விதவையின் கதையே. மாம்பலம் ஸ்வாமி விஸ்தரவீதியின்றிக்கே வெளியிட்டிருப்பதில் திருமடல்களை அஸம்பத்தமாகப் பிரித்தாலுங்கூட இப்படித்தான் பிரிக்கமுடியுமேயொழிய இதற்குமேல் லக்கம் தேறும்படி பிரிக்கமுடியாதென்று கண்ணாடிபோல் காட்டியிருக்கிறாரே; இப்படி 'இதோபாரீர்' என்று இவரொரு கண்ணாடி காட்டட்டுமே. "இதோ 40–78 பாட்டான திருமடல்கள் என்று பிரித்துக்காட்ட போக்யதையற்றவர் எங்ஙனம் வெளிவருகிறார்?

"இம்மடல்கள் யாப்பிலக்கணப்படி ஒவ்வொரு பாட்டாகவே யிருக்க வேண்டுமென்கின்றனர். அதைப்பற்றி இப்போது விமர்சம் அநாவச்யகம். அநுஸந்தானத்தில்..........."

என்று ஏதோ ஆகாச நாட்டியமாக எழுதுகிறார். இதற்கெல்லாம் ஸமூல நிர்மூலனம் 6 மாதங்களுக்கு முன்னமேயாயிருக்க "ஶவஶரீரசுசாவதிகுதமு" என்னும்படி எதுக்கெழுதுகிறாரிவர். காலாயிரத்தில் ஒவ்வொரு பாட்டையும் இரண்டு பிரிவாக்கி ஸேவிக்கிறார்களெங்கும். அதனால் ஒருபாட்டு இரண்டுபாட்டாய்விடுமோ? திருப்பல்லாண்டு தொடக்கத்தில் இரண்டு பாட்டுக்களை ஒரே பாட்டான பாவனையுடன் ஸேவித்து வருவதனால் அவை ஒருபாட்டாய்விடுமோ?... இத்தகைய கேள்விகள் தத்வஸாரத்தில் மலிந்துள்ளன. ஒன்றுக்காவது பதில் சொல்லவல்லவரோ இவர்? மொநடிது தேஶத்திலிருந்து இன்றுதான் கப்பலில் வந்திறங்கினவர் போலன்றோ இவர் எழுதுகிறார். இவரை ஒரு ஸபையில் நிறுத்தி ஒரு பாட்டுச் சொல்லுமென்றால் இவர் படும்பாட்டைக் காணவேண்டுமே யல்லது வாய்திறக்கத் திறமை யற்றவரென்பதை அறியுமுலகெல்லாம் யானேயுமல்லேன். அவ்வளவுமன்றி, தமிழ்ப்பாட்டுக்களால் திவ்யதேசங்களை அபவித்ரமாக்கி விட்டார்களென்று ஒரு நூலில் கூசாமலெழுதியிருக்குமிவர் இந்த விசாரத்தில் தலையிட ப்ரஸக்திலேஶமேனுமுண்டோ?

### 17. அஸ்தானே அதிகப்ரஸங்கம்.

இராமாநுச நூற்றந்தாதிக்கு திவ்யப்ரபந்தங்களில் சேர்க்கையைத் தென்கலையார் ஸஹிக்கவில்லையென்றும், பிராட்டிக்கு ஈச்வர கோடியில் ப்ரவேஶத்தை ஸஹியாமை இதற்கு உவமையென்றும், ஆகவே இவர்கள் ஸம்ப்ரதாய குத்ருஷ்டிகளென்றும் இப்படி தலைகால் தெரியாமல் துள்ளிவிழுந்து தத்தளிக்குமிவர் நமிரவஹநீய:, சவிதுஶொஅநீய:. நேற்று காலை சண்டைக்காக திவ்யத்ரய ஸம்பந்தம் கொண்டாடவந்த வகுப்பினரா இதை யெழுதுவது! இன்னமும் திருவாய்மொழி யென்னத் தெரியாமல் திருவாமொழி யென்றே சொலித் திரிகிறாரே! இராமாநுச நூற்றந்தாதியை திவ்யப்ரபந்தத்தில் சேர்ப்பதாவது என்ன? சேர்க்காமையாவது என்ன? சொல்லுமையா! என்றால் வாய்திறக்கவல்லரோவிவர்? முதலாயிரம், இரண்டாவதாயிரம், மூன்றாவதாயிரம், நான்காவதாயிரம் என்ற பாகுபாடுடைய திவ்ய ப்ரபந்தத்தில் நூற்றந்தாதியை மூன்றாவதாயிரத்திலே சேர்த்தும், திருவாய்மொழியைப்

போலே இதையும் பஞ்ச ஸம்ஸ்காரமான பிறகே ஓதவேணுமென்கிற நிர்ப்பந்தம் வைத்தும், மற்றுள்ள ஸகல திவ்ய ப்ரபந்தங்களுக்கும்போலவே இதற்கும் அநத்யயந நிர்ப்பந்தமிட்டும், ஸம்க்ஷேபமாகக் கோயில் திருவாய்மொழி ஸேவித்தாலும் இராமாநுச நூற்றந்தாதியைப் பூர்த்தியாக ஸேவிக்கவேணுமென்கிற நிர்ப்பந்தம் விதித்தும், நூற்றந்தாதி வியாக்கியானம் ஸேவியாமல் ஶாவத்விஷய காலக்ஷேப சாத்துமுறை செய்யக்கூடாதென்று நியமமிட்டும், ப்ரபந்நகாயத்ரியென்று வ்யபதேஶமிட்டு நித்யாநுஸந்தானத்திற் கொண்டும் இதில் நிகரற்ற ஆதரவுகாட்டி வருகின்ற தென்னாசாரியர்களை இந்த ஸவஹம்ஸம் தூஷித்தாலென்ன? ஹூஷித்தாலென்ன? நாலாயிரம் பாட்டென்கிற லக்கத்தில் ஒரு பூர்வாசாரியரும் நெஞ்சு செலுத்தினதில்லை யென்பது கல்வெட்டாயிருக்க, லக்க விசாரத்திற்கும் நூற்றந்தாதி சேர்த்திக்கும் என்ன ஸம்பந்தம் என்பதைக்கூட அறியகில்லாததன்றோ இவ்வஸூயாபிண்டம்.

## 18. பிராட்டியின் ஈச்வரகோடிப்ரவேஶம்.

முமுக்ஷுப்படியில் (1—42.) "ஸர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே யிருக்கும் மாதாவைப்போலே ப்ராப்ய ப்ராபகங்களை விடாதே யிருக்கு மிருப்பு." என்கிற சூர்ணிகையை வியாக்கியானிக்க அவதாரிகையிட்டருளும் மணவாளமாமுனிகள் "ஈச்வரசேதந வாசகங்களான அகாரமகாரங்களிரண்டிலும் பிராட்டிக்குண்டான அந்வயத்தை ஸதிருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார்" என்றுரைத்தருளினர். நியாயஸித்தாஞ்ஜந வியாக்கியானத்திலே ரங்கராமாநுஜ ஸ்வாமி ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு ஜீவகோடி ப்ரவேஶந்தான் உரியதென்று ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளார். ஸ்வமத மின்னது, பரமதமின்னது என்று ஒரிழவுமறியாதவிது மஹாசார்ய மணிகளை ஸம்பிரதாய குத்ருஷ்டிகளென்று அகாண்டே நிந்திப்பதனால் * நிஜதோஷம் நிஜகுணஷவி உபகுணதோஷ ஸமதோஷபணி * என்கிற ஸங்கல்ப ஸூர்யோதய ஸூக்திக்கே இலக்காகி யொழியட்டும்.

## 19. திருமடலைப்பற்றின முடிவு.

"நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே" என்றவர்கள் அர்வாசீநர்கள் என்கிறது D. T. T. இது ஸத்யமானது. இந்த வாழியை நம் ஸ்வாமியெடுத்துக் காட்டியிருக்கவில்லை. மாம்பலம் ஸ்வாமி காட்டியுள்ளார். இந்தவாழி எப்படி அர்வாசீநமோ அப்படியே "இம்மூன்றில் பாட்டிருநூற்றிருபத்தேழிசைத்தான் வாழியே" என்கிற வாழியும் அர்வாசீனமென்பதையும், அவ்வளவோடுமன்றி அத்யந்தம் அஸம்பத்தமென்பதையும் நம் ஸ்வாமி பலகால் வெளியிட்டிருக்கிறார். 1914 ஆம் வருஷத்தில் (அதாவது இற்றைக்கு 46 ஆண்டுகட்கு முன் ஸ்ரீ ஸ்வாமியின் திவ்யப்பிரபந்த திவ்யார்த்ததீபிகையுரை முதன்முதலாக அச்சிடத் தொடங்கினது. அதில் விரிவான முகவுரையில்,

> "இப்போது அச்சிடுவிக்கப்பட்டுள்ள ஆழ்வார்கள் வாழித்திருநாமங்களை அபியுக்த ஸார்வபௌமரான அப்பிள்ளையருளிச் செய்தாரென்பர் இலக்கணநெறியறியாதார்"

என்று எழுதப்பட்டு, உடனே அதை விவரிக்கும்போது

> "அவ்வாழித்திருநாமங்களில் இலக்கணநெறிக்கு இணங்காத அம்ஶங்களைக் கூறியிருப்பதுந்தவிர, அவற்றிலுள்ள பல அடிகள் யாப்பிலக்கணத்திற்கு எதிராகக் காணப்படும்"

என்று எழுதப்பட்டு, அதையும் விவரிக்கும்போது "இம்மூன்றில் பாட்டிருநூற்றிருபத்தேழிசைத்தான் வாழியே" "இலகு திருவாய்மொழியாயிரத்தொரு நூற்றிரண்டுரைத்தான்

வாழியே" என்கிற அஸம்பத்தங்களான அடிகளை யெடுத்துக்காட்டி "இலக்கணம்படியாத சிலர் எழுதிவைத்த இவ்வாழித்திருநாமங்களை அப்பிள்ளையருளிச்செய்தாரென்பது அஸாது" என்று முடித்திருக்கிறார். ஆக, ஆசார்யபீடஸ்தர்களில் ஒருவரும் திருமடல்களைப் பல பாட்டுக்களாகப் பிரிக்கவில்லையென்பது ஸர்ஜிதமான விஷயம்.

வாக்யங்களின் நடுவில் பாட்டு முடிந்துவிட்டதாகச் சொல்லுவது மிகவும் அஸங்கதம். இதற்கு எந்த ப்ரதிபந்தியும் இணங்காது. "வடமொழி வேதத்தில்" என்று தொடங்கியும் "சாந்தோக்யோப நிஷத்தில்" என்று தொடங்கியும் எழுதப்பட்டுள்ள அக்கிலி பிக்கிலி ஜ்ஞான பரீவாஹங்களான விஷயங்களை நம் ஸ்வாமி அலசியலசித் தொலைப்பர்.

## 20. D T. தாதாசார்யருக்கு ஸதுபதேச ஸூக்திகள்.

1. சாஸ்த்ரவாஸனையே யில்லாதவராய் எழுதுகிறீரே; "ஒவ்வொரு அடியின் நடுவே பாட்டின் முடிவு இருக்கலாமோ வெனில்" என்று கேட்டுக் கொண்டு "இரண்டிரண்டு வரிகளை ஒவ்வொரு பாட்டாகக் கொள்கின்ற பக்ஷத்திலும் இலக்கண விரோதம் துல்யம்" என்று எழுதுகிறீர். இரண்டிரண்டு வரியை ஒரு பாட்டாகக் கொண்டதும் தவறு, மிகத் தவறு என்று ஸ்வாமி பன்முறையும் எழுதியிருக்க, ஒருதப்பைக் கொண்டு மற்றொரு தப்பை ஸ்தாபிக்கப் பார்ப்பது மாஸ்த்ரஜ்ஞக்ருத்யமா? இஃதொன்றுக்கு பதில் சொல்வீரா?

2. "அறிவிருந்தால் ஆராய்ந்து தெளிய வேண்டும்" என்கிறீர். எந்த அறிவைக் கொண்டு எதை ஆராயவேணு மென்கிறீர்! ஸேவாகாலக்ரமம் எதற்கும் ஸாதக மாகவோ பாதகமாகவோ ஆகமாட்டாதென்று ஸ்வாமி நிபுணநிரூபணம் செய்திருக்க, தத்தகபித்தக வென்றெழுதுகிறீரே; அறிவுநடையாடும்நாட்டிலே வாஸமிருப்பதாகத் தெரியவில்லையே!

3. "நடுப்பகலில் காயும் ஸூர்யனைப் பார்த்து இவன் ஸூர்யனன்று என்று சொல்லுபவன் போல" என்று எழுதுகிறீர். இந்த உவமை எதற்குச் சேரும்? பிரபந்தசாரம் பட்டம் பகல் ஸூர்யனைப் போல் ஜ்வலிப்பதாகக் கருதியெழுதுகிறீர். கேளும். ஸூர்யனைப் பார்த்து ஒருவன் இவன் ஸூர்யனல்லன் என்று பறை சாற்றினால், ஒருவர் தப்பாமல் அனைவரும் "இவன் உன்மத்தன்" என்று நிச்சயித்து அவன் பேச்சுக்குக் காது கொடாமலும் வாய் திறவாமலும் போவர்களே யல்லது அதற்கு பதில் சொல்ல ஒரு விவேகியும் முன் வரமாட்டான். நீங்கள் அப்படியிருக்க முடியாமல் பிரபந்தசாரம் போய்விட்டதே யென்று அலறியழுது மூலைக் கொருவராகக் கிளம்பி அநாமதேயத்துண்டுக் காகிதங்களை வெளியிடுவதும் அக்குமிக்கு மோடி * த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய த்வாமேவ சரணம் கத: * ஆகி, வீண் வம்பு வசவுகளில் கைதேர்ந்த உம்மைக் கொண்டு வெற்றி பெறப் பார்ப்பதும் எதுக்கு? ஸ்வாமியின் தத்வஸாரத்தைக் கண்டு தத்துவ முணர்ந்தவர்கள் எத்தனை பேர்கள் தெரியுமோ!

4. "பூர்வாசார்யர்கள் ஸர்வஜ்ஞர்கள்; நமது அஜ்ஞானத்தைக் கொண்டு அவர்களுடைய கருத்தைக் காண்பது அரிதே" என்ற உமது வார்த்தை யுக்தமே. திருமடல்களை அஸம்பத்தமாகப் பலபாட்டுக்களாய்ப் பிரித்தவர்கள் பூர்வாசாரியர்களல்லர் என்று பெருவிளக் கேற்றிக் காட்டியிருந்தும் சருக்கி விழுகிறீரே. ஸர்வஸம்ப்ரதிபந்நமான விஷயங்களில் விரோதம் விளைந்து யாவரும் திகைக்க நேர்ந்தால் அப்போதன்றோ சொல்ல வேண்டிய வார்த்தையிது. அஸம்பத்த ப்ரலாபங்களுக்கா இந்த வார்த்தை?

5. "ஸம்பிரதாய ப்ரதீபத்தி லெடுத்துக் காட்டினேம்" என்று இடையில் பெருமையாக ஏதோ எழுதிக் கொள்ளுகிறீர். கண்ணனுடைய் அதிமாநுஷ சரித்திரங்களில் "பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும் இறைப் பொழுதில் கொணர்ந்து கொடுத்ததாக" ஒரு சரித்திரமும், "மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை உருவுவே கொடுத்ததாக" மற்றொரு சரித்திரமும் காண்கிறது. இங்ஙனே, பிறந்தக்ஷணத்திலேயே மாண்டொழிந்த உமது அபத்தச் சுவடிகளை மீட்டுக் கொணர்ந்து கொடுக்க அந்த [illegible]னுமாகாதே. அன்றன்றே முடிந்து தொலைந்து போனவற்றுக்கெல்லாம் இன்னமும் உயிர் இருப்பதாக வைத்து, 1. கோதை போலும். 2. ஸர்வ சக்தி. 3. 4. ஸஜ்ஜநாராதனமிரண்டு. 5. ஸம்ப்ரதாயப்ரதீபம். என்றிப்படி அடுக்குவதில் ஆரே மயங்குவார். [illegible]மடையாத காகிதம் ஒன்றுண்டோ உம்மிடத்து?.

6. ஸப்ததிரத்நமாலிகையையும் வைபவப்ரகாசிகையையும் பற்றி ஸ்ரீஸ்வாமி எழுதியிருப்பவை உலகறிய நின்றன. ஸ்வாமியாலெழுதப்பட்டு [illegible]மெங்கும் பரவியிருக்கின்ற 'தானே யெழுதிய தன்சரிதை'யில் பக்கம் 333ல், 128, 129. என்னும் லக்கங்களின்கீழ் இவற்றைப்பற்றி ஸாரமாகவும் தெளிவாகவும் எழுதியுள்ளவற்றுக்கு விடையிறுத்துவிட்டன்றோ இந்த [illegible]ங்களை நீர் வைத்துக்கொள்ளவேணும். அதற்கு வழி ஏது?

7. "பிரபந்த ஸாரம் தேசிகன் காலம் முதல் அநுஸந்திக்கப்பட்டுவருகிறது" என்கிறீர். அவர் திருநாட்டுக்கெழுந்தருளியபின் நானூறாண்டுவரையில் நீங்களிருந்தவிடமே தெரியவில்லை யென்றும், உங்களுடைய [illegible]வரமே இன்னதென்று தெரியவில்லையென்றும் சிலாவிகிதம் செய்திருக்க, இவ்வரண்யருதிதம் எதுக்கு? உமக்கு ஒருபாட்டுத்தெரியுமா? 'இது தேசிகக்ருதிதான்' என்று ஸ்தாபித்துவிட்டீரானால் உம்மையும் விக்ரஹமாக வைக்கத் தடையிராதே. பேர்க்கவும் போராத ஆபத்துக்களிலே கிடக்குமதனை உத்தாரணம் செய்ய [illegible]

8. பிரபந்தசாரம் தேசிகக்ருதியே யென்பதை ப்ர. அ. ஸ்வாமியே கீழ்நாள்களில் ஒப்புக்கொண்டமை தோற்ற எழுதியிருக்கிறரென்று இதையொரு பெரிய ப்ரஹ்மாஸ்த்ரமாக மற்ற பேதையர்களைப்போலவே நீரும் எழுதுகிறீர். ஆராய்ச்சிதோன்ற [illegible]ஸக்தியில்லாத காலத்தில் அவரவர்கள் எழுதிவைக்கும் விஷயங்கள் ஆழ்ந்து ஆராயுங்காலங்களில் அபவதிக்கப்படுவது [illegible]மே யென்பதை ஸ்வாமி பலபல் உதாஹரணங்களைக் காட்டி வாய்திறக்க இடமின்றி எழுதிவைத்திருந்தும், அதைப் பார்த்திருந்தும் இதை விடாமல் பற்றிக்கொண்டு பேசுவதனால் பேதைமையே பலிக்கும். விமர்சத்தினால் கருத்தை மாற்றிக்கொள்வதற்கு தேசிகனன்றோ [illegible].

9. பிரபந்தசாரம் பதினேழாம் பாட்டில் ஓரோருவர் என்கிற அபத்த [illegible]த்தை ஸமர்த்திக்க 'ஓரோன்றொன்று' என்கிற வாய்பாட்டைக் காட்டுகிறீர். நீர்படும் பாட்டை என் சொல்லுவது! சாகுந்தள நாடகத்தில் "ணவெக்கியோ [illegible] இமாஎ ணபுச்சியா பந்தா, எக்கக்கமெவ்வ சரீசே ஹணுமி கிம் எக்க எக்கஸ்ஸ" என்கிற ச்லோகத்தில் இருமுறையுள்ள எக்கக்க—எக்க எக்கவை யெடுத்துக்காட்டியிருக்கலாம். ரகுவம்சத்திற்கு மேல்வகுப்பில் செல்லப் பெருமையினாலே அது தெரியாது போலும். "சிறொன்று தாப்புல்........ஒரொன்றுதானே" என்கிற இதையும் உமக்குச் சொல்லிக் கொடுத்திலர். "[illegible]" என்று நித்யாநு ஸந்தானம் செய்வீராக.

10. மூக்கும் காது மறுப்புண்டு கதறியோடி இலங்கை சென்ற சூர்ப்பணகையினால் கிளப்பப்பட்ட ராவணன் மாரீசனிடம் ஓடிவந்து தனக்கு உதவி செய்யப் பலவாறு வேண்டினான். அவன் பட்டவனுகையாலே * ஸத்யேயம் ஹிதம் தேஜ: * என்று உண்மையை வெளியிட்டு மறுத்தான். உன்னை வதம் செய்வேனென்றான். இவன் கையில் கொலையுண்டு போவதிற்காட்டிலும் இராமன் கையால் தொலைந்து போவோமென்று துணிந்து வந்தான். உண்மையில் இதே ரீதியில் நீரும் வந்திரந்தோ! உத்தமூர் வீரராகவாசார்ஸ்வாமி போல்வார் இங்ஙனே துணிந்து வருவார்களா? அடுத்தபடியாக மதுராந்தகம் வீரராகவாசாரியர் வருவர் போலும். யார் வந்தாலும் வ்யூதத்திற்கு உயிர்ப்பிச்சையளிக்க முடியாதே.

## 21. "முக்கிய அறிவிப்பு" என்றதை விமர்சித்தல்.

முடிவில் இவர் சில விஷயங்கள் தெரிவிக்கிறார். அதை விமர்சிப்போம். இக்காலத்தில் ஸ்ரீமத் வேதமார்க்கம் நாளுக்குநாள் குன்றிவருவதால் அதை ஸமுத்தாரம் செய்யவேண்டியது ஆஸ்திகர்களுக்குக் கடமையாயிருக்க அதைவிட்டு இந்த அவாந்தரச் சண்டைகளில் சிலர் தலையிடுவது தகாதென்று உபதேசிப்பவர்போல முதல் விஷயமெழுதுகிறார். இதை எழுதுவதற்கு இவர் அதிகாரியல்லவே. நம்முடைய ஸ்வாமியின் தேஜோவிசேஷத்தினாலும் ஸ்வாமி மடாதிபதிகளுக்கு மேலாகவும் அல்லும்பகலும் ஆற்றிவரும் பணிகளினாலுமே நமது நாட்டில் ஸ்ரீமத் வேதமார்க்கம் தழைத்தோங்கிவருகின்றதென்பதை மஹநீயர்கள் உள்ளபடியுணர்ந்து உகந்து எழுதியிருக்கிறார்கள். ஸ்ரீ உ. வே. வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் முதலான சில மஹான்கள் ஆஸ்திக வுலகின் தௌர்பாக்கியத்தினால் மறைந்துபோனவர்கள் நம் ஸ்வாமியைப்பற்றி யெழுதியிருப்பவை யிருக்கட்டும். நமது ஸௌபாக்யவிசேஷத்தினால் ஜீவித்திருக்கும் பல மஹான்களில் தலைவரான ஸ்ரீ உ. வே. (ஸர்.) எஸ். வரதாசார்யஸ்வாமி நம் ஸ்வாமியின் பணிகளைப்பற்றி யெழுதி வெளியிட்டிருக்குமவை வாசாமகோசரம். அவருடைய் மிக விரிவான கட்டுரையில் ஏழெட்டு வரிகளைமட்டும் இங்கெடுத்துக் காட்டுவோம்;

> "ஹிந்து மதத்தை, முக்யமாக ஸ்ரீராமாநுஜரின் வைதிக ஸித்தாந்தத்தைப் பரவச்செய்தற்பொருட்டு ஸ்ரீ உ. வே. மஹாவித்வான் அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஆற்றிவரும் பணியின் இயல்பையும் அதன் அளவையும் நான் சிறிது நெருங்கிய பழக்கத்தினால் அறிந்துகொண்டிருக்கிறேன். நாகரீகமுறையில் படித்திருப்பவர்கள் மனத்திலேயும் ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்தை நன்றாக வேரூன்றும்படி நிலை நாட்டிவரும் நம் P. B. A. ஸ்வாமியிடத்தில் நம் தேசத்தவர் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளார்களென்கிற உணர்ச்சி எனக்கு வெகுகாட்களாக வுண்டு.........இந்த ஸ்வாமி பலபாஷைகளிலும் தேர்ச்சிபெற்று மிகவும் வெற்றிகரமாகச் செய்துவரும் மிகப் பெரியபணிகள் மற்றவர்களால் நெஞ்சாலும் எண்ணமுடியாதவை"

என்றும் இன்னமும் விசேஷமாகவும் எழுதியிருப்பவர் ஒருநாளும் மாச்சரியம் தலைகாட்டப்பெறாத மஹநீயர்களில் தலைவரான எஸ். வரதாசார்யஸ்வாமி. நம் D. ராமஸ்வாமி ஐய்யங்கார் எழுதியிருப்பவைகளும் இதற்குக் குறைந்தவையல்ல. ஆனால் ஒரு வாசியுண்டு; (என்னவென்றால்;) "நாம் எழுதினது போதாது; இன்னமும் எவ்வளவோ எழுதவேண்டும்" என்கிற குதூஹலத்துடனிருப்பவர் ரிடைர்ட் பெடரல்கோர்ட் ஜட்ஜான அந்த வரதாசார்யஸ்வாமி. "ஐயோ! வினைவதறியாமல் ஆத்மவஞ்சனையில்லாமல் எழுதிவிட்டோமே!" என்கிற அநுதாபவுணர்ச்சியுள்ளவர் D. R. ஸ்வாமி. ஸௌர்யனை தேஜஸ்வி யென்று இன்னாரின்னார் சொன்னாரென்று காட்டவேண்டியதுண்டோ? பூர்வாசார்ய க்ரந்தரத்னங்களின் பாதுகாப்புக்கா

மாதந்தோறும் பதினுயிரக்கணக்கிலன்றோ பணச்செலவு செய்துவருகிருர் நம் ஸ்வாமி. சென்னை நகரில் 8 மாதங்களுக்குமுன்பு இருபதினுயிரம் ரூபா செலவில் வாக்யஜ்ஞம் நடத்தி வைத்தார். நாளை எம்பெருமானுர் மஹோத்ஸவத்தில் விசிஷ்டாத்வைத வித்வத் பரிஷத்து நடத்தப்போகிருர். பிறர்க்கும் இவர்க்கும் நெஞ்சாலும் நினைப்பரிய இத்தகைய மஹத்தான காரியங்களில் இவர் வயிறு பிடியுண்ணவன்றோ பிறந்திருக்கிருர்.

22. "பரித்ராணுய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்—ஸம்பவாமி" என்று பணித்த கீதாசார்யன் செய்யுமது போல நம் ஸ்வாமியும் ஸ்மதரக்ஷணத்தோடு தூர்மதசிக்ஷணமும் செய்துவருவது அஸூயுவானவிவர்க்கு அருந்துதமா யிருந்தாலும் உலகுக்கு மஹோபகார மென்பதை உயர்ந்தவர்களன்றோ உறுதி செய்து போற்றி வருகிருர்கள். சந்திரோதயம் ஜாரர்க்கும் சோரர்க்கும் வெறுப்பையே விளைக்கும்; அதனுலென்ன? தூர்மதநிரஸந மற்ற ஸ்மத ஸ்தாபனம் காசுக்கு முதவாதே. ஆக, நம் ஸ்வாமி செய்து போரும் ஸ்ரீமத் வேத மார்கப்ரதிஷ்டாபநத்தில் இத்தகைய தூர்மத நிர்மூலனம் ஒரு சிறு சாகையாக விளங்கி வருகின்ற தென்பதை யுணர்ந்து தெளிக. பாம்பு முதலிய விஷஜந்துக்களை யாரும் தேடிச் சென்று நலிவதில்லை. விதிமாண்டு அவையாக ஓடிவந்து நலிந்து தொலைந்து போனுல் இது அவசியமற்ற செயல் என்பாருண்டோ? லோகோபகாரமான் ஒரு காரியத்திலும் ஈடுபட கில்லாத இவர்கள் இங்ஙனே ஸம்ப்ரமித்து அவஜ்ஞை பெற்றெழிவதுதான் அவசியமற்றது. அதவா, இவர்களுடைய பிறவிக்கு இது அவசியமே யென்னலாம்.

23. இனி மற்றெருவிஷயம். மக்களோ மனைவியோ மாதாவோ மரணமடைய அதனுல் மிக வருந்திக் கிடப்பவர்களை ஆச்வஸிப்பிக்க உற்ருருமுறவினரும் ஓடிவருவர்கள். வருந்திக் கிடப்பவர்கள் அவர்களைக் கண்டவாறே மாண்டுபோனவர்கள் மீண்டுவரக்கூடுமென்றும் நினைத்துவிடுவர்கள். ஆனுல் ஓடிவந்தவர்கள் ஒன்றும் செய்ய கில்லாமல் "தஸ்மாத் அபரிஹார்யேர்த்தே ந த்வம் சோசிதுமர்ஹஸி" என்கிற கீதையை நினைப்பூட்டிவிட்டு வயிருரவுண்டு திரும்புவர்கள். அதுபோல 'ப்ரபந்தசாரம் போய்விட்டதே, பாத்ரம் போய்விட்டதே, அது போய்விட்டதே இதுபோய்விட்டதே' என்று கலங்கி யழுமவர்களைத் தேற்றவந்த விவர் "இதற்காக நீங்கள் சிறிதும் கலங்காமலும் கவலைப்படாமலும் கம்பீரமாய் இருந்து வருவதே சேர்ந்த ஆபத்துக்கு மருந்து" என்று உபசாரம் சொல்லி முடித்திருக்கிருர். இது கூடச் செய்திலரென்ருல் மடபதி பெறுவிக்கும் மாஸாசனத்தில் மண்விழுமே.

24. இதற்கு மேலும் ஒன்றெழுதுகிருர்-"தேசிகனையும் அவர் ஸ்ரீஸூக்திகளையும் பற்றிச் செய்யப்படும் வாதங்களில் உண்மையிராது" என்று. இது ஸத்யமாய் இவர் தம்மையே பற்றியது. திருக்குடந்தை ஆராவமுதய்யங்காரென்பவர் 1952ல் வெளியிட்ட ஸ்ரீதேசிக பக்தி தத்வமென்கிற 24 பக்கங்கொண்ட நூலில் இந்த D. T. T. தேசிக ஸூக்தி தூஷணம் செய்திருப்பதைக் கண்ணுடிபோல் காட்டியிருக்கிருர், வசஸ்ஸுதா விஹாரத்தில் தத்வடீகா ஸூக்தியொன்றை இவர் உதாஹரித்து "ஸத்ருஸஸ்ஸ்ரேஷ்வபஹு ஸவாஸஜவஷ்ழ" என்றெழுதி முடித்திருப்பதைக் காட்டி இவர் தேசிகதூஷக ரென்பதை உலகமறிய உணர்த்தியிருக்கிருர். அப்படிப்பட்டவிவர், தேசிகனுக்கு ஓர் அவத்யம் நேரக்கூடாதென்பதற்காகவே உண்மையை வெளியிட்ட நம் ஸ்வாமியை தேசிக தூஷகரென்று எழுதி விடுவதனுல் ப்ரபந்த சாரத்திற்கு யாதொரு ரக்ஷணமும் செய்ததாக மாட்டாதென்பதை விவேகிகள் நன்குணர்வர்கள். .... ....

ஸ்ரீசைல க்ருஷ்ணமாசாரியரெழுதிய பாரிஜாதாபஹரணம் முற்றிற்று.



—:—

# ப்ரபந்தஸாராஸ்வாதிநீ ப்ரஹரணம்

உபயவேத கண்டீரவ. தி. வி. சிங்கராசாரியரெழுதியது.

## முதற்பகுதியின் அவதாரிகை

1. கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் * தேனுகன் பிலம்பன் காளியனென்னும்தீப்பப் பூடுகளடங்கவுழக்கினபோது அவையெல்லாம் ஒருகாலே வந்து மடிந்தனவில்லை. “[illegible] ” என்று யாதவாப்யுதயத்தில் ஸாதித்தபடி ஸமய விசேஷங்களில் ஒவ்வொன்றுக வந்து மடிந்ததாகவே ஸ்ரீ பாகவதாதிகளில் காண்கிறோம். அவ்வண்ணமாகவே, திருவரங்கம் திருமலதாதாசாரியர் சென்றவுடனே திருமலை சங்கபுரம் ஈகை வேதாந்ததேசிக தாதாசாரி யென்பவர் தலைகாட்டுகிறார். இவர் ப்ரபந்தஸாராஸ்வாதிநீ என்று பெயரிட்டு 14 பக்கத்தில் ஒன்று அச்சிட்டனுப்பியுள்ளார். இது ந்ருஸிம்ஹப்ரியா விலும் வெளிவருமோ? அல்லது இந்த தனிப்ரசாரத்தோடு ஸரியோ அறியோம். மேலெடுத்த யாதவாப்யுதயச்லோகத்தில் கம்ஸன் வரவிட்ட ஆஸுரப்ரக்ருதிகளுக்கு “துர்தமாந்” என்று விசேஷணமிட்டார். அதைமட்டும் பார்த்தபோது பக்தர்கள் அஞ்சி நடுங்கும்படியாயிருக் கும். உடனே திருவாப்பாடிக்கு விசேஷணமிடுகிறார் “பராத்ருஷ்யம்—நாதவிஹாரகுப்தம்” என்று. இதனால் என்ன தெரிகிறது? ஸ்வாமி யெழுந்தருளியிருக்குமிடத்திலே துர்தர்கள் எத்தனைவர் திரண்டுருண்டு வந்தாலும் கைக்கொடிப்பொழுதிலும் கண்ணிமைப்பொழுதிலும் தீயினில் தூசாவரென்று தெரிகிறது. துர்தமாந்-ஒருவராலும் அடக்கமுடியாத என்றுபொருள்.

### — பிரபந்தசாரத்தைப்பற்றி $2\frac{1}{4}$ பக்கமே —

2. பதினுலு பக்கமென்று காட்டிய ப்ரபந்தசாராஸ்வாதிநியில் இரண்டேகால் பக்கந் தான் பிரபந்தசாரத்தைப் பற்றியது. அதை அவ்வளவோடு முடித்துவிட்டு “இனி மஞ்ஜு பாஷிணியில் வாஅாடிதாவட்டாபிஷேகம் செய்யப்பட்டவருடைய ஸர்வபங்கம் செய்யப்படு கிறது” என்று தொடங்கி, பொறுக்கமுடியாத வயிற்றெரிச்சலின் பரீவாஹமாய் நிந்தாஸஹஸ்ர மாக எழுதப்பட்டுள்ளது. ஸ்வாமியினுடைய “தானே யெழுதிய தன் சரிதை”யில் பக் கம் 78-ல் ஸ்ரீமத் பரமஹம்ஸ. திருமலை திருப்பதி (வர்த்தமாந) சின்ன ஜீயர் ஸ்வாமி ஸாதித்த ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டி யெழுதியிருப்பவற்றை ஸ்வல்பம் உதாஹரிக்கிறேன்;

### — ஸ்ரீமத்பரமஹம்ஸ சின்னஜீயர் ஸ்வாமியின் திருவாக்கு —

“விளக்கிலே விட்டில்கள் தாமாகவந்து மடிகிறாப்போலே நம் ஸ்வாமியினுடைய பல வகை நூல்களிலே தாமாகவந்து விழுந்து சிலர் எதையாவது ப்ரலபித்து உடனே பங்க மடைந்து பிறகு சிறிதும் கைகாலாட்டமுடியாமல் தணறுகிற காலத்திலே எதையாவது பதில் சொல்லிப் பிழைக்கவேணுமே; அப்போது ‘இன்னவருஷத்தில் இன்ன தேதியில் ஜாக் ஸன்துரை எழுதிய இன்ன நம்பருள்ள ஜட்ஜ்மெண்டைக் காண்க’ என்று எழுதுவதும், அந்த ஜட்ஜ்மெண்டைப் பிரசுரம் செய்வதுமாய் இதையே தங்களுடைய வெற்றிக்கொடியாக நாட்டிவருகிறார்கள். க்ராந்திக விஷயங்களில் பிரதிவாதம் செய்து பங்கப்பட்டவர்களனை வர்க்கும் மநஸ் ஸமாதானத்திற்கு அந்த ஜட்ஜ்மெண்டு மிகவும் கைகொடுக்கிறது. ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் * [illegible] * என்று ஸாதித்த கணக்கிலே தூஷணருசியுடையார்க்கு இது மஹத்தான ஆலம்பனம் இத்யாதி.”

3. இத்தகைய தூஷணங்களினால் விஷயங்களுக்கு விடை வந்துவிட்டதாக ஆகாது. மஞ்ஜுபாஷிணீ பத்திரிகையை நம் ஸ்வாமி நிறுத்தி முப்பது வருஷமாகிறது. அதன் பிறகு வைதிகமனோஹரா என்கிற பெயரால் ஸம்ஸ்க்ருதமாஸிக பத்ரிகையை நடத்திவருகிறார் ஸ்வாமி. இது ப்ரக்ருதம் அநபேக்ஷிதம். இதைப்பற்றின விமர்சம் பிறகு எடுத்துக்கொள்வோம். பிரபந்த சாரத்தைப்பற்றி இரண்டேகால் பக்கம் இவரெழுதியிருப்பதில் அல்பஸாரமுமில்லை, அத்யந்தமஸாரம்—என்று ஸாரமாக நிரூபிக்கிறோம்.

ப்ரதமகபளே மக்ஷிகாபாத:

4. இந்த ஈகை வேதாந்த தேசிக தாதாசாரியரென்பவர் ஒரு பாஷையிலும் ப்ரவேசமுடையவராகத் தெரியவில்லை. அபசப்தங்களை அதிகமாக எழுதியுள்ளார். வல்லினறகாம் இடையினரகரம் முதலிய சிறு விஷயங்கள்கூட வறியாமல் பண்டிதர்கள் அருவருக்கும்படி யெழுதுகிறார். இத்தோடு அச்சுப்பிழைகளும் அபரிமிதம். முதல் வரியிலேயே 'வேதார்த தேசிக' என்று தப்பெயரைக் குறிக்கிறார். முதல் பக்கத்தில் முடிவில் "ஒரு எழுத்தை ஜீயர்க்குறைத்து நிர்வஹித்ததைக்காண்க" என்கிறார். 'எந்த ஜீயர்க்கு யார் என்ன வுரைத்தார்?' என்று கேட்டால் திசைமுகனும் நிற்பர். 'ஜீயர் குறைத்து' என்று இவர்க்கு விவக்ஷிதமாயிருக்கலாம். அதை 'ஜீயர்க்குரைத்து' என்றெழுதுகிறார். இப்படிப்பட்ட அஸம்பத்தங்களை இத்துண்டுப் பிரசுரத்தில் அநவதிகமாகக் காணலாம். இவர்களுடைய ஸம்பிரதாயத்தில் பண்டிதர்கள்—சிறந்த விவேகிகள் இல்லாமற்போகவில்லை. பல பலருளர். ஆனால் அவர்களெல்லாரும் "[illegible]" என்பதை யநுஸந்தித்தே * நாஹம் நாஹம் நசாஹம் * என்று அஞ்ஜலி பந்தத்துடனே விளங்காநிற்க "[illegible]" என்று விபீஷணாழ்வான் இகழும் படியான வகுப்பிலே சேர்ந்த சிலர் ஆத்திரம் பொறுக்கமாட்டாமல் ஸாஹஸிகர்களாய்க் கிளம்பி எதையாவது எழுதி ஆச்வஸிக்கப் பார்க்கிறார்கள், மஹா விவேகிகள் தடுத்தாலுங்கூட இவர்கள் நிற்கமாட்டாமல் விளைவதறியாமல் விஹரிக்கிறார்கள். நாடகத்தில் வெளிவந்து ஆடவேண்டியவர்களெல்லாம் ஆடித்தானே யாகவேண்டும். ஆடட்டும். அந்த ஆட்டமெல்லாம் ஆகாச தாண்டவமாய் [illegible] மே யென்பதை ஸஹ்ருதயர்: மஹாமதிகள் உணருமாறு விஷயங்களை விளக்குகிறோம்.

பெயர்ப் பொருத்தத்தின் பொருத்தமின்மை.

5. பெயர் பொருத்தம் என மகுடமிட்டு 9 வரி எழுதியுள்ளது. ப்ரபந்தசாரமென்பதில் ப்ர என்று முதலிலிருக்கக்கூடாதென்றதற்கு மறுப்பாமிது. "இணைந்தியல் காலை யரலக்கிரமும்" என்ற நன்னூலின்படி பிரபந்த மென்ன வேண்டுமே யொழிய ப்ரபந்த மென்னக் கூடாது என்கிற பூர்வ பக்ஷம் மட்டும் ஒழுங்காக அநுவதிக்கப்பட்டிருக்கின்றது. மேலே "தனிசீர் வண்ணம்" என்று தொடங்கி யெழுதியுள்ள ஸமாதானம் அஸ்தானே; ஸர்வாத்மநா அஸ்தானே. இராமாநுச நூற்றந்தாதிக்கு நம் ஸ்வாமி யெழுதி வெளியிட்டுள்ள திவ்யார்த்த தீபிகை யுரையில் (பாட்டு 43ல், பக்கம் 91ல்) உள்ள விளக்கமாவது.

> "உமக்கு+யான், உமக்கியான். "யவ்வரின் இய்யாம்" என்பது நன்னூல். "நேர்பதினாறே நிரைபதினேழென் றோதினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே" என்ற இலக்கணத்திற்கு மாறாக இப்பாட்டின் மூன்றாமடியில் (ஒற்றொழித்துப்) பதினெட்டெழுத்து வந்தது என்னெனில்; உமக்கியான் என்றவிடத்தில் ககரத்தின் மேலேறின இகரம் குற்றியலிகரமாகையாலே வண்ணங்

கெடாமைக்குக் கழித்து உடலெழுத்தான ககரத்தைக் கூடவே ஒன்றுவித்துப் பதினேழெழுத்தாகவே எண்ணத்தக்கது. கம்பர் இயற்றிய சடகோபரந்தாதியில் "என்முடியா தேனக்கியாதே யரிய திராவணன்றன்" என்ற இருபத்தொன்பதாம் பாட்டிலும் இப்படியே ப்ரயோகம் வந்துள்ளது காண்க. இந்த நூற்றந்தாதியிலும் மேல் ஐம்பத்து மூன்றும் பாட்டில் "பற்பல்லுயிர்களும் பல்லுலகியாவும் பரன தென்னும்" என்றவிடத்திலும் இங்ஙனமே காண்க."—என்று.

## — வ்யுத்பத்தி நிரூபணம் அயுக்தமானவை —

6. இது மணவாளமாமுனிகளின் உரையிலுள்ள ஸ்ரீஸூக்திகளையே விளக்கினபடி. இதை இங்கு எடுத்துக் காட்டுகிறாரிவர். இதனால் ஈஷத்தும் பலனில்லையே. (1) ஆரம்பத்திலுள்ளது, (2) வடசொல்லாயிருப்பது என்கிற இரண்டையும் நோக்காது எதையாவது எடுத்துக்காட்டிவிட்டால் இதில் யாரே மயங்குவார்? தமிழ் நூற்களில் அப்படியொரு ப்ரயோகமுள்ளதாக [ஆதிபதத்தில்] எடுத்துக் காட்டியன்றோ வாதிகளை வாய்மூடுவிக்கவேணும். அதற்கு வழியில்லையே. யாரைத் தஞ்சமடைந்தாலும் ஒரு பயனும் பெற முடியாதே. திவ்யப் ப்ரபந்தங்களில் சக்கரபாணி யென்றும் சக்ரபாணி யென்றும் வருவதுண்டு. க்ரமம், ப்ரமம், ச்ரமம் என்று தொடங்குகிற வாக்கு பதினாயிரம் விளக்கேற்றித் தேடிப் பார்த்தாலும் கிடைக்காதே. "சங்கர பாக்கர யாதவபாட்ட ப்ரபாகர" என்ற விடத்திலும் ப்ர என்றது ஆதியன்று. ஸமாஸபதத்தின் இடையிலுள்ளது. மேலும் அங்கு "பிரபாகர" என்றே பாடமுள்ளது. அதுதான் பொருந்தும் ப்ரபந்தம் என்கிற வடசொல் ப்ராகிருதத்தில் பபந்தம் என்றாகும். ஆகவே பபந்தசார மென்றால் பொருந்து மென்று ஸ்வாமியே ஒரு நூலில் பலவாண்டுகட்கு முன்பு எழுதியுள்ளார். இது ருஜுவான வழியே. ஆனால் குடிலமதிகளுக்கு இத்தகைய வழி ருசிக்காது. இவ்வழியை இனிப் பற்றுகிறோமென்றால், தாராளமாகப் பற்றுங்கள். மற்ற அவத்யங்களன்றோ பலிஷ்டங்கள். அவற்றையும் கேளீர்.

## காட்டின தாத்பர்யம் அஸம்பத்தம்.

7. 'தாத்பர்யங்காட்டுதல்' என மகுடமிட்டு எழுதியிருப்பதும் மிகத்தவறு. ஸ்வாமி ப்ரபந்தசாரதத்வ ஸார நூலில் (பாரா 36ல்) ப்ரபந்தசார மென்னும் நூற்பெயருக்கு அர்த்தமே கிடையாதென்றும் இது அசட்டுத்தனமாக வைக்கப்பட்ட பெயரென்றும் நன்கு நிரூபித்திருக்கின்றார். இப்பெயருக்குப் பொருள் கூறுவதற்காகவே சென்னையில் திரட்டப்பட்ட பண்டித சபையில் கூடின வடகலைப் பண்டிதர்கள் த்வங்கார ஹுங்கார வஷட்காரங்களோடே ஸபையைக் கலைத்துச் சென்றார்களென்றும் அந்த பாராவிலேயே தெரிவிக்கப்பட்டுள்ளது. "வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் காலத்திலேயே இந்த விசாரம் விளைந்து வழவழ கொழ கொழவாய் முடிந்து நின்றதே என்றுரோருவர்" என்றும் அங்கே யெழுதப்பட்டுள்ளது. இத்தனையும் ஸத்யமே யொழிய எள்ளளவும் அபத்தமன்று. இப்போதிவர் என்ன அர்த்தம் கூறுகின்றாரென்றால் அவரையேதான் நேரில் கேட்டுணரவேணும். ஆழ்வார்களுடைய குண சேஷ்டிதங்களைக் கூறுவதுதான் ப்ரபந்தசாரமாம். இதில் அவருடைய மனமாவது த்ருப்தியடையுமா? "சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை, வெல்லுஞ் சொல்லின்மையறிந்து" என்கிற திருக்குறளின் பொருளை நம் ஸ்வாமியுபந்யஸிக்கக் கேட்டிலரிவர். ப்ரபந்தசாரம் என்கிற நூற்பெயரின் பொருளை நிர்ணயிக்க இவர்கள் சபை கூட்டிப் பரஸ்பரநிந்தையோடே முடித்திட்டார்களென்பதை ஸ்வாமி தத்வஸாரத்

தில் (36-ஆம் பாராவில்) எழுதியிருக்கிறார்; இதுவரையில் பிரபந்தசாரவிசார விஷயமாகத் துண்டுப் பத்ரிகைகளும் சிறுபுத்தகங்களும் வெளியிட்டவர்களில் ஒருவராவது 'இது பொய்' என்று எழுதினதுண்டோ? அவ்வளவு ஸாஹஸம் இன்னும் ஏற்படவில்லை. ஆக, பிரபந்த சார மென்கிற பெயரின் அசட்டுத்தனத்தைக் கொண்டே இது தேசிக க்ருதியன்றென்று எளிதில் முடித்தாயிற்று. தேசிகன் தாம் செய்தருளும் க்ரந்தங்களுக்குத் திருநாமம் சாற்று வதில் அத்விதீய சதுரரென்பது ஸுப்ரஸித்தமாயிருக்க, அவருக்கு வீணான அபக்யாதியை விளைக்கப் பார்க்கவேண்டா. பதினாயிரவர் திரண்டாலும் பொருட்பொருத்தம் இணங்காது.

ஸாமான்யமாகக் கூறினதுதான், தவறுதான்.

8. பிரபந்தசார மென்கிற பெயரிலுள்ள ப்ரபந்தபதம் அருளிச் செயல்களைக் குறிப்ப தாகக் கொள்ளவேண்டியதாகிறதென்றும், பூர்வாசார்யர்கள் திவ்ய ப்ரபந்த மென்பர்களே யல்லது ப்ரபந்த மென்று சொல்லுவதோ எழுதுவதோ கிடையாதென்றும், நவீனர்களே ப்ரபந்தம் பிரபந்தமென்று சொல்லுபவர்களென்றும், ஆகவே பிரபந்தசார மென்கிற பெயரைக் கொண்டும் இந்நூல் நவீன மென்பதைத் திண்ணமாக வெண்ணலாமென்றருளிச் செய்தார் நம் ஸ்வாமி. அதற்கிவர் என்ன பதிலெழுதுகிறாரென்றால்—பூர்வாசாரியர்களும் ப்ரபந்தமென்று கூறியிருப்பதைக் காண்க. என்னுமிவ்வளவேயாம். எந்த இடத்திலே எந்த ஆசாரியர் பிரபந்த மென்றெழுதியிருக்கிறாரென்பதை விவரித்துக் காட்டினாலன்றோ இவருடைய மருளோ தெருளோ விளங்கும். ஆசாரியர்கள் வியாக்கியானம் செய்துகொண்டு போம்போது கீழ்ப்ப்ரபந்தத்திலென்றோ மேல் ப்ரபந்தத்திலென்றோ, இப்ப்ரபந்தத்தி லென்றோ.......இப்படிகளிலே அருளிச்செய்வதுண்டு. இதில் யாதோர் அவத்யமும் கிடை யாது. உத்திஷ்டமான வொரு நூலைக் குறித்து இங்ஙனேதான் எழுதத்தகும். அருளிச் செயல் முழுவதையு முத்தேசித்து எழுதுகையில் பிரபந்தமென்று எழுதவேமாட்டார்கள். பிரபந்தசாரமென்ற விடத்தில் ஏதேனுமொரு நூல் விவக்ஷிதமென்னப் போகாது. திவ்ய ஸூக்திகளான எல்லாவற்றையுமே கருதியது இங்குப் பிரபந்தமென்ற சொல். ஆகவே இது ஆசார்யஸார்வபௌமருடைய திருவாக்கன்று, நவீனர்களுக்குப் பழக்கமான சொல் என்பது முடிந்து நின்றது. பிரபந்தரக்ஷையென்று பெயரிட்டவர் பாங்காக இருக்கிறார்.

9. இந்த வாக்யச்ரேணியிலேயே திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் ஏகப் பிரபந்தமென்று பெரியவாச்சான்பிள்ளை முதலானோர்க்கும் திருவுள்ளமென்று காட்டக் கருதித் தலைகாலில்லாமல் ஏதோ எழுதுகிறார். "திருப்பல்லாண்டில் * சேவடி செவ்விதிருக்காப்பு * என்ற வர்த்தத்தை * உறகலுறகலிலே நிகமித்தார்; * அடியோமோடும் நின்னோடும் * என் கிற பாட்டினர்த்தத்தை * அரவத்தமளியிலே நிகமித்தார் என்று பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானத்திலிருக்கிறதாம். இதனால் இரண்டும் ஏகப்ரபந்தமென்று ஸ்தாபிதமாகிற தாம். திருவிருத்தத்திலிருந்து பல பாசுரங்களை யெடுத்துத் திருவாய்மொழி வியாக்கியானத் திலே ஐககண்டியம் காட்டியருளுகிறார்கள். இது கொண்டு திருவிருத்தமும் திருவாய்மொழி யும் ஏகப்ரபந்தமென்பாரில்லை. இவர்களுடையமருள் இவர்களோடே நிற்கட்டும். இதை தேசிகன் தலையிலேற்றினதோடும் நிற்கட்டும், திருவடிதூஹாஸத்ஜ்ஞாநநிதிகளான ஸதாசார்யர் கள் பக்கலிலும் ஏற்ற முயலவேண்டா. இவ்விஷயத்தில் மேலுமுள்ள அஸம்பத்தோக்திகளைக் கண்ணெடுத்தும் பாரோம்.

### உபதேசரத்தினமாலையின் ப்ரஸ்தாவம்.

10. இத்த ப்ரஸங்கத்தில் உபதேசரத்தினமாலை மணவாள மாமுனிகள் ஸாதித்ததன்று. ஒரு வழிப்போக்கன் எழுதிவைத்தது என்றெழுதுகிறது. 'ஹஹாரவிந்தம் அஸத்' என்றால் ஸாரஸாரவிந்தம் ஸத், என்று அடுத்தபடி சொல்லவேண்டியதுதானே. இதற்கு ஏதோ உக்திவிரோதம் காரணமாகக் காட்டப்படுகிறது. ஸ்வாமி தேசிகனுக்கு ஸர்வதந்த்ரஸ்வதந்திரரென்கிறவிருது ஸ்ரீரங்கநாச்சியார் ஸாதித்ததாக இவர்கள் நவீனமாகக் கல்பித்த சரித்ரபுஸ்தகங்களி லெழுதியுள்ளார்கள். ஸ்வாமி தாமே ஸாதித்திருப்பதோ வென்னில், ஸ்தோத்ரபாஷ்ய முடிவில் "ஊஹனி ஷஉஷி ஷஹியஉ........ஷவஉதஜுஷஉஜு:" என்று, வித்வத்ஸதஸ்ஸிலே வித்வான்கள் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்று தம்மை மதித்ததாக. இது ஸுஸ்பஷ்டமான விரோதம். இந்த விரோதத்தை இவர்கள் ஸமநம் செய்துகொண்டு எம்பெருமானார் தரிசனத்திற்கு வரட்டும்.

### திருநெடுந்தாண்டகமே சரமப்பிரபந்தம்.

11. திருநெடுந்தாண்டகமென்று மகுடமிட்டு எழுதுகையில்—'நாதமுனிகள்' திருநெடுந்தாண்டகம் சரமப்ரபந்தமன்று, பெரிய திருமடல்தான் சரமப்பிரபந்தமென்று தேசிகனுக்கு ஸாதித்ததாகவும் இந்த விஷயத்தில் தேசிகனை தூஷித்தால் நாதமுனிகளையே தூஷித்ததாகு மென்றும் பெரிய ப்ரஹ்மாஸ்த்ரம் தொடுத்திருக்கிறார். இந்த ஒரு ப்ரஹ்மாஸ்த்ரத்தையே கொண்டு விவாதவிஷயங்களெல்லாவற்றிலும் வெற்றிபெற்று விடலாமே இவர்கள். திருப்பல்லாண்டு தனிப் பிரபந்தமன்றென்று நாதமுனிகளே தேசிகனுக்கு கர்ணமூலே ஸாதித்தார்; திருமடல்கள் ஒவ்வொரு பாட்டன்று, பலபல பாட்டுக்களென்று நாதமுனிகளே தேசிகனுக்குக் காதோடே ஸாதித்தார். மெய்யெழுத்தை முன்னேயிட்டு 'ப்ரபந்தஸார' மென்று பாடும்படி நாதமுனியே தேசிகனுடைய செவியிலோதினார்.......என்றிப்படி எளிதாக எழுதி ஒரே வார்த்தையில் இவர்கள் வெற்றி பெற்றுவிடலாமே. இவ்விஷயத்தில் மேலுமுள்ள ஆலாபங்கள் ஏற்கெனவே விரிவாக உத்தோத்தரங்கள்.

### இராமாநுச நூற்றந்தாதியைப்பற்றி.

12. "நூற்றந்தாதி விஷயம்" என்று மகுடமிட்டு எழுதியுள்ள விஷயம் மிகவும் அஸம்பத்தம். நூற்றந்தாதியை அமுதனார்பாடலென்று ஓரிடத்திலும், எம்பெருமானார் தாமே பாடியதென்று மற்றோரிடத்திலும் பிரபந்தசாரத்தில் கூறியிருப்பது அஸங்கதமாகாதாம். ஏனென்றால் உடையவருடைய ப்ரேரணையினால் செய்ததென்று காட்டுவதற்காக அப்படிச் சொன்னதாம். கேண்மின், உடையவர் ஸ்ரீபாஷ்யமருளிச் செய்தது ஆளவந்தார் நியமனத்தினாலென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். அப்படியிருந்தும் "பகவத்யாமுநாசார்ய விரசிதே சாரீரக மீமாம்ஸாபாஷ்யே" என்று யாரும் எழுதிவைக்கவில்லை. தேசிகன் தம்முடைய பல க்ரந்தங்களைப் பலருடைய ப்ரேரணையினால் ஸாதித்ததாக எழுதிவைத்திருக்கிறார். அப்படியிருந்தும் அவரவர்கள் கர்த்தாக்களாக நிர்தேசிக்கப்பட்டிருக்கவில்லை. ஆகவே அஸம்பத்த ஸமாதானமேயிது. உண்மையில் நூற்றந்தாதிக்கு இராமானுசர் ஹேதுகருமல்லர்.

### உபதேசரத்தினமாலையும் அமுதனாரும்.

13. இந்த ஸந்தர்ப்பத்தில் எழுதுகிறார்—உபதேச ரத்தினமாலையில் நூற்றந்தாதிக்குக் கர்த்தாவான அமுதனார்க்கு நாள்பாட்டு ஸாதியாமல் உடையவர்க்கே நாள்பாட்டு இட்டி

ருக்கையாலே நூற்றந்தாதிக்கு உடையவரே கர்த்தாவென்பது மணவாளமாமுனிகளுக்கும் ஸம்மதம்—என்று. இதற்கும் நாம் நின்று பதில் தெரிவிக்கிறோம். மாமுனிகளருளிச்செய்த நாள்பாட்டுக்களெல்லாம் அவரவர்களுடைய திருநக்ஷத்ர பரிபாலன தினங்களிலே தத்தத் திவ்யமங்கள விக்ரஹங்களின் முன்னிலையிலே குழாங்கூடி ஸேவிப்பதற்காக. இவ்வகையில் அமுதனார்க்கு விக்ரஹப்ரதிஷ்டையோ திருநக்ஷத்ர பரிபாலனமோ ஏற்பட்டிருக்கவில்லை. அவர் விஷயமாக நாள்பாட்டு ஸாதித்தால் அதற்கு அநுஸந்தான மில்லாமே போய்விடும். தத்ப்ரபந்த விஷய பூதரான எம்பெருமானார்தமக்கு நாள்பாட்டு இட்டுவைத்தால் பயன்படும் என்று திருவுள்ளம்பற்றியே அத்யந்தஸமுசிதமான ஸரணியைப் பற்றினர் மாமுனிகள். * பூதம் ஸரச்ச * என்கிற ச்லோகப்படிக்கு உடையவர் நம்மாழ்வாருடைய அவயவபூதராகை யாலே அதைப் பற்றவும் அவர்க்கு நாள்பாட்டு அவதரிக்கவேண்டியது ஆவச்யகமாயிற்று. பிரபந்தசாரம் செய்தவர் உபதேசரத்தின மாலையைக் கையில் வைத்துக்கொண்டே செய்திருக்கிறார். ஆனால் எம்பெருமானார்க்கு மாமுனிகள் நாள்பாட்டு ஸாதித்ததன் மருமத்தைத் தெரிந்துகொள்ளமாட்டாமல் அஸம்பத்தமாகஎழுதிவைத்ரதை ஸமர்த்திக்க உலகமெல்லாம் திரண்டாலும் ஒன்றுமாகாது.

## தூப்புல் என்னுஞ்சொல்லின் நிர்ணயம்

14. இவர் தூப்புல்பதம் என்று மகுடமிட்டு எழுதியிருப்பதனால் என்ன முடிவாயிற்றென்றால் அப்பய தீக்ஷிதர் ப்ரதிஷ்டைசெய்த அக்ரஹாரமாகிய தும்பைவனமே தூப்புலென்று வழங்கப்பெற்ற தென்கிற தத்துவம் வெற்றிபெற்று நின்றதாயிற்று. இதைப்பற்றி மாம்பலம் ஸ்வாமி எழுதுகையில் "அப்பய தீக்ஷிதருடைய தும்பைவனத்தினால்தான் தூப்புலேற்பட்டதென்பது ஸத்யமே; ஆனால் அந்த தீக்ஷிதரை தேசிகனுக்கு ஸமகாலஸ்தரென்று சொல்லிவிடலாமாதலால் இதில் கவலையின்றிக் கிடப்போம்" என்றெழுதியுள்ளார். இங்ஙனே ஸயூத்யர் வழிகாட்டியிருக்க இவர் கவலைப்படுவானேன்? தூப்புல்தத்துவமென்கிற தனிநூல் காண்க.

15. திருமலை சக்கபுரம் ஈகையையங்கார் எழுதிய ப்ரபந்த ஸாரஸ்வாதிநியில் ஸுக்ருத விவாதவிஷய ஸம்பந்தமாகவுள்ளது இவ்வளவேயாதலால் இத்தனையும் அஸம்பத்தமென்று நிரூபித்துத் தலைக்கட்டினோம். "மஞ்ஜுபாஷிணியில்.......[illegible] செய்யப்படுகிறது" என்று தொடங்கி இவர் எழுதியுள்ள நிந்தைகளுக்கு இங்கே உத்தரம் அநவஸரம். அதில் ஏதோ விஷயாபாஸங்களிருப்பதாக இவர் நினைத்திருப்பதால் அந்தப்ரமமும் இவர்க்கு நீங்குமாறு விப்ரலம்ப வித்வம்ஸந மென்கிற நூல் அடுத்தபடியாக எழுதப்படுகின்றது. இவர்கள் எது எழுதினாலும், நிந்தைகளில் கண் செலுத்தாமல் விஷயங்களின் அஸாமஞ்ஜஸ்யங்களை அடுத்தடுத்த க்ஷணத்திலேயே ஆவிஷ்க்ருதமாக நிரூபித்தே தீருவோம்.

[ஸ்ரீரங்கம் பண்டிதபூஷண ரக்ஷத்மாசாரி முன்னமே யெழுதிவெளியிட்ட சுலோகம்.]

[illegible]

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:  ஸ்ரீ:  ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# விப்ரலம்ப வித்வம்ஸநம்.

ப்ரபந்தஸாரஸ்வாதிநாஸ்ரம் ப்ரதாரணவ்யவஸாயத: ।
விலிதம் விப்ரலம்பேந யத்தத்தந்நிரஸ்யதே ॥

உபயவேத கண்டீரவ: தி. வி. சிங்கராசாரியர்.

— விரிவுக்கு அஞ்சாமல் உதறித்தள்ளுவோம் —

1. மானிடர்க்குரிய தோஷங்கள் அஜ்ஞானம் அந்யதாஜ்ஞானம் ப்ரமாதம் விப்ரலிப்ஸை இத்யாதிகள். அஜ்ஞானத்தாலே நேரும் பிழைகள் ஜ்ஞானத்தாலே தொலையும். அந்யதாஜ்ஞானத்தாலே நேரும் பிழைகள் யதாஜ்ஞானத்தாலே விலகும். ப்ரமாதத்தாலே நேரும் பிழைகள் அவதானத்தாலே அழியும். விப்ரலிப்ஸையாலே நேரும் பிழைகளுக்கு விநாசமே கிடையாது. விப்ரலிப்ஸையாவது பிறரை ஏமாற்றவேணு மென்கிற எண்ணம். உண்மை உள்ளபடி தெரிந்திருந்தும் முந்துற முன்னம் ஸ்வாத்மாவை வஞ்சித்துப் பிறகு பிறரையும் வஞ்சிக்கப் பார்ப்பர்கள் விப்ரலிப்ஸுக்கள். சில யதாஜாதர்களை வஞ்சிக்க முடியுமே யொழிய விவேகியான வொருவரும் வஞ்சிக்கப்பெறமாட்டார். ப்ரபந்தஸாரஸ்வாதிநி யென்கிற சில காகிதங்களையெழுதியவர் ஒவ்வொரு விஷயமும் விப்ரலம்பமாகவே யெழுதியுள்ளாரென்பதை இதில் ஒன்றுவிடாமல் மூதலிப்போம். விப்ரலம்பமன்று என்றால் அஜ்ஞானத்தையோ அந்யதாஜ்ஞானத்தையோ இவர் இசைந்து தீரவேண்டியதேயாகும். இவரும் இவரைச் சேர்ந்தவர்களும் வெளியிடுகின்ற காகிதங்கள் சில க்ஷணங்களுக்குமேல் (அதவா ஒன்றிரண்டு நாள்களுக்குமேல்) உயிர் பெற்றிருக்கமாட்டாவென்பது இவர்களுக்கு நன்கு தெரிந்திருந்தும் ‘சில பாமரர்களாவது சில நாட்களாவது ஏமாந்து கிடக்கட்டுமே’ யென்று மிக அற்பமான ஆசையைக் கொண்டு மிகவும் பல்பஜங்களான விஷயங்களையே எழுதி வருகிறார்கள். ஒவ்வொன்றையும் விரிவுக்கு அஞ்சாமல் உதறித்தள்ளுவோம்.

அவசியமான பதிலுக்கு அவசியமான பதில்.

2. ப்ரபந்த ஸாரஸ்வாதிநி யென்று இவர் பெயரிட்ட கந்தையை இதில் நாம் உதாஹரிக்கவேண்டும்போது கந்தையென்றே உதாஹரிப்போம். அன்பர்கள் அதன் பொருளை மறவாமல் மதியிற்கொள்ளவேணும். அந்தக் கந்தையை அவஸானத்திலிருந்து ஆரப்தாவஸாநமாக்குகிறோம். அவஸானத்தில் “அவச்யம் சொல்லவேண்டியதற்கு பதில்” என மகுடமிட்டு எழுதியதில்—

“நல்ல மதத்தில் பிறந்து ஈச்வரன் கொடுத்த விவேக சக்தியைக் கொண்டிருந்தும்” என்று வடகலையார்களைக் கொண்டாடியிருக்கிறார் [அண்ணங்கராசாரியார்.] இதனால் வடகலையார்கள் ஸத்ஸம்ப்ரதாயஸ்தர்கள் பகவத் கடாக்ஷ லப்தஜ்ஞான முள்ளவர்களென்று ஏற்படுத்திவிட்டார். ஆகையால் இவரிடம் நாம் நன்றியுடையவர்களாகவேணுமென்று ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களைப் ப்ரார்த்திக்கிறேன்”

என்றெழுதப்பட்டுள்ளது. இதை முன்னம் விவரித்துவிட்டுப் பிறகு இவருடைய அசட்டுத்தனத்தை யகற்றுகிறேன். ஸ்வாமியின் பிரபந்தஸாரதத்வஸார ஸஞ்சிகையில் ஸப்தஸஹோதர தத்வ நிரூபண மென்கிற நான்காம் பரிச்சேதத்தில் (பாரா 97ல்)

— பிரபந்த ஸாரதத்வஸாரஸ்த பங்க்திகள் —

'ஸர்வதேச தசாகாலேஷு—' என்று தொடங்கி * 'ஸ்ரீமத் ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ர வாமநுதினம் ஸம்வர்த்தய' என்னுமளவும் சொல்லி வருகிற மூன்று ச்லோகங்களைத் தென்கலையார்கள்தாம் சொல்ல உரிமையுண்டு; வடகலையார்கள் இந்த ச்லோகங்களை நெஞ்சால் நினைக்கவும் லஜ்ஜிக்கவேண்டும்; மனதுக்கு ருஜுவான உண்மை தெரிந்தபின், ப்ராமாணிகனுயிருந்தால் தவருன விஷயங்களை விட்டுத் தொலைக்கவேண்டாமா? "செட்டி சுட்டது, கை விட்டது" என்று தன்னடையே விட்டு நீங்கவேண்டாமா? இவ்வளவையும் நெஞ்சார அறிந்து வைத்தும் இன்னமும் வீண் சண்டைகளையே வளர்விடுவது நியாயமாகுமோ? நல்ல மதத்தில் பிறந்து ஈச்வரன் கொடுத்திருக்கிற விவேக சக்தியைக் கொண்டிருந்தும் உடலுமுயிருமுள்ளவளவும் மனச்சாட்சியை மீறியே நடந்துகொண்டு போவதென்பது அருவருக்கத் தக்க விஷயமல்லவா? இட்டுக் கொள்ளுகிற நாமமும் கட்டிக் கொள்ளுகிற வேஷ்டியும் காசுக்குமுதவாதபடி வீண் பிடிவாதமும் துராக்ரஹமுமே கொண்டு காலத்தைக் கழிப்பது சரியோ? ஸ்ரீரங்கம் ஸன்னிதியில் இந்த நவீனர்களுக்கு ராமாநுஜர் ஒரு சிறு வேலைகூட கொடுக்கவில்லை. இது அன்று முதல் இன்றுவரையில் கல்வெட்டாயிருக்கிற விஷயம். அப்படியிருக்க, இவர்கள் "ஸ்ரீரங்கச்ரியமனுபத்ரவா மநுதிநம் ஸம்வர்த்தய" என்றும் "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்" என்றும் கத்துவது எதுக்கு? இதற்கு ஏதேனும் அர்த்தமுண்டோ? "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ" என்பதை விட்டுத் தொலைத்தது போலவே இவைகளையும் விட்டுத் தொலைக்காதே பற்றிக்கொண்டு மன்றுடுவது வம்புக்கும் வீம்புக்கும் மாரடிக்கிற கதையல்லவா? இவர்கள் ப்ரபந்த கோஷ்டியில் நாமும் சம்பந்தம் பெற வேணுமென்று ஆசைகொண்டு ஓயாமல் வேலைசெய்து வருகிறபடியால் இதற்கு எப்படியாவது ஸலம கட்டவேணுமென்பதொன்றிலேயே இவர்களது நோக்கம். ராமாநுஜாபாத்ரம் பிற்பட்ட காலத்தில் போட்டிச்சண்டைக்காகக் கற்பிக்கப்பட்டதென்பது உண்மையாயிருந்தாலும் அதை ஒப்புக்கொள்ளவே கூடாதென்கிற பிடிவாதம் விவேகிகளுக்கு உற்றதோ? மனச்சாட்சியை மீறாமல் உள்ளது உள்ளபடியே சொல்லி உண்மையை விளக்குவதன்றே விவேகிக்ருத்யம். கடகாலில்லாமல் மேலே கட்டடங்கள் கட்டிக்கொண்டு போனல் என்னுகுமென்பது தெரியாததல்லவே. "எல்லாமறிவீர் நதேயறியீர்." என்றுள்ளது.

3. இந்த வாக்யராசியில் "நல்ல மதத்தில் பிறந்து ஈச்வரன்கொடுத்திருக்கிற விவேக ஶக்தியைக்கொண்டிருந்தும் உடலுமுயிருமுள்ளவளவும் மனச்சாட்சியை மீறியே நடந்துகொண்டு போவதென்பது அருவருக்கத்தக்க விஷயமல்லவா?" என்றிருப்பதற்கு மானிகள் என்னசெய்யவேண்டுமென்பதை நாம் சொல்லவேண்டுமோ? இதனுல் ஸ்வாமி வடகலையார்களைக் கொண்டாடியிருக்கிறரென்றும் தாங்களெல்லாரும் ஸ்வாமியிடத்தில் நன்றி பாராட்டவேண்டியது அவசியமென்றும் எழுதுகிறர். வடகலையார்களை ஸ்வாமி அந்தக்கரண சுத்தியுடன் கொண்டாடியிருப்பது இவ்வோரிடத்தில் மட்டுமன்று; பலபலநூல்களில் கொண்டாடியிருக்கிறர். கொண்டாடிக் கொண்டுமிருக்கிறர். கொண்டாடவும் போகிறர். உண்மையில் யோக்யதாபக்ஷபாதமும் யோக்யபக்ஷபாதமும் ஸ்வாமிக்குப்போல் வேறு யாருக்கேனுமுண்டோ? வடகலையார்கள் பிறந்திருப்பது பகவத்ராமாநுஜ தர்சனத்தில் தானே. வேறு மதத்திலன்றே. ஆகவே 'நல்லமதத்தில் பிறந்து' என்று ஸ்வாமி யெழுதியது யுக்தந்தானே. வடகலை ஸம்பிரதாயத்தில் ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பந்நர்கள் பலர் இல்லையா?

7

அவர்களெல்லாரோடும் ஸ்வாமிக்கு நெருங்கின பழக்கமில்லையா? அவர்களை அவிவேகிகளென்று ஸ்வாமி நிந்தித்து விடுவரா? எங்காவது நிந்தித்திருக்கிறாரா? ஈச்வரன் விவேகசக்தியைக் கொடுத்திருக்கிறானென்றது பொய்யா? விவேக விதுரர்களாகவா இருக்கிறார்கள்? ஐயோ! அந்த விவேக ஶக்திக்கு ப்ரயோஜனமில்லையாயிருக்கிறதே! என்றன்றோ ஸ்வாமி கண்ணநீர்விட்டு அழுதிருக்கிறார். அந்த அழுகையைப் பரிஹரித்து விட்டல்லவோ நீங்கள் ஸ்வாமியிடத்திலே க்ருதஜ்ஞதாநுஸந்தானம் பண்ணவேணும். "ஸ்வாமிந்! தேவரீர் எங்களைப் பற்றி இவ்வளவு நிர்வேதப்பட்டு எழுதியிருந்தபடியால் நாங்கள் எங்களுடைய துஶ்சேஷ்டைகளை விட்டுத்தொலைத்து வாழ்ந்துபோக நேர்ந்தது; ஆகவே எங்களுடைய வாழ்ச்சிக்கு தேவரீருடைய ஸ்ரீஸூக்தியே காரணமாதலால் தேவரீரிடத்திலே மிகவும் நன்றிபாராட்டுகிறோம்" என்று விஜ்ஞாபித்து மற்று மெல்லாரையும் நன்றி பாராட்டும்படி செய்தால் அது யோக்யக்ருத்யமாகும். இதையெல்லாம் நாம் எடுத்துக் காட்டவேண்டுமோ?.

— அனுமான் இராவணனைக் கோண்டாடியது. —

4. திருவடி இலங்கையிற் புக்கு எங்குங்கண்டு அதிஶயித்தபோது "அஹோ ரூபமஹோ தைர்யமஹோ ஸத்த்வமஹோ த்யுதி: । அஹோ ராக்ஷஸராஜஸ்ய ஸர்வலக்ஷணயுக்ததா ॥ .... ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸஶக்ரஸ்யாபி ரக்ஷிதா ॥" என்று ராவணனை மிக வற்புதமாகக் கொண்டாடியிருக்கிறார். இதையிட்டு நம் ஆசார்யர்கள் "திருவடி மதித்த ஐச்வர்யமிறே" என்றருளிச் செய்கிறார்கள். இப்படி மதிக்கைக்கு விஷயமில்லையென்று அந்தோ! யாரேனும் சொல்லுவாருண்டோ? அங்கு எது முக்கிய விஷயம்? "யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேஶ்வர:" என்றதன்றோ ஜீவநாடியான வார்த்தை. அது போல ஸ்வாமியெழுதியிருப்பவற்றில் "உடலுமுயிருமுள்ளவளவும் மனச் சாட்சியை மீறியே கடந்து கொண்டு போவரென்பது அருவருக்கத்தக்க விஷயமல்லவா?" என்பதன்றோ உயிரான பேச்சு. இதற்கு மறுப்புரைக்கச் சரக்கில்லாமையால் 'ஸ்வாமி நம்மை ஆச்சரியமாகக் கொண்டாடிவிட்டார்' என்று குணலமாடித்திரிய முற்பட்டீர்கள்.

— வடகலை வகுப்பில் கோண்டாடத்தக்கவர்களின் மகிமை —

5. வடகலை ஸமூஹத்தில் ஜ்ஞாதாக்களும் அநுஷ்டாதாக்களும் பலர் இருக்கிறார்களென்பதில் என்ன ஸந்தேஹம். அன்னவர்கள் இந்த வீண்வம்பு கல்பனைகளில் தலையிட்டவர்களேயல்லர். அவர்களுடைய போதுபோக்கு பாங்காகவேயுள்ளது. ப்ராமாணிகர்களருவருக்கும்படியான குத்ஸிதசேஷ்டைகளில் கைவைத்து இதுவே போது போக்காயிருப்பவர்கள் அந்த மஹான்களல்லர். "குத்ஸித சேஷ்டைகள்" என்று நாமெழுதுவதைப் பார்க்கும்போதே இவர்களுக்குக் கோபமும் தாபமும் பொங்கியெழும். அதனால் நமக்கென்ன? இப்போது நாம் கண்டிக்கும் கந்தையிலிருந்தே இவர்களின் குத்ஸித சேஷ்டைகளை நன்கு நிரூபிக்கிறபடியைப் பாருங்கள்.

— நவீனர்களின் குத்ஸித சேஷ்டைகளை நிருபிக்கவெழுதல். —

6. கந்தையில் (பக்கம் 10ல்) ஓலைபுஸ்தக விஷயம் என்ற தலைப்பின் கீழ்

"ரஹஸ்ய க்ரந்தங்களுக்கும் ராமாநுஜதயாபாத்ரம் தனியன் என்று வடகலையார் க்ரந்தங்களில் எங்கே யிருக்கிறது. * பிதாமஹஸ்யாபி * என்ற ராமாயணத் தனியனை பாரதத்திலும் பகவத் விஷயத்திலும் பார்த்தாலிருக்குமா? மூடத்தன

கேள்வைக்கு 20 வருஷம் என்று வருஷக் கணக்கு வேறே ஒன்றோ? நான் மூடனாக 20 வருஷம் இருந்தேன் என்று சொல்லிவிட்டு இன்று முதல் ரஹஸ்ய க்ரந்தங்களில் ராமாநுஜ தயாபாத்ரம் எங்கே என்கிற கேள்வையை விடுவது நலம்."

என்று தத்தகபித்தகதாலேலோகதையாய் எழுதிவைத்திருக்கிறது. கீழ்நாட்களில் யார்யார் என்ன என்ன எழுதி வெளியிட்டார்களென்பதைச் சிறிதுமறியாமல் க்ராம்ய ஆலாபங்கள் செய்வது இவற்கே தகும். தமிழ்க்ரந்த காலக்ஷேபங்களுக்கெல்லாம் ராமாநுஜபாத்ரத்தனி யனை வைத்துக்கொள்ளும்படிக்கும் ஸம்ஸ்க்ருத க்ரந்த காலக்ஷேபங்களுக்கெல்லாம் ஸ்ரீமாந் வேங்கட தனியனை வைத்துக்கொள்ளும்படிக்கும் தேசிகனே நியமித்ததாக எழுதினார்கள். அதன்மேல் பல சர்ச்சைகள் நடந்து, இனி நாங்கள் வாய்திறப்பதில்லை யென்கிற சபதத் துடன் வளாகிடந்தார்கள். ரஹஸ்யக்ரந்த காலக்ஷேபத்திற்கோ பகவத்விஷயகாலக்ஷேபத் திற்கோ எதற்கும் ஸ்ரீமாந் வேங்கடதனியனேயொழிய ராமாநுஜாபாத்ரம் கிடையவே கிடை யாதென்றும், கோவிலில் போடுகிற ஈட்டிப்போட்டிச்சண்டைக்கு மட்டுமே ராமாநுஜாபாத் ரம் உபயோகிக்கப்பட்டு வருகிறதென்றும் முடிந்துவிட்டது. நூதனஸங்கேதத்தில் சேராத வர்களான ஸ்ரீமத் பரமஹம்ஸ கருடபுரம் ஸ்வாமி, தேரழுந்தூராண்டவன் முதலானோர் இந்த பத்ததியையே பேணிவந்தவர்கள். ஆனால் அந்த மஹான்கள் இப்போது கீர்த்திசேஷர்களா யிருப்பதால் அவர்களை நாம் ஆஸ்தாவிப்பதில் பயனில்லை.

— ஜடாப்ரம்மசாரி கோவிலில் நடந்த செய்தி —

7. ஜடாப்ரம்மசாரிகட்டின தேசிகன்ஸன்னிதியென்று இவர் கந்தையில் எழுதியிருக்கிற நூதன ஸன்னிதியில் ராமாநுஜபாத்ரோத்ஸவம் நடத்தினபோது தினப்படி உபந்யாஸங்கள் நடத்தினதில் "ஒவ்வொரு வித்வானும் ராமாநுஜாபாத்ரத்தை இருமுறை உரக்கச்சொல்லி விட்டே உபந்யாஸம் ஆரம்பிக்கவேணும்" என்கிற நிபந்தனை செய்திருந்தார்கள். ஸ்ரீவைஷ் ணவ வுலகின் மஹாபாக்யவசமாக இப்போதும் காஞ்சியில் பரங்காக ஸேவை ஸாதித் தருளாநின்ற ஸ்ரீமதபயவே. நாவல்பாக்கம் ஸ்வாமி அந்த இடத்தில் உபந்யாஸகராக வீற் றிருந்து உபந்யஸிக்கத் தொடங்குகையில் ஸ்ரீமாந்வேங்கடதனியனையே சொல்லத் தொடங் கினார். சிலர் அருகேவந்து, இவ்விடத்து நிபந்தனைப்படியே ராமாநுஜாபாத்ரம் சொல்ல வேணுமென்று விஜ்ஞாபிக்க, "ஸ்ரீமாந்வேங்கடசொல்லி உபந்யஸித்தால் அடிப்பீர்களோ?" என்று இப்படியே ஸாதித்துக்கேட்டார்; "அந்தத்தனியன் இப்போதுவாண்டாம்" என்றார் கள். உடனே நாவல்பாக்கம் ஸ்வாமி தம்முடைய அந்தேவாஸிகளுடன் எழுந்து விளக் கொளி தேசிகன் ஸன்னிதியினுள்ளே சென்று அங்கே வீற்றிருந்து ஸ்ரீமான்வேங்கடதனியன் தொடங்கி உபந்யஸித்துப்போனார். இப்படி ஒரு நாளன்று. அந்த கொலுவு நடந்த பத்துநாளி லும் இவ்வண்ணமாகவே ஜடாப்ரம்மசாரிகோவிலில் திருவடியை வைத்திடாமலும் திருக்கண் ணையும் செலுத்தாமலும் நேராக விளக்கொளி தேசிகன் ஸன்னிதிக்கு [தாம்நியதமாக வைத்துக் கொண்ட ஒரு ஸமயவிசேஷத்தில்] சிஷ்யர்களுடன் எழுந்தருள்வதும் அங்கே உபந்யஸித்துத் திரும்புவதுமாயிருந்தார். இச்செய்தி இப்போது உத்ப்ரேக்ஷையாக எழுதப்படுவதன்று. இதை ஸ்வாமி தமது நூல்களில் பலகாலெழுதி வெளியிட்டுள்ளார். சில ஆக்ரஹிகள் அதை அந்த ஸ்வாமியிடம் கொண்டுபோய்க் காட்டி "இதற்கு மறுப்பெழுத நியமித்தருளவேணும்" என்று கேட்க, "குறட்டைவிட்டு இறங்குங்கள், குறட்டைவிட்டு இறங்குங்கள்" என்று மிகச்சீறி ஸாதித்து அவர்களை வெருட்டியோட்டியாயிற்று. அந்த ஸ்வாமி இன்னமும் பாங் காக எழுந்தருளியிருக்கிறாரென்பதை மறவேன்மின்.

— ஆக்ரஹாரமான குத்ஸிதசேஷ்டையைப் பரக்கநிரூபித்தல் —

8. ஆனால் ஆக்ருதம் இதெல்லாம் விஷயமன்று. "அப்போது அந்த கொலுவில் அப்படி நடந்ததே கிடையாது" என்றும், "அந்த ஸ்வாமியும் அப்போது ராமாநுஜபாத்ரமே சொல்லி அவ்விடத்திலேயே உபந்யஸித்தருளினர்" என்றும் சொல்லிவிட்டாலும் இதில் போராடவருவோமல்லோம். இவ்வகுப்பினருடைய குத்ஸித சேஷ்டைகளை நிரூபிக்க வன்றோ இப்போது நாம் எழுந்தோம். அந்த நிரூபணம் காண்மின். தேசிகரஹஸ்யங்களுக்கு ராமாநுஜபாத்ரம் சொல்லவேண்டிய ப்ரஸக்தியே கிடையாதென்றும், ரஹஸ்யங்களில் இருக்கவேண்டாத இந்தத் தனியனை ரஹஸ்யக்ரந்தங்களில் தேடுவதும், தேடினேன் கிடைக்கவில்லை யென்பதும் முழுமூடத்தனமென்றும் தலைகால் தெரியாமல் துள்ளிவிழுந்தெழுதுகிறுரிவர். தேசிக ரஹஸ்யங்களின் பதிப்புகள் எத்தனையுண்டோ அத்தனையும் ஸம்பாதித்து வைத்திருக்கிறோம். பெரியஸபை கூட்டியன்றோ இந்த வேடிக்கைகள் காட்டவேண்டும். ராமாநுஜபாத்ரத்தனியன் கோவில்களில் போட்டிச்சண்டைகளுக்கு மட்டும் வைத்துக்கொள்ளப்பட்டதேயொழிய வேறு எந்த க்ரந்த காலக்ஷேபத்திற்கும் வைத்துக்கொள்ளப்படவில்லையென்பது ஸத்யமாதலால் இந்த பாத்ரத்தனியன் எந்த புத்தகத்திலுமிருக்க ப்ரஸக்தியில்லாமையால் இதைப் புத்தகங்களில் தேடிப்பார்க்க ப்ரமேயமே கிடையாது. அப்படியிருந்தும் நம் ஸ்வாமி இதைப்பற்றி யெழுதியிருந்தது எதனாலென்னில்; இதைப் புதிதாக நான் விளக்கவேண்டியதில்லை; ஸ்வாமியே பலகால் விளக்கியிருப்பதைக்காட்டுகிறேன்;

— சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் பதிப்புகள் —

9. ஸாவதானமாகக் கேளீர். வடகலையார்களிலும் ப்ராமாணிகர்கள் ராமாநுஜபாத்ரத்தைநெஞ்சாலும் நினைப்பவர்களல்லரென்பது நிலைபெற்ற விஷயம். நவீனர்கள் நவீனர்கள் என்று நம் ஸ்வாமி பலகாலுமெழுதுவதற்கு இலக்கானவர்கள் [சே.ந.] ராமாநுஜபாத்ரத்தை ஒவ்வொன்றிலும் கொண்டுபுகுத்தவேணுமென்றுசைகொண்டு இவ்வாசையை நிறைவேற்றிக் கொள்வதற்காகவே ரஹஸ்யக்ரந்தங்களை அச்சிடத்தொடங்கி, சிறியரஹஸ்யம் பெரிய ரஹஸ்யமென்கிற வாசியில்லாமல் ஒவ்வொரு ரஹஸ்யத்தின் தலையிலும் ராமாநுஜபாத்ரத்தைப் போட்டிருக்கிறுர்கள். இப்படிபோடாத புஸ்தகங்களையும் ஸ்வாமி யெடுத்துக் காட்டியிருக்கிறுர். ப்ரபந்தஸாரதத்வஸாரம் மூன்றும் பரிச்சேதத்தில் (பக்கம் 34ல்) 77, 78 வாக்ய ச்ரேணிகளை அப்படியே யெடுத்துக் காட்டுகிறேன், காணீர்;—

10. "கோவில் விவாதங்களில் ஸம்பந்தப்படாதவர்களும் ஸாதுக்களுமான பெரியார்கள் அச்சிடுவித்திருக்கின்ற தேசிக ரஹஸ்ய—வியாக்யானுதி க்ரந்தங்களை யெடுத்துப் பார்ப்போம்; அவற்றிலும் ஸ்ரீமாந்வேங்கடநாதனியன் தவிர பாத்திரத்தனியன் காண்பதுண்டோ?

[இதற்குமேல் நிதியான வாக்யங்கள் காண்மின்]

11. ஸன்னிதி விவாதங்களில் கைதேர்ந்த ஆக்ரஹிகளான பிற்காலத்தவர்கள் அச்சிட்டுவரும் ரஹஸ்யங்களில் இந்தப் பாத்திரத்தனியனையும் நுழைத்துப் பதிப்பித்து வருகிறுர்கள். காஞ்சியில் வ்யபதிஷ்டராக எழுந்தருளியிருந்த வில்லியம்பாக்கம் ஸ்வாமி தாமே சோதித்துப் பதிப்பித்திருக்கும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் இந்தத் தனியன் நுழைந்திருப்பதுண்டாவென்று நோக்குமின் "

என்று ஸ்வாமி எழுதியுள்ளார். இதற்கு ஒருவர் ஒருவரிடம் போய் அர்த்தம் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டிய சிரமமுண்டோ? கந்தையில் கானும் தடபுடலுக்கு ஸ்வல்ப மேனும் ப்ரஸக்தியுண்டோ? கந்தைக்காரர் இப்போது வாய்வீச வரட்டுமே. அதற்குவழியேது?

— [illegible] —

12. வில்லியம்பாக்கம் ஸ்வாமி ரஹஸ்யத்ரய ஸாரம் பதிப்பித்த காலத்தில் அதில் ராமாநுஜாபாத்ரத்தை நுழைக்கவேணுமென்று பாடுபட்டவர்கள் பலருண்டு. அந்த ஸ்வாமி செவிகொடுத்து சிறிதும் இடம் கொடுக்கவில்லை யென்பது ப்ரஸித்தம். ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கர் தாமெழுதிய வியாக்கியானத்தோடு ரஹஸ்யத்ரயஸாரத்தை அச்சிட்டபோது ஸோயநாதிகளில் நியுக்தராயிருந்த வொருவர் ராமாநுஜாபாத்ரத்தை நுழைத்து அச்சிடக் கொடுத்துவிட்டதாகவும், இது தெரியவந்தவுடனே ஸ்ரீ ஸ்வாமி அவரைக் கண்டித்து அந்த பாத்ரத்தனியனை நீக்குவித்துப் பதிப்பித்ததாகவும் ஸுப்ரஸித்தமாகச் சொல்லுவதுண்டு. இந்த கந்தைக்காரர் இதெல்லாம் பொய்யென்று ஸஹஸா சொல்லி விடுவர். அப்படிச் சொல்லமுடியாதபடியன்றோ விஷயமிருக்கிறது. அதாவதென்னென்னில், ராமாநுஜாபாத்ரம் போடாத தேசிக ரஹஸ்ய நூல்கள் அதிஸ்வல்பமாயும் அது போட்ட ரஹஸ்ய நூல்கள் அபரிமிதமாயுமன்றோ இருக்கின்றன. இதெல்லாம் நவீனர்களின் குத்ஸித சேஷ்டை யென்பதை இந்த கந்தைக்காரரே தவிர்தியாக இசைய வேண்டியதாயிற்று. இந்த ப்ரஸ்தாவமெடுக்கும்போதே இவர் "தேங்காய் திருடப்போனவன்" என்று, படிப்பில்லாதவனெழுதுகிற க்ராம்ய வார்த்தையைத் தொடங்கியுள்ளார். தேங்காய் திருடப் போனவன் யாவனென்பது இப்போது விசதமாய்விட்டதல்லவா? ரஹஸ்ய க்ரந்தங்களுக்கு ராமாநுஜாபாத்ரம் கிடையாதென்பதை இவர் சிலாசாஸனம் பண்ணிவைத்தாய்விட்டது. அந்த பாத்ரத்தைப்போட்டு ரஹஸ்ய நூல்களை யச்சிட்டவர்களை இவர் என்ன செய்யவேண்டும்? இவர் ஒன்றும் செய்யமுடியாதாகையால் நாம் இச்சக் கேள்வி கேட்பது வேண்டா. அவர்களைப்பற்றி இவர் என்ன சொல்லவேண்டுமென்றால் இங்ஙனே சொல்லவேண்டும்;

13. "அஸ்தாகே ராமாநுஜாபாத்ரத்தைக் கொண்டு புகுத்தியவர்கள் குத்ஸித சேஷ்டைகளில் கை தேர்ந்தவர்கள்; ஸம்ப்ரதாயத்தைக் குட்டிச்சுவராக்க வந்தவர்கள்; வீணான ஆசார்யாபிநிவேசம் கொண்டவர்கள்; அவர்கள் ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களாக இருப்பதற்குச் சிறிதும் தகுதியுடையவர்களல்லர்; அவர்கள் வழிப்போக்கர்கள்."

என்று பறை சாற்றவேணுமிவர். சாற்றினால் இந்த சாற்றல்களெல்லாம் முதன் முதலாக சேட்லூர் நரஸிம்ஹாசாரியருடைய திருமுடிக்கே தொங்குபரிவட்டங்களாகும். அவர்க்கு முன்னேயும் பலர் ராமாநுஜாபாத்ரத்தைச் சேர்த்து ரஹஸ்யங்களை அச்சிட்டிருப்பவர்களுளர். பின்னேயுமுளர். இருந்தாலும் அவர்கள் தேசிக தர்சநாசார்ய பட்டம் பெற்றவர்களல்லர். இப்படி வீணான குஸ்ருஷ்டிகளைச் செய்பவர்களைப் பொறுக்கியெடுத்தன்றோ தேசிகதர்சன பட்டங்கள் ஸமர்ப்பித்திருக்கிறார்கள். நிகரற்ற வித்வன்மணியான ஸ்ரீ. உ, வே. நாவல்பாக்கம் ஸ்வாமிக்கோ இளங்காடு ஸ்வாமிக்கோ ஒரு பட்டமிட்டதுண்டோ? இவர்களை தேசிகதர்சந ப்ரவர்த்தகர்களாகவன்றோ நவீனர்கள் கருதியுள்ளார்கள். எதனால் தெரியுமோ? இந்த மஹான்கள் ராமாநுஜாபாத்ரத்திற்குக் சாக்ஷிகட்ட முன்வருவதில்லையென்பதனாலேயே.

— தேசிக ஸம்ப்ரதாய தூஷணவிசாரம். —

14. கந்தைக்காரரே! இவ்விஷயத்தில் இவ்வளவு போருமா? இன்னும் வேணுமா? கந்தையில் (பக்கம் 6ல்) நீர் எழுதியுள்ளீர்—

"ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாய தூஷணமாக இவர் (வூ. ஊ. வூாசி) எவ்வளவு க்ரந்தம் எழுதினரோ அதற்கு கண்டனமாக நாமும் அவ்வளவு எழுதினேம். இவர் அச்சிட்டார், நாம் அச்சிடவில்லை. இதுதான் விசேஷம்." என்று.

இதற்குச் சொல்லுகிறேன் கேளீர். உண்மையில் தேசிக ஸம்ப்ரதாயமென்று ஒன்றிருந்தாலன்றோ அதற்கு ஸ்வாமி கண்டனமெழுத ப்ரஸக்தியுண்டு. ஸ்ரீ ராமானுஜஸம் ப்ரதாயம், வேதாந்தாசார்ய ஸம்ப்ரதாயம், லோகாசார்ய ஸம்ப்ரதாயம், ஸ்ரீவரவரமுநி ஸம்ப்ரதாயம்.... எல்லாம் நாமபேதமாத்திரமேயொழிய வேறில்லை. கீழே விவரித்துக் காட்டின சேட்லூரர் போல்வாருடைய குத்ஸித சேஷ்டைகள் அஸம்பத்தங்களென்று நீரும் இசைந்து தீரவேண்டி வந்தபடியால் அப்படிப்பட்ட குசேஷ்டைகளையும் உம்மைப்போன்றவர்கள் எறிட்டுச் சொல்லும் அபார்த்தங்களையும் நம் ஸ்வாமி சரமாரியாகக் கண்டித்தேயிருக்கிறார். அவற்றை தேசிக ஸம்ப்ரதாய தூஷணமாக நீர் எழுதுவது சில பாமரர்களை வஞ்சிப்பதற்காகவேயாம். இப்போது உம்முடைய உக்திகளும் நம்மால் சரமாரியாகக் கண்டிக்கப்படுவதை தேசிக தூஷணமென்று தானே நீர் பறை சாற்றப்புகுகிறீர். தேசிக திவ்ய ஸூக்திகளை ஸஹ்ருதயமாகக் காப்பதற்கு நம் ஸ்வாமி அவதரித்தவரென்பதை வீண் சண்டைகளில் தலையிடாத மஹான்கள் பலர் பிரசுரம் செய்திருக்கிறார்கள். அன்னவர்களில் முன்னணியில் நிற்பவர்கள் (வடகலை) ஸ்ரீமத். தென்பரை ஆண்டவன் ஸ்வாமிகள் போன்ற மஹா மஹா மஹான்கள்.

— ஸ்வாமி செய்திருக்கிற உண்மையான தூஷணங்கள். —

15. தேசிக ஸம்ப்ரதாயமென்பது எது? அதை ஸ்வாமி எங்கே எவ்விதமாகக் கண்டித்திருக்கிறாரென்று கேட்டால் நின்று விடை சொல்ல வல்லீரோ நீர்? உம்மைப் போன்றவர்களின் அஸம்பத்த ப்ரலாபங்கள் தேசிகன் திருவுள்ளத்திற்கு ஸர்வாத்மநா விருத்தமானவை என்று அசைக்கமுடியாதபடி யெடுத்துக் காட்டினால் இதை தேசிக ஸம்ப்ரதாய தூஷணமென்று துஷ்ப்ரசாரம் செய்துதானே உம்போல்வார் உய்யவேண்டும். நீர்மட்டுமன்று, உம்மைப்போன்ற ஆயிரவர் கூடி ஆயிரமாயிரமாக எழுதினாலும் அவை யத்தனையும் அடுத்த நாளிலேயே ஸ்ரீ ஸ்வாமியால் விரிவுக்கஞ்சாமல் கண்டிக்கப்பட்டுத் தொலைகின்றனவென்பதை அன்று முதலின்றறுதியாகக் கண்டு வருகிறீர். ஸ்ரீ ஜகந்நாதத்தில் 365 வீட்டுக் குயவர்களுளர். ஒரு குயவனுக்கு வருஷத்தில் ஒரு நாள் தான் கோவிலில் மிராசு. ஒரு வருஷம் முழுதும் அவ்வொருவன் ஸகுடும்பமாக ச்ரமப்பட்டுச் செய்த பாண்டங்கள் [சட்டிபானைகள்] ஜகந்நாதன் ஸந்நிதியில் ஒரே நாளில் பொடியாகித் தொலையும்படியை உலகம் பார்த்து வருகின்றது. அதே ரீதியைத் தானே உங்களுடைய கந்தைகள் விஷயத்திலும் கண்டு வருகிறீர்கள். இன்னமும் வாணாளுள்ளளவும் காண்பீரே. ஐயுறவேண்டா.

— நிக்ரஹஸ்தானத்திற்கு நியமித்தல் —

16. எழுதுகிறீர்—"ஸ்வாமியெழுதியுள்ளவற்றுக்கெல்லாம் நானும் பதில் எழுதியிருக்கிறேன்; ஆனால் ஸ்வாமியெழுதினவையெல்லாம் அச்சாகியுள்ளன. நானெழுதியவை அச்சாகவில்லை; இவ்வளவே வாசி"—என்று. இப்போது அச்சிட்டு வெளியிட்டுத் திக்கு

முக்கலாடி நிற்கிறீரே இவ்வண்ணமாக நிச்சலும் நிற்பதற்கு என்ன தடை? அச்சுக்கூட மில்லையா? பணம் கொடுப்பாரில்லையா? எழுதிக் கொடுப்பார்தாமில்லையா? எது இல்லை? இத்தகைய பரிபவங்களை க்ஷணே க்ஷணே பட்டுவரலாமே. போன காலம் போகட்டும். இனி மேலாவது விடாமுயற்சியுடனிருந்து ஸ்ராத்த விஸ்ராத்தர்களென்று விருதுபெற்றிருப்பாரு டைய திரளிலே [பட்டியில்] சேர்ந்து ஸமமூஜநாவாகக் கடவீர். விரக்தியடையவேண்டா.

இனிப் பெரிய சாஸ்த்ரார்த்தங்களை யெடுத்துக்கொள்வோம்.

17. தேசிகன், பெரியவாச்சான்பிள்ளை முதலான ஸதாசார்யர்களின் திவ்ய ஸூக்திகளி லிருந்தே அர்த்தங்களைப் பெரும்பாலும் ஸ்வஸூக்திகளில் கொண்டிருக்கிறாரென்கிற உண்மையை ஸ்வாமி பலகால் வெளியிட்டிருக்கிறார். இந்த பரமார்த்தோக்தியை ஸஹித் திருக்கமாட்டாமல் துள்ளிவிழுந்து பெரியவாச்சான்பிள்ளையை தூஷிக்க முன் வந்துவிட்டீர். ஏதோ பெரிய விஷயங்களெடுத்துக் காட்டுவதாகப் பாமரர்களை வஞ்சிக்க சங்கர பாஷ்ய மென்றும் உடையவர் பாஷ்யமென்றும் விறுக்குத் தகாத வீக்கமென்னும்படியான சொற் களை யடுக்குகிறீர். மிகக் கலக்கிக்கிடக்கிற வும்மை நன்கு தெளிவிக்கிறேன். இன்று உமக்கு மஹத்தான ஸாமத்ரீமென்று உகக்க ப்ராப்தம். உம்போல்வார் ஸ்வகோஷ்டிகளில் ஸஹ்ருதமாகச் சொல்லிக் கொண்டிருக்கும் அற்ப விஷயங்களையே நீர் எழுதியிருப்பது தவிர வேறில்லை. இவை ஏடுபடாமலிருந்தால் உலகுக்கு உண்மை தெரிய ப்ரஸக்தியில்லாமே போய்விடும். அந்த ப்ரஸக்தியை விளைத்த நீர் உலகுக்கு மஹோபகாரகரே யாவீர். ஒரு சிறு விஷயத்தையும் விடாமல் விடையிறுப்போம்.

— ப்ரிய: ப்ரியாயாஹஸி தேவஸோடும் —

18. பகவத் கீதையில் (11–44.) * தஸ்மாத் ப்ரணம்ய......ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும் * என்றவிடத்தில் பெரியவாச்சான்பிள்ளை பெரியதவறு செய்துவிட்டதாக கந்தைக் காரர் கொக்கரிப்பது ஸூதராம் அஸ்தானே. இந்த கீதாச்லோகத்தை எம்பெருமானார் சரணாகதிகத்யத்தில் தாம் கையாண்டிருக்கிறார். அவ்விடத்து வியாக்கியானம் சங்கரபாஷ்யாநு ஸாரியாக இருக்கிறதேயொழிய பகவத் ராமாநுஜபாஷ்யரீதியில் இல்லையென்று காட்டி அட்டஹாஸம் செய்யப்பட்டிருக்கிறது. இது புதிய விஷயமன்று, மிகப் பழைய விஷயம். இது வித்வான்களின் விமர்சத்திற்கு உரியதேயல்லது இவரோ இவரைப்போன்றவர்களோ ப்ரஸம்மிக்கக்கூடிய விஷயமேயன்று. பலவாண்டுகளுக்கு முன்புகம் ஸ்வாமி யெழுதி வெளி யிட்ட கீதாபாஷ்ய ப்ரக்ரியா விமர்சம் என்கிற வியாஸம் ஸமீபகாலத்தில் புநர்முத்ரணம் செய் விக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து ப்ரக்ருதத்திற்கு வேண்டிய வளவு காட்டப்படுகின்றது.

19. ஸ்வாமி அந்த நூலின் தொடக்கத்தில் கீதாபாஷ்ய ப்ரக்ரியைகளை ஐந்து விதமாகப் பகுத்துக் காட்டினார். அந்த ஐந்து விதங்களாவன—

(1) சங்கர பாஷ்யத்திலுள்ள அவிருத்தமான அர்த்தங்களை அப்படியே கொள்ளுவது.

(2) சங்கரபாஷ்யத்திலுள்ள அர்த்தம் அவிருத்தமாயிருந்தாலும் வேறுப்ரகாரமாகவும் அர்த்தம் செய்யப் பாங்குண்டுஎன்கிற திருவுள்ளத்தினால் வேறுவிதமான அர்த்தம் காட்டுவது.

(3) சங்கரபாஷ்யத்தில் காணும் அர்த்தத்தில் விரோதமில்லாமலிருக்கச் செய்தேயும் ஸ்வாரஸ்யாதிஸயாஸாவம், ப்ரயோஜநாதிஸயாஸாவம் முதலான காரணங்களினால் ரஸவத்தர மும் ப்ரயோஜநவத்தமான அர்த்தவிசேஷங்களையும் யோஜநா பேதங்களையும் காட்டுவது.

(4) விருத்தமாகத் தோன்றுமர்த்தங்களைத் தள்ளி அவிருத்தமான அர்த்தங்காட்டுவது.

(5) அப்படி விருத்தமான அர்த்தங்களைத் தள்ளும்போது விரோதத்தையோ அநுபபத்தியையோ தாமே யெடுத்துக் காட்டுவது சிலவிடங்களில்; ஸ்வாமி காட்டாத விடங்களில் தாத்பர்ய சந்த்ரிகாகாரரான ஸ்வாமி தேசிகன் காட்டுவது.

20. ஆக விப்படி ஐந்து ப்ரக்ரியைகள் ஸ்வாமியின் கீதாபாஷ்யத்திலிருப்பதாக முதலில் ப்ரதிஜ்ஞைசெய்து, உடனே இந்த ப்ரக்ரியைகளை கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திவிசேஷங்களை யெடுத்துக்காட்டி விரிவாக நிரூபணம் செய்திருக்கிறார் நம் ஸ்வாமி. அதில் ப்ரக்ருதத்திற்கு வேண்டியதை மட்டும் எடுத்துக் காட்டுகிறேன்.

— சங்கரபாஷ்ய கீதாபாஷ்ய விமர்சம் —

21. சங்கர பாஷ்யத்திலுள்ள அர்த்தம் அவிருத்தமாயிருந்தாலும் வேறு ப்ரகாரமாகவும் அர்த்தம் செய்யப் பாங்குண்டு என்கிற திருவுள்ளத்தினால் வேறு விதமான அர்த்தம் காட்டுவதென்கிற இரண்டாவது விஷயத்திற்கு நிதர்சனம் காட்டுகையில்; பதினோராமத்தியாயத்தில் அர்ஜுனன் விச்வரூபம் கண்டவனந்தரம் கண்ணபிரானுடைய அப்ரமேயமான பெருமையை யெண்ணி யெண்ணி உள் மகிழ்ந்து குழைந்து இத்தகைய மஹிமைகளை முன்னம் தெரிந்து கொள்ளாமல் ஸாமான்யமாக ஸ்நேஹபாவம் கொண்டிருந்து விஹாரசய்யாஸந போஜனங்களில் கண்டவாறு பிதற்றி அபசாரப்பட்டுப் போனேமே யென்று மிக மிக அநுதபித்து அபசாரக்ஷாமணம் செய்து கொள்ளுகிற (44) "தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம் ப்ரஸாதயே த்வாமஹமீச மீட்யம், பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு: ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும்" என்கிற ச்லோகத்தில் பகவத் ராமாநுஜபாஷ்யபங்க்தியை யெடுத்துக் காட்டி மிக்க தெளிவு காட்டியுள்ளார் நம் ஸ்வாமி. இந்த ச்லோகத்தில் புதல்வனுடைய குற்றத்தைப் பிதா க்ஷமிக்குமாபோலவும், தோழனுடைய குற்றத்தைத் தோழன் க்ஷமிக்குமா போலவும் என் குற்றத்தை க்ஷமித்தருளக் கடவாய் என்கிறானர்ஜுனன். இங்கே "ப்ரிய: ப்ரியாயார்ஹஸி" என்றுள்ள விடத்திற்கு 'ப்ரிய: ப்ரியாய' என்றே பதவிபாகம் செய்து வியாக்கியானிக்க ப்ராப்தமாயிருந்தும் சங்கராசாரியர் ஆர்ஷப்ரக்ரியையை அவலம்பித்து 'ப்ரிய: ப்ரியாயா:' என்று பதவிபாகம் கொண்டு "யதா வா ப்ரிய: ப்ரியாயா அபராதம் க்ஷமதே, ஏவமர்ஹஸி ஹே தேவ ஸோடும்" என்று பாஷ்யமிட்டிருக்கிறார். இதில் அநுபபத்தியொன்றும் சொல்லமுடியாது. ஸந்தியிலோ நிஷ்பந்நபத ஸ்வரூபத்திலோ ஸம்பந்தபதஸ்வரூபத்திலோ ஆர்ஷப்ரக்ரியையை அவலம்பிப்பதென்பது யாவர்க்கும் அவஜ்ஞநீயமாகையாலே இங்கு 'ப்ரியாயா அர்ஹஸி' என்று ஸந்தியாக வேண்டியிருக்க அங்ஙனமாகாமல் 'ப்ரியாயார்ஹஸி' என்று ஸவர்ண ஸந்தியானது ஒரு குறையாகாதென்று கொண்ட சங்கராசாரியர் 'ப்ரியாயா: அபராதம் ப்ரிய இவ' என்றுக்கி அர்த்தம் செய்ததில் தூஷணமொன்றும் சொல்ல இயலாது. என்னுடைய குற்றத்தை அவசியம் க்ஷமிக்கக் கடவையென்று சொல்லுமிந்த ப்ரகரணத்திலே பிதாவையும் ஸகாவையும் த்ருஷ்டாந்தம் காட்டியிருப்பது போலக் கணவனையும் த்ருஷ்டாந்தம் காட்டுவது ஸமுசிதமாயுமுள்ளது. ஆகவே இங்கு சங்கர பாஷ்யம் இங்ஙனே அமைந்தது. எம்பெருமானார் தம்முடைய பாஷ்யத்திலே இங்ஙனே அர்த்தம் செய்தருளாமல் வேறு விதமாக அர்த்தம் செய்தருளியிருக்கிறார். ஆர்ஷ ப்ரக்ரியையை அவலம்பியாமலும் இதுவும் ஒரு த்ருஷ்டாந்தமென்று கொள்ளாமலும் "ததா த்வம் காருணிக: ப்ரிய: ப்ரியாய மே ஸர்வம் ஸோடு-

ஃஹஸி" என்று யதாவஸ்திதமாக பாஷ்யமிட்டருளியுள்ளார். இங்கு சங்கரபாஷ்யம் அஸங்கதமென்கிற திருவுள்ளம் லவலேசமும் ஸ்வாமிக்குக் கிடையாது. அஸாங்கத்யம் ஸ்வாமி திருவுள்ளத்தில் தோன்றியிருந்தால் அதை ஸ்வாமி காட்டருளாதிருந்தாலும் தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகன் காட்டுவதுண்டு. அவரும் இங்குக் காட்டியிருக்கவில்லை.

— ப்ரியாயா: அர்ஹஸி என்று பிரிப்பதும் ஸமஞ்ஜஸமே. —

22. இந்த ச்லோகம் [* தஸ்மாத் ப்ரணம்யேத்யாதி.] சரணாகதி கத்யத்திலும் ஸ்வாமி யெம்பெருமானாரால் அநுஸந்திக்கப்பட்டிருக்கிறது. அவ்விடத்திலும் [கத்ய பாஷ்யத்தில்] சங்கர பாஷ்யார்த்தம் அஸாதுவென்கிற ப்ரஸ்தாவமே செய்யப்பட்டிருக்கவில்லை. இங்கு பாஷ்யகாரரான ஸ்வாமியினுடையவும் சந்த்ரிகாகாரரான தேசிகனுடையவும் திருவுள்ளம் யாதெனில், இரண்டுபடியாகவும் பொருள் செய்யக்கூடிய ஸ்தலத்தில் இரண்டு பாஷ்யகாரர்களும் இருவகைப் பொருளையும் எழுதிவைக்கவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; அவர் ஒரு பொருளை யெழுதிவைத்தால் நாம் மற்றொரு பொருளை எழுதிவைப்போம்—என்பதேயாம். ஆர்ஷ ப்ரக்ரியையை அவலம்பித்து சங்கராசாரியர் எழுதிவைத்த அர்த்தத்தில் அஸாமஞ்ஜஸ்யம் அணுவளவு இருந்தாலும் அதை ப்ரஸ்தாவியாமல் விடமாட்டார்கள். உண்மையில் ஒரு அஸாமஞ்ஜஸ்யமும் நெஞ்சாலும் நினைக்கமுடியாது. ப்ரக்ருதம் விவக்ஷிதமான விஷயத்திற்கு இரண்டுக்குமேல் மூன்றுவது த்ருஷ்டாந்தம் காட்டப்படுவதாய்த் தேறுகிற அதிசயமுமுள்ளது. இதனால் 'ப்ரிய: ப்ரியாய' என்கிற விக்ரஹத்திலே அஸ்வாரஸ்யமிருப்பதாக நாம் தெரிவித்ததாகாது. இதிலும் ஒரு ஸ்வாரஸ்யமுண்டு; அது ப்ரஸித்தமாகவே. ஆக இங்கு உபய விதமான பாஷ்யமும் ஸுஸங்கதமென்றதாயிற்று.

— அர்த்தத்தில் அவத்யலேசமுமில்லை. —

23. ஆர்ஷவ்யத்யயம், ஸாந்தஸவ்யத்யயம் என்னும்படியான ஸவஸாதநத்த வ்யத்யயங்களை யாரும் தூஷிப்பதில்லை. ஸந்திவ்யத்யயம் மட்டுமன்று, லிங்கவ்யத்யயம்— வசந வ்யத்யயம்— புருஷ வ்யத்யயம்— பத [ஆத்மநேபத பரஸ்மைபத] வ்யத்யயம் என்றிப்படி பல வ்யத்யயங்களுண்டு. இவை ஈஷத்தும் தோஷாவஹமன்று. அர்த்தத்தில் தோஷம் காட்டவேணும். அது இருந்தால் அவ்வர்த்தத்தை ஆசாரியர்கள் நெஞ்சாலும் நினையார்கள். இருவகையான அர்த்தமும் ஸுபாஷிதமே யென்று காட்டுவதற்காகவே ஆச்சான்பிள்ளை 'ப்ரியாயா: ப்ரிய இவ' என்று விவரித்துக் காட்டினது. இப்படிப்பட்ட விடங்களை நம் ஸ்வாமி நூற்றுக்கணக்காகக் காட்டவல்லவர்; ஸமயே ஸூப்தே அவையெல்லாம் வெளிவரும்.

— தாத்பர்ய ரத்நாவளியைக்கொண்டு வாதிவாய் மூடுவித்தல். —

24. இங்கே கந்தைக்காரர்; தம்முடைய ஸூத்ராஜாயத்தாலே ஒரே வார்த்தையைத் திருப்பித் திருப்பிச் சொல்லுவர். (அதாவது) 'ப்ரியாயா அர்ஹஸி' என்கிற யோஜனை நம் ஸ்வாமி ஸாதித்ததன்றுதானே என்று. இப்படிப்பட்ட வார்த்தை தேசிக திவ்ய ஸூக்திகளிலும் பல பல ஸூவாஸிக்கும். * கற்பாரி ராமபிரானை யல்லால் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தின் ஸ்வாபதேயத்தைத் திருவாறுபிரப்படியில் திருக்குருகைப் பிரான் பிள்ளான் எவ்வாறு கொண்டிருக்கிறார்; தாத்பர்ய ரத்நாவளியில் தேசிகன் எவ்வாறு காட்டியிருக்கிறாரென்று பார்க்கவேணும். * நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்

நற்பாலுக்கு உய்த்ததாவது என்னவென்பதைத் திருக்குருகைப் பிரான் பிள்ளான் நிஸ்ஸந்தேஹமாகக் காட்டியுள்ளார். * அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றிய கதை யன்று இங்கு விவக்ஷிதம். " ஸத்த்வஸ்திதி ப்ரஸவமேததஜஞ்ஷோ யயா ஹி ப்ரக்ஷாமு தாஸிஸுலஸஸஹவ ஸியொமெ " என்று அதிமாநுஷஸ்தவத்தில் ஆழ்வானருளிச் செய்ததொரு நற்பான்மையே இங்கு விவக்ஷிதமென்பது ஸர்வஸம்மதம். ஆயினும் தேசிகன் ப்ரதிபக்ஷார்த்தம் தெரிந்து கொள்வதற்கு வாதிகேஸரியின் பன்னீராயிரவுரையையும் ஸேவித்தபோது அவர் சொல்லி வைத்திருக்கிற மோக்ஷ ப்ரதானமென்னுமர்த்தத்தைக் கொண்டு * ஸாகேதே உத்க்ருதாநாம் * என்று ஸாதித்துவிட்டார். இங்கே சோத்யம் வந்தால் " இப்படியும் ஒரு அர்த்தம் கொள்ளத் தகுதியுண்டு என்று காட்டுவதற்காகவே தேசிகன் இப்படி வேறாக ஸாதித்தது " என்று தானே சொல்லித் தீரவேண்டும். அந்த வார்த்தை இங்கும் இணங்காதோ? இங்ஙனே ஓரிடமன்று; பல்லாயிரமிடங்களுண்டு. உலகின் பாக்கியத்தால் எல்லாம் வெளிவரும்.

— ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜா வீஶநீஶௌ —

25. ச்வேதாச்வதரோபநிஷத்தில் * ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶநீஶௌ * என்றவிடத்தில் ஈஶபதத்திற்கும் அநீஶபதத்திற்கும் த்வந்த்வஸமாஸமென்று கொண்டு 'ஈசாநீசௌ' என்றாக வேண்டுவது ஆகாதது ஸந்தியில் ஆர்ஷஸௌத்ரமென்றார் ஒரு பெரியவர். (அநீஶ) என்கிற பதம் (நீஶ) என்றாயிற்று; ஆகவே வர்ணவ்யத்யயமேயொழிய ஸந்தியில் வ்யத்யயமில்லை யென்றார் மற்றொரு மஹநீயர். (ந-ஈஶ = நீஶ) என்றாயிற்று ஆர்ஷமாக—என்றார் இன்னொரு பெரியார். ஈகாய்! இவற்றில் எதைக்கொள்ளப்போகிறீர்? நின்று சொல்லும்.

— தஸ்ய தாவதேவ சிரம்......விமோக்ஷ்யே...ஸம்பத்ஸ்யே —

26. சாந்தோக்யத்தில் *தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே* என்றவிடத்தில் விமோக்ஷ்யே. ஸம்பத்ஸ்யே என்று ப்ரதம புருஷனிருக்கவேண்டுமிடத்தில் உத்தமபுருஷனிருப்பது ஆர்ஷமான புருஷவ்யத்யயமென்று ஒரு மதம். இதி என்று அத்யாஹரித்துக்கொண்டு (தஸ்யேதி தாவதேவ சிரம்) என்று கொண்டு புருஷவ்யத்யயமில்லாமலே யோஜிப்பது மற்றொருமதம். ஈகையின் மதம் எதுவோ தெரியவேணும்.

— யயா கயாச விதயா பஹ்வந்நம் —

27. தைத்திரீயோபநிஷத்தில் *ந கஞ்சந வஸதௌ ப்ரத்யாசக்ஷீத* என்று பெரியதொரு விரதம் சொல்லி உடனே "தஸ்மாத்யயா கயா ச விதயா பஹ்வந்நம் ப்ராப்நுயாத்" என்று ஓதிக்கிடக்கிறது. இங்கு ஶங்கரர் இன்ன ப்ரகாரமாக என்று நிரூபித்துக் காட்டாமல் "யேந கேந ப்ரகாரேண பஹ்வந்நம் ப்ராப்நுயாத்" என்று பாஷ்யமிட்டார். வித்யாரண்ய ஸ்வாமி "யாஜநாத்யாபநப்ரதிக்ரஹாணாம் ஶ்ரேஷ்டே யேநகேநாபி ப்ரகாரேண அந்நஸம்ருத்திம் ஸம்பாதயேத்" என்று ஶாஸ்த்ரீயமான வழிகளாலே அன்னத்தை ஆர்ஜிக்க வேணுமென்று பாஷ்யமிட்டார். பட்ட பாஸ்கரஸ்வாமி. "ப்ரதிஷித்தேநாபி சௌர்யேண பஹ்வந்நம் ப்ராப்நுயாத்; அதிதிஸத்காரத்வாத் ந தோஷோ பவதி." என்றார். களவு செய்தும் வஞ்சனைகள் பண்ணியும் பொருளீட்டலாமென்பது இதன் பொருள். கடைசியாக பாஷ்யமியற்றினவர் நம் ரங்கராமாநுஜ ஸ்வாமி, அவர்க்கு இந்த பாஷ்யமே ருசித்தது. இதையே ஸ்வவாக்யமாக எழுதி முடித்துவிட்டார். ஈகாய்! உமக்கு எந்த பாஷ்யம் ப்ராமாணிகமாகப் படுகிறது? நின்று சொல்லுவீரா? வேதத்தில் (அவயாதத்ருஹீத:) என்று

ஒரு பதம். இது பல நூறு தடவை ஓதப்படுகிறது. இது ஸமஸ்தமான ஒரே பதமேயொழிய வ்யஸ்தமான இரண்டு பதமன்று. உபயாஃஶ்ருஹீதஃ தஂவயாஃ—ஶ்ருஹீதஃ. என்று வேஷ்டநமோதி வருகிறோம். இதுவே பதம் உபநிஷத்தில் வருமிடத்து இதை இரண்டு பதமாகப் பிரித்து (உபயாஃ) என்பதை ஷஷ்ட்யந்தமாக்கியுரைத்தார் ரங்கராமாநுஜ ஸ்வாமி. வக்தவ்யமில்லாமையாலே நம்மைக் கேட்பாரில்லையென்கிற தைர்யமன்றோ அவர்க்கு இங்கு. அவருடைய தௌஸ்தாவம் இங்கு வலிதாக வந்தபடியாலே ஒரு விஷயமெடுத்துரைத்து இந்த விசாரத்தை முடிக்கிறோம்.

— ரங்கராமாநுஜ ஸ்வாமியின் மிக முக்கியமான மற்றோருக்தி —

28. நிஷாதஸ்தபதி ந்யாயத்தாலே தத்புருஷ ஸமாஸத்திற் காட்டிலும் கர்மதாரயஸமாஸம் ப்ரபலமென்பதை ஆநந்தாதிகரணத்தில் இரண்டாவது ஸூத்ரத்தின் ஸ்ரீ பாஷ்யத்தில் நின்றும் க்ரஹித்த ச்ருதப்ரகாசிகாசார்யர் ப்ரக்ருத்யதிகரணத்தின் கடைசி ஸூத்ரடீகையில் * யதா பஶ்ய: பஶ்யதே ருக்மவர்ணம் கர்த்தாரமீஶம் புருஷம் ப்ரஹ்மயோநிம் * என்கிற முண்டக ச்ருதியிலுள்ள ப்ரஹ்மயோநிமென்பதை ஸமாநாதிகரணமாக விவரித்துள்ளார். அதைக்கண்ட ரங்கராமாநுஜ ஸ்வாமி—முண்டகோபநிஷத் பாஷ்யத்தில் அதற்கு தத்புருஷனகப் பொருளுரைப்பதே பொருந்துமென்று கொண்டு அப்படியே தாம் உரைத்துவிட்டு அவ்வளவோடும் நில்லாமல்,

"வ்யாஸார்யைஃ ப்ரஹ்மயோநிரிதி தத்புருஷ ஸமாஸே லக்ஷணாப்ரஸங்காத்
ப்ரஹ்மயோநிஶப்தயோ: ஸாமாநாதிகரண்யமிதி த்ருஷ்டவ்யம். தச்ச அதிஸுந்தரம் ॥"

என்றுமெழுதிவைத்தார். இங்கு "தத் அதிஸுந்தரம்" என்றது உண்மையில் கொண்டாடிக் கூறுகிறபடியா? அல்லது விபரீத லக்ஷணயா பரிஹஸிக்கிறபடியா? என்பதை வித்வான்கள் விமர்சித்து எவ்விதமாக நிஷ்கர்ஷித்தாலும் இவர்க்கு அவத்யமேயாகும். பரிஹஸிக்கிறபடி யென்றால் தேசிகனுகந்த ச்ருத ப்ரகாசிகாசார்யரிடத்திலே அபசாரப்பட்டவராவர். கொண்டாடிக் கூறுகிறபடியென்னில், அப்படி கொண்டாடத்தக்கதாக அவாருளிச் செய்த அர்த்தத்தைவிட்டுத் தாம் வேறொரு பொருள் கூறினது மஹாபசாரமாகும். இங்கு என்ன சொல்லிப் பிழைக்கிறீர்? என்று மடிபிடித்துக் கேட்டால் * காற்றிற் கடியனாய் ஓடிய கம்புக்கு மாற்றமும் தாரான் * என்ற கண்ணபிரானோடே ஸாம்யம் பெற்றேனென்னும்.

— ஸாக்ஷாத் ஸ்வாமியின் யோக்யதாஸாக்ஷாத்காரம் —

29. இவ்விஷயத்தில் முடிவாகச் சொல்லுவது இவ்வளவே. நம் பூர்வாசார்யர்கள் குருமுகமாகக் கேட்ட அர்த்தத்தையே எழுதிவைப்பவர்களாதலால் அவர்களது திருவாக்கில் ஒரு போதும் ஒரு விதமான அவத்யமும் வராது. புது வைஷ்ணவங் கொண்டாட வந்த இவர்கள் ஆசார்ய முகமாகக் கேளாமல் தாந்தோன்றிகளாய் பகவத் விஷய க்ரந்தத்தில் கை வைக்க இறங்கினபடியாலே விரலுக்குத் தகாத வீக்கமாக அஸ்தானே அவத்யஜடிலமாக எழுதிவைத்துப் பரிபவப்படுகிறார்கள். இதற்கு இங்கு ஒன்று காட்டினால் போதுமன்றோ. ஸாக்ஷாத் ஸ்வாமி யென்கிற வொருவரை இவர்கள் அபர தேசிகனாகக் கொண்டிருக்கிறார்கள். அவரே இவர்களுக்குப் புது பகவத்விஷயமெழுதிவைத்தவர். அவர் திருவாய்மொழி மூலத்தை ஒரு அபத்த புத்தகம் பார்த்து க்ரஹித்தாரோ, ஒரு யயாஜாதனிடம் மோதினாரோ அறியோம். அதில் (8—8—7.) "நல்லிந்திரியமெல்லாமீர்த்து" என்றவிடத்தில் * நல்லீந்

திரிய மென்று இவர் அப்த்தமாக ஓதி உருப்போட்டு விட்டார். அதற்குமேல் வியாக்கியான மெழுதிவைத்த அழகைப் பாருங்கள்—

"இது வென்கிறதக்கு ஈதென்று ப்ரயோகிக்கிறப் போலே இந்திரிய மென்கிறதக்கு ஈந்திரியமென்று ஆர்த்தக்ஷர தீவிதமாகவும் ப்ரயோகமுண்டு"

என்று தாமொரு சவாடசமஸ்த்யராய் எழுதிவைத்திட்டார். இதற்கு அழுகிறதா? சிரிக்கிறதா? என்று இதை நம் ஸ்வாமி ஸ்ரீமத். இஞ்சிமேடு ஸ்வாமி பூர்வாச்ரமஸ்தராயிருக்கும் போது அவரிடம் விஜ்ஞாபிக்க, அந்த ஸ்வாமி புஸ்தகத்தை யெடுத்துக் கடாக்ஷித்துவிட்டு "இதற்கு ஒரு வகுப்பினர் அழ வேணும், ஒரு வகுப்பினர் சிரிக்கவேணும்" என்று தென்னன்டைமாடவீதித் திருமாளிகையில் ஸாதித்தார். நகை இதில் வாய்திறக்க முடியுமா?

— கந்தைக்கு அறிவூட்டுதல் —

30. கண்ணை மூடித் திறப்பதற்குள் இப்படிப்பட்ட அவத்யங்களை ஆயிரக்கணக்காக வெடுத்துரைப்பர் நம் ஸ்வாமி. நகையோ கூகையோ ஒன்றுக்கும் வாய் திறக்கவே முடியாதென்பது ஸத்யம். "இன்றாக நாளையேயாக இனிச் சிறிது நின்றாக" என்று திருமழிசைப் பிரான் பணித்தபடி இன்றோடு நாளை யென்றே காலம் பல சென்றாலும் இந்த வார்த்தை ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யமே காணீர். ஆக, பெரியவாச்சான்பிள்ளை ஏதோ பெரிய தவறு செய்துவிட்டதாக மருண்டு செய்த கோலாஹலம் முடிந்ததாயிற்று. மேலும் கந்தை யெடுத்துக் காட்டிய இவ்விஷயம் பெரியவாச்சான்பிள்ளையைச் சேர்ந்ததுமன்று; அவரிலும் வேறுபட்டவரான ஆச்சான்பிள்ளை யருளிச் செய்த விஷயம். அந்த ஆசார்யரும் "ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதா சேஷசித்தே வித்வத்ஸேவா விமலமநஸா வேங்கடேசேந" என்றவிடத்தில் ஹ்ஸேவிதாக தேசிகனால் பேசப்பட்ட வித்வான்களில் அந்பதமரேயொழிய அந்யரல்லர். இவர் ஸாதித்த பொருள் என்கிற மௌநவத்தாலேயே தேசிகன் இதை மறுத்திலர்.

— தெருள் தருமா தேசிகனைச் சேர்ந்து —

31. உபதேச ரத்தினமாலை சாற்றுப் பாசுரத்தில் * தெருள்தருமா தேசிகனைச் சேர்ந்து* என்றது தேசிகனைப் பற்றியதே யென்கிறார். அன்றென்று யார் சொல்லுவார்? அந்தப் பாசுரத்திற்கு முன்னே * தேசிகர் பால் கேட்ட * என்றுள்ள பாசுரத்திலும் வேதாந்த தேசிகனே தான் விவக்ஷிதர். ஸ்ரீ வசந பூஷணத்திற்கு தேசிகனே ப்ரவர்த்தகர் என்கிற உண்மைதானே அதில் தெரிவிக்கப்பட்டது. அவ்வளவு தூரம் போகவேணுமோ? ந்யாஸ திலகத்தில் ஸ்வாமி தேசிகன் தம்முடைய பெருமையைத் தாமே தெரிவித்துக் கொள்ள வில்லையா? "உத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகா தேசகாங்க்ஷீ" என்றாரே. ரங்கநாதனிடம் சென்று யாராவது மோக்ஷம் கேட்டால் 'தேசிகனிடம் சீட்டு வாங்கிக் கொண்டு வந்தால் தான் கொடுப்பேனென்கிறார்' என்பதன்றோ இந்த ச்லோகத்தின் உண்மையான பொருள். இத்தகைய பெருமை வாய்ந்த தேசிகனுக்கு உபதேச ரத்தினமாலையில் சிறப்பு ஏற்படுவதில் என்ன வியப்பு? தேசிகனுக்கு எவ்வளவு ஏற்றமுரைத்தாலும் ஏற்கும். மறுப்பாரில்லை.

— ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே —

32. பிரபந்தசார தத்வஸாரத்தில் (பாரா 52ல்) நம் ஸ்வாமி எழுதியிருப்பதாவது—"ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே—என்றவிடத்தில் லோகே என்பதற்கு (ஸம்ஸாரிஜநே) என்று முதலில் ஸாமாந்யமாகப் பொருள் பணித்த தேசிகன் (லோகே—சாஸ்த்ரத்தில்) என்றுள்ள

பெரியவாச்சான்பிள்ளைவியாக்கியானத்தை ஸேவித்து, பிறகு அந்தப்பொருளை யெழுதினர்'; என்று. இதற்குக் கர்த்தையெழுதுவதென்னவென்றால்—லோகே என்பதற்கு (சாஸ்த்ரே) என்கிற அர்த்தமும் பெரியவாச்சான்பிள்ளைக்கு ஶங்கரஸூக்தியிலிருந்து வந்ததே.......... பெரியவாச்சான்பிள்ளைக்கு ஸூத்ரபாஷ்யகீதாபாஷ்யங்களெல்லாம் ஶாங்கரங்களே தவிர ராமாநுஜீயங்களில்லை. போருமா?—என்று. இந்த அக்கிலிபிக்கிலி ஞானிக்கு விவேகிகள் பதில் எழுதலாமோ? ஆனாலும் விவேகிகளுக்கு உண்மையைத் தெரிவிக்கிறோம். லோகே என்பதற்கு சாஸ்த்ரே என்று பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்த பொருளை தேசிகன் தலையால் தாங்கி ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஸாதித்திருக்கிறாரென்பது இங்கு விஷயம். இவ்வர்த்தம் ஶாங்கரமேயொழிய ராமாநுஜீயமன்று என்று இது செய்கிற தூஷணம் தேசிகன் தலையிலு மேறுகிறது என்பதைக்கூட அறியாமே அந்தோ! தலைகால் தெரியாத துள்ளல் என்னே! கீதை (15—18) * அதோஸ்மி லோகே வேதே ச * என்கிற விடத்தில் பாஷ்யத்தில் உடையவர் ஸாதித்து தாத்பர்ய சந்திரிகையில் உபபாதிக்கப்பட்ட அர்த்தமிது. இதனை தூஷித்தால் ஸாக்ஷாத் உடையவரையே தூஷித்ததாகிறது. இதை யெடுத்துரைத்து முகம் சிதறப் புடைப்பாரில்லையே இவ்வகுப்பில். இடையிடையில் போருமா? போருமா? என்கிறது. தான் படுகிற பரிபவம் போருமா? என்று தானே கேட்டுக்கொள்ளுகிறதந்தோ! இன்னும் மலைமலையாயிருக்க எப்படிபோரும். போராது போராது. பாதுகாஸஹஸ்ர வசனமாகவேணுமே.

— ஆபாதாஸ்திகபக்ஷோபி நிரஸ்த: —

33. தேசிகன் பெரியவாச்சான்பிள்ளையை ஆபாதாஸ்திகராகக் கூறியுள்ளாரென்கிறது கந்தை. ஸஹ்ருதயவாதம் கேண்மின். தேசிகனுக்குப் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளே தஞ்சமென்பது இவரால் மறுக்கவொண்ணாதபடி முடிந்துவிட்டது. அப்படிப்பட்ட பெரியவாச்சான்பிள்ளைக்கு தேசிகன் குறை கூறியிருக்கிறாரென்பது உண்மையாகத் தேறிவிட்டால் "தேசிகனுக்குப் பூர்வாவஸ்தை உத்தராவஸ்தை என்று இரண்டவஸ்தைகளுண்டு" என்று ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் விஷயம் மிகவும் திடமாயிற்று—என்பது தவிர வேறு என்ன தேறமுடியும்? கைவல்ய விஷயத்தில் "[illegible]" என்று ந்யாயஸித்தாஞ்ஜனத்திலே கீதாபாஷ்ய ஸூக்தியை அஸ்வரஸமென்று சொல்லியிருப்பதைவிட இது பெரிய விஷயமன்றே. "நம்ம தேசிகன் உடையவரை அஸ்வரஸவைவசுரென்றார்; பெரியவரை ஆபாதாஸ்திகரென்றார்" என்று இவர்கள் பறை சாற்றித் தெருவேறத் திரியலாமே. தேசிகனுக்கு இவர்கள் பெறுவிக்கும் பரிசு இதனில் வேறுண்டோ?

— ஆழ்வாரை ஸம்ஸாரியென்றது —

34. "தென்னாசாரியர்கள் ஆழ்வாரை ஸம்ஸாரியென்று சொல்லிப் பழித்துவிட்டார்கள்; தேசிகன் அபிநவதஶாவதாரமாகக் கூறிப் புகழ்ந்திருக்கிறார்" என்கிற இவ்வார்த்தையை இன்று நேற்றன்று, இவர்கள் புதுவைஷ்ணவம் கொண்டாடத் தொடங்கிய நாளே பிடித்துச் சொல்லிவருகிறார்கள். இதில் கலங்கியிருப்பவர்கள் பலருண்டு. யாவரையும் நன்கு தெளிவிக்கிறோம். ஆசார்ய ஹ்ருதயத்தில் "அத்ரி ஜமதக்நி பங்க்திரதவஸுநந்த ஸூநுவானவனுடைய யுகவர்ண க்ரமாவதாரமோ?" என்று தொடங்கி நாலைந்து சூர்ணைகளினால் அருளிச் செய்திருக்குமவற்றை ஸ்ரீஹிக்க இவர்கள் அதிகாரிகளல்லர். இவர்கள் தெரிந்து கொள்ளக்கூடிய வழியிலே தெரிவிக்கிறோம். ஆழ்வார்களின் திருவவதாரத்தைப்

பற்றி ஸ்ரீபாகவதம் பதினொராவது ஸ்கந்தத்தில் தெரிவித்திருப்பதாக ஆசார்ய ஹ்ருதயத்தில் "தமிழ்மாமுனிதிக்கு ஶரண்ய மென்றவர்களாலே க்வசித்க்வசித்தென்று இவராவிர்பாவம் கலியுங் கெடும் போலே ஸூசிதம்" என்கிற சூர்ணையினால் அருளிச் செய்ததை தேசிகன் குருபரம்பரா ஸாரத்தில் பூர்ண ச்லோக பூர்வகமாகக் காட்டியுள்ளார். "இதைக் கணிசித்து * கலௌ கலு பவிஷ்யந்தி......என்று மஹர்ஷியருளிச் செய்தான்" என்றதைக் காண்க. அந்த மஹர்ஷி என்ன அருளிச் செய்தானென்று பார்ப்போம்; (11–5–38.) "க்ருதாதிஷு ப்ரஜா ராஜந் கலாவிச்சந்தி ஸம்பவம்। கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா: ।......தாம்ரபர்ணீ நதீ யத்ர...." இவையே அந்த மஹர்ஷி பணித்தவை. [க்ருதாதிஷு நரா ராஜந் கலௌ இச்சந்தி ஸம்பவம்] என்றதன் பொருளை நாம் விவரிக்க வேணுமோ? க்ருதத்ரேதா த்வாபரயுகங்களில் இங்கிலவுகில் பிறந்திருந்தவர்கள் தாங்கள் கலியுகத்தில் அவதரிக்க வேணுமென்பதற்காகத் திருநாடு செல்லாமல் ஜன்ம பரம்பரைகளிலேயே யிருந்துகொண்டு கலியுகத்தில் தமிழ் நாட்டில் தாம்ரபர்ணீ தீராதிகளில் திருவவதரிக்கப் போகிறார்களென்று சொல்லிற்று. ஸ்ரீ வீரராகவீய வியாக்கியானத்திலும் இங்ஙனே தான் பொருளுரைக்கப்பட்டுள்ளது. * ஸ உ ஶ்ரேயான் பவதி ஜாயமாந: * பல பிறப்பாயொளிவரு முழுநலம் * என்று உபய வேதங்களும் தெரிவித்தபடி எம்பெருமான் பிறக்கப் பிறக்க ஒளி மல்குகிறாப் போலவே ஆழ்வார்களும் பிறந்து பிறந்து ஒளி மல்கினார்கள். இதில் இவ்வளவு தெரிவிப்பதே ஸாரமானது. திவ்யஸூக்தி ஸாஹஸ்ர்களான விவர்கள் ஆழ்வார்களிடத்தில் வூதிவஞர்கள் போலப் பேசுவது! அதற்கு நாம் விடையிறப்பது ஸாதுதைவதன் ஸாதுவாதஸகளிடத்திலே ஸாதுஹக்தியைச்சொல்லுவதோடொக்குமிது.

— கோயில் திருமலை பெருமாள் கோயில் —

35. கோயில் திருமலை பெருமாள் கோயிலென்று இம்மூன்று திவ்யதேஶங்களை மட்டும் சிறப்பாக வெடுத்து அநுஸந்திப்பதற்குக் காரண விசேஷம் தெரிந்து கொள்ள விரும்புகிறார். இதுகாறும் தெரியவில்லையா! தெரிவிப்போ மிப்போது. ப்ரிவி கௌன்ஸில் வரைக்கும் வியவஹாரம் நடந்து ராமாநுஜபாத்ரம் தொலைந்தொழிந்தது இம்மூன்று திவ்ய தேசங்களிலே யென்று அடிக்கடி ஸ்மரிக்கவும் ஸ்மரிப்பிக்கவுமே யென்பதைத் திடமாகக் கொள்க.

— மூன்று ச்லோகங்களைச் சொல்ல இவர்களுக்கு அதிகாரமில்லைதான் —

36. * ஸர்வதேஶதஶா காலேஷு * என்று தொடங்கி * ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய * என்னுமளவும் வடகலையார்கள் சொல்ல லஜ்ஜிக்கவேணுமென்று ஸ்வாமி தத்வஸாரத்தில் எழுதியுள்ளார். அந்த மஹாவாச்யச்ரேணி இந்த வித்வம்ஸநத்திலும் (பாரா 3-ல்) பூர்த்தியாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. அந்த பரம போக்யமான வாக்யராஶிகளை மீண்டு மொருமுறை ஸேவிப்பது. ஸர்வதேஶதஶாதிகளான அந்த மூன்று ஸ்ரீஸூக்திகளை நவீனர்கள் சொல்ல லஜ்ஜிக்கவேணுமென்று சொன்னதன் காரணத்தை ஸ்வாமியே ஸுஸ்பஷ்டமாக விவரித்திருக்க, கந்தை அதை மறைத்துத் தவறாக எழுதியுள்ளது. இந்த ச்லோகங்கள் தென்கலையார் செய்தவையென்று நம் ஸ்வாமி சொல்லியிருக்கவில்லை. உடையவர் காலந் தொட்டு இவை அநுஸந்திக்கப்பட்டு வருபவை யென்பது ஸர்வ ஸம்ப்ரதிபந்நம். "ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியம்" இத்யாதியை உடையவர் அருளிச் செய்யும்போதே இருமுறை யருளிச் செய்ததாகையாலே அதை இருமுறை ஸேவிக்கவேணுமென்று பிறர் யாரும் நியமிக்க வூஸக்தியில்லை. காரகம் முதல் வூச்நத்தில் * வருயிவீம

தேயத்ஸ். ஷூமிஷிம் தேயத்ஸ * என்று ஸ்வயமாகவே இருமுறை ஓதப்பட்டது போலவே இதுவும். *ஸ்ரீமல் லக்ஷ்மணயோகீந்த்ர * என்றபடி உடையவர் மஹா யோகியாதலால் விளைவதறிந்தே இருமுறை யருளிச்செய்தார். சூத்திகாவேத, தசமீவேதாதி வேத விசாரத்தில் ஸஜாதீய வேதம் விஜாதீய வேதம் என்னுமாபோலே விஜாதீயர்களால் உபத்ரவம் நேராமைக்காக ஒரு முறையும், ஸஜாதீயர்களாலும் உபத்ரவம் நேராமைக்காக மற்றொரு முறையுமாக அருளிச் செய்துவைத்தாரென்பது பிஷ்ட பேஷணம். அனந்தாழ்வானுடைய வேங்கடாசலேதிஹாஸமாலையை இங்கெடுத்துக் காட்டினது ஸர்வாத்மநா வ்ருதாச்ரமம். "அதிக ப்ரஸங்கித்தனம்" என்பதை இவர் நூறு தடவை யெழுதினாலும் ஆதீகாரமே யில்லாத இவரது திருவயிற்றெரிச்சலொன்றுதான் விளங்கி நிற்கும்.

— ஸ்ரீரங்கச் செய்தியாராய்ச்சியை நினைப்பூட்டுதல் —

37. மூன்றுவது ஸ்ரீமன் விஷயமென்று தலையங்கமிட்டு எழுதியுள்ள அஸம்பத்த ப்ரலாபங்களுக்கு ஸ்ரீரங்கத்தில் வெளிவந்த ஸ்ரீரங்கச் செய்தியாராய்ச்சியைப் பார்த்துத் தெளிவதென்று சொல்லுவதற்கு மேற்பட வக்தவ்யமொன்றுமில்லை. ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதியில் உடையவர் உயர்ந்த மரியாதைகளை யெல்லாம் தங்களுக்கே கொடுத்தருளியதாக எழுதுகிறார். அவற்றில் போட்டியிட யாரும் வரவில்லை. அவற்றை இவர்களே தாராளமாக அநுபவிக்கட்டும். புகைவண்டிகளில் பயணம் செய்பவர்களுக்குக் குடிநீர் வழங்க நியமிக்கப்படுபவனும் தன்னை ஒரு உத்யோகஸ்தனாகவே நினைத்திருக்கவில்லையா? இவர்களின் மகிழ்ச்சியை யாரேனும் தடுப்பாருண்டோ? அந்த காரியம் எங்களுக்கும் வேணுமென்று சண்டையிட வருகிறோமோ?

— தேசிகஸம்பந்தமுடையவர்களே உண்மையான ஸ்ரீவைஷ்ணவர்கள் —

38. "ஸ்ரீவைஷ்ணவன்யார்?" என்று மகுடமிட்டு ஸ்ரீதேசிகன் திருவடி ஸம்பந்தமில்லாதவர்களுக்கு ஸ்ரீவைஷ்ணவத்வமில்லையென்று வெகுஸம்ப்ரமங்கொண்டு எழுதுகிறது. இதை யாரும் மறுக்கமுன்வரவில்லை. மறுக்கவும் முடியாது. ஒருவன் நல்லபாம்பு கடித்து வருந்திக்கொண்டிருக்க "இதெல்லாம் நம்மடவன் பண்ணின வேலை" என்றதாம் நாக்குப்பூச்சி. தேசிகனோடு இவர்களுக்கு என்னவுறவு? என்றைக்கு உறவு? என்கிற கேள்விகளுக்கு விடை கூற இவர்கள் முன்வரமாட்டாமற் போனாலும் இத்துடன் அநுபந்தமாகச் சேர்த்திருக்கிற விளக்கொளி ஸந்நிதி தர்மகர்த்ருவ்யவஹார ஜட்ஜ்மெண்டு முன்வந்து முடித்திடும். அதைக் கண்டும் தெளியாதவர் ஒருநாளும் தெளியகில்லார். இந்த ஸந்தர்ப்பத்திலே * எழாட்காலம் * என்கிற அபத்தத்தை அஸத்ருத் எழுதுகிற இந்த ஸாஹஸத்தோடு வாசிம் போதும்.

— இடையில் நானூறு வருஷ விஷயம் —

39. தேசிகன் பரமபதித்தபிறகு இடையில் 400 வருஷகாலம் இவர்களிருந்தவிடமே தெரியவில்லையே யென்றதற்கு கந்தை யெழுதும் பதில் என்னவென்றால், அக்காலத்திலிருந்த வடகலையார்கள் ஆளவந்தார்போல் வியாக்கியான நிரபேக்ஷர்களாயிருந்தார்கள் என்று எழுதிவிட்டு, அப்பயதீக்ஷிதர் யாதவாப்யுதயத்திற்கு வியாக்கியானமெழுதி விட்டதனாலேயே அவர் தேசிகபக்தராய் விடமாட்டாரென்றும் எழுதி வைத்தது. இது வாஸ்தவம். தேசிகனுக்கு இல்லாத திருமணைப்போட்டும் நூதன பாத்ரத்தைச் சொல்லியும் திவ்யதேசந்தோறும் ஸங்கமடைபவர்களே தேசிகபக்தர்களாயிருக்கத்தக்கவர்கள். இதை யாரே மறுப்பார்?

— தோட்டயாசாரியர் விஷயம் —

40. சோளங்கிபுரம் தொட்டயாசார்ய ஸ்வாமி பரம்பரயா தென்கலையான படியாலே தேசிகனுக்காக அவர் தென்கலைத் திருமணைத் தவிர்த்து வடகலைத் திருமண் இட்டுக்கொள்ள வேண்டிய அவசியமில்லை யென்றும், ஆசார்யர் பூர்வசிகியாயும் சிஷ்யர் பச்சாச்சிகியாயு மிருந்து வருவதில் எப்படி மாறுபாடு நேருவதில்லையோ அப்படியே ஆசார்ய சிஷ்யர்களுக்குப் புண்ட்ராகாரத்தில் பேதமிருந்தாலும் அது மாறவேண்டிய அவச்யமில்லை யென்றும் எழுதப் படுகிறது. இதற்குச் சொல்லுகிறோம். பூர்வாசாரியர்களின் காலத்தில் புண்ட்ராகாரே ஹேதமிருந்ததாக ஒரு ப்ரமாணங்கொண்டும் நிரூபிக்க முடியாது. திவ்யதேசங்களில் வேறுவித மான புண்ட்ராகாரமும் திவ்ய தேசபரிபாலகர்களான ஆசாரியர்களுக்கு அதனில் வேறு பட்ட புண்ட்ராகாரமும் இருந்து வந்ததாக ப்ராமாணிகர்கள் நினையார்கள். மற்ற ஆசாரியர் களின் புண்ட்ரம் எப்படியிருந்தாலும் தேசிகனுடைய புண்ட்ரம் ஸ்வதஸ்ஸித்தமாகத் தென்கலை தானென்பது பிரசுரம்செய்யப்பட்டுள்ள கச்சிவிளக்கொளி ஸன்னிதி வியவஹாரத்தீர்ப்பு களாலும் ஸ்ரீரங்க தேவஸ்தான வ்யவஹாரத் தீர்ப்புகளாலும் நிஸ்ஸந்தேஹமாகத் தேறின விஷயமாதலால் இதில் நாம் மீண்டு மீண்டும் மறுப்பெழுதுவது வ்யர்த்தப்ரஸங்க வ்யவஹாரணமே யாகும். எல்லாவற்றையும் விட இவர்களுக்கு அஸாதாரணமான ஸேவா என்னும் பத்ரிகை யில் தென்கலைத் திருமண் காப்புடனே ஜ்வலிக்கிற பழைய தேசிகன் படம் வெளியிடப்பட்டு விட்டதே; இதைப்பற்றி வாய்திறக்கமாட்டாத கூகை அந்தோ! எதுக்கு வீணாக வந்து மாட்டிக்கொள்ளுகிறது? அந்த ஸேவாபத்ரிகையை நீங்கள் உஹித்தாலும் பயனில்லையே.

— ஈகைக் கந்தையின் ஈனபாஷணங்களுக்கு முடிவானபதில் —

41. கல்வி பயின்றவர்களோ சாஸ்த்ரம் படித்தவர்களோ உத்ஸாஹத்துடன் உகந்து வாசிக்கக்கூடிய பங்க்தி ஒன்றுகூட கந்தையில் கிடையாது. பிரபந்தசாரதத்வஸாரத்திலுள்ள ஸப்த ஸஹோதரதத்வ நிருபணம் என்கிற பரிச்சேதத்தைப் பார்க்கும்போதே இதுகளுக்கு அடி வயிறு பற்றி யெரிகிறது. என்னபண்ணும் பாவம்! வாயைக் கையைத் திறக்கமுடியாமை யினாலே அந்த ஸப்தஸஹோதரங்கள் ஸப்தரிஷிகளைப்போலே விளங்குவதாக ஒரே வார்த்தை யெழுதி முடித்துவிட்டது. இதற்கும் கம்பருடைய பாட்டு ஒன்று காட்டுவோம். ஸுக்ரீவ மஹாராஜருடைய அதிசங்கையைப் போக்குவதற்காக இராமபிரான் ஏழு மராமரங்களின் மீது அம்பு எய்ததைச் சொல்லுகிற கம்பர் "ஏழு மாமர முருவி" என்கிற பாட்டில் ஸ்ரீராம பாணம் காரியத்தை முடித்துக்கொண்டு மீண்டுவிட்டதென்று சொல்லி

"ஏழு வேலையு முலகும் மேலுயர்ந்தனவேழும்
ஏழு குன்றமும் இருடிகளெழுவரும் புரவி
ஏழு மங்கைய ரெழுவரும் நடுங்கின, என்னை?
ஏழு பெற்றதோ இக்கணைக்கிலக்கமென் றெண்ணி."

என்கிற அடுத்த செய்யுளில் மஞ்சாடுவரை யேழும் கடல்களேழும் ஸப்தலோகங்களும் ஸப்தரிஷிகளும் இரவியின் குதிரைகளேழும் அப்ஸரஸ்ஸுக்களெழுவரும்.......ஆக இப்படி ஏழேழாக இருப்பவையெல்லாம் நடுங்கிப் போயினவென்றால் ஈகை சொல்லுகிற ஸப்தரிஷி களின் நடுக்கம் இன்னும் தீர்ந்தபாடில்லையே. ராமபாணம் ஜீவமானாலும் ஸ்வாமிபாணம் ஜீவமாகாதாகையால் அந்த நடுக்கம் இப்போது அளவு கடந்தேயிருக்கும்.

— ஸஹஸ்ரதூஷணிக்கு ஷாமதம் கூறுதல் —

42. "ஸ்வாமியின் ப்ரஸங்கங்கள் இன்னும் எத்தனை நாளைக்கு ஓடும்?" என்று கேட்கிறது. * காருள்ளளவும் கடல் நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேதகீதனுள்ளளவும் ஓடும். ஸஹஸ்ர தூஷணியென்று ஒன்றிருப்பதாக ரப்பர் பாம்பு காட்டுகிறது. அதுவும் வெளிவரட்டும். ஜகன்னாதக் குயவன் கதை கீழே (பாரா 15-ல்) எடுத்துரைக்கப்பட்டுள்ளதே. அக்கதையை ஒரு போதும் மறக்கவேண்டா. அயுத நியுத ப்ரயுத தூஷணிகள் வந்தாலும் ஒரே காளில் பொடிபொடியாய்ப் போய்விடுமென்பதற்கு இந்த வித்வம்ஸநூலே நிதர்சனம். "அந்த ஸஹஸ்ர தூஷணி சீக்கிரம் முத்ராணம் செய்து வெளிவரும்" என்கிறது கந்தை. அது அச்சாகி இத்திசை நோக்காது ஏகாந்தமாக உலாவிக் கொண்டிருந்தால் ஒன்றிரண்டு நாள் உயிரோடிருக்கும்; ஆனாலும் விதிமாண்டு வெளிப்பட்டே நீருமாதலால் ஒரே க்ஷணத்தில் ஒரே தடியடியில் ஒழிந்து போமென்பது D. R. ஸ்ரீஸூக்தி ஸித்தம். "அருணோதயத்திலே தாலிகட்டி ஸூர்யோதயத்திலே ஏதோ ஆனதாகப் பழமொழியுண்டே; அதைத்தான் இந்த வம்பர்கள் நினைப்பூட்டுகிறார்கள்" என்று தகலசிகளில் தலைவரான ஸ்ரீமத் இளங்காடு ஸ்வாமி ஸாதிக்கும்படி. ஒருவரென்ன? உலகமெல்லா முரைக்கின்றது.

— எம்பார் முதலானோருடைய தூஷணைகள் —

43. * ராமாநுஜ பதச்சாயா * என்று விருது பெற்ற எம்பாரையும் நம்பிள்ளையையும் மற்றும் சில ஆசார்யர்களையும் எல்லை கடந்து நிந்திக்கிறீர்கள். இவ்வாசிரியர்கள் தென்கலை வகுப்புக்குமட்டுமன்றிக்கே வடகலை வகுப்பில் பெருந்திரளான மடத்தாருக்கும் ஆசார்யர்களாக விளங்குமவர்கள். இப்பரமாசார்யர்களை நிந்திக்க அந்த மடத்தாரும் உங்களுக்குத் துணைவராய் நிற்பது காலமஹிக்கு மிகவும் ஏற்றதே. * நம: ஸ்ரீசைலநாதாய * ஸ்ரீசைலேச தயாபாத்ரம் * இத்யாதி ஸ்ரீ ஸூக்திகளில் கூசாதூஷணங்கள் செய்கிறீர்கள். எதற்கும் நாம் விடையிறுக்கப் பின் வாங்குவோமல்லோம். ஸ்ரீஸ்வாமி வெளியிட்டிருக்கிற ஆக்ஷேபங்களுக்கு முன்னமே நீங்கள் இவ்வாக்ஷேபங்களைக் கிளப்பியிருந்தால் நாங்கள் விடையிறுப்பது விதியாகும். எங்கள் ஆக்ஷேபத்தை லவலேசமும் பரிஹரியாமல், காலில் என்றால் தலையில் என்கிறாப்போலே விண்வம்பாக எழுதுமவற்றை நாங்கள் பொருள் படுத்த அவசியமேயில்லை. சததூஷணியில் 64 ஆம் வாதத்தில் [illegible] என்று தொடங்கி "[illegible]" என்றெழுதிவைத்தார் தேசிகன். இதற்கு அவர்கள் பதில் எழுதியிருக்கிறார்கள்—* [illegible] * என்று. தேசிகன் கேட்ட கேள்வியாவது—கழுதையும் சுமக்கமாட்டாத கந்தைகளைச் சுமக்கிறவனுக்கு சிகையினாலும் யஜ்ஞோபவீதத்தினாலும் என்ன பளுவோ? என்று. இதற்கு அவர்களின் விடை—பின்னாலே பெரிய சிகாபந்தத்தைச் சுமக்கிறவனுக்கு முன்புறத்திலும் மற்ற விடங்களிலுமுள்ள ரோமங்களினால் என்ன பளுவு வந்திட்டதோ? அவற்றைமட்டும் அடிக்கடி சிரைத்துக் கொட்டுகிறாயே! என்பதாம். தேசிகனுடைய கேள்வி மதாந்தரஸ்தஸந்யாஸிகளை மட்டும் நோக்கியது. எதிரிகளுடைய கேள்வி நம்மதத்திலுள்ள ப்ரஹ்மசாரி க்ருஹஸ்த ஸந்யாஸிகளெல்லாரையும் நோக்கியது. இவற்றுக்கெல்லாம் பதில் சொல்லிவிட்டு நம்மிடம்வாருங்கள்.

* ஸம்பிஷாம தெ நஉக்தி மென்றதன் பொருள். *

44. * ஸம்பிஷாம தெ நஉக்திம்பியெ * என்ற ச்ருதிவாக்யத்தின் பொருளை நம்பிள்ளை ஸவிஸ்தரமாக அருளிச் செய்திருப்பதை ஸ்வாமி யெடுத்துக் காட்டி மாம்பலம் மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமிகளை ஆனந்தக் கடலில் ஆழ்த்தியபோது அஸஹிஷ்ணுக்களாய் துர்வாதங்களைச் செய்து தீவ்ரஸங்க்ஷோபமடைந்தநீங்கள் இப்போது 'நம்பிள்ளை காட்டின அந்த அர்த்தம்அவருடையதன்று; பட்ட பாஸ்கர பாஷ்யத்திலுள்ளது' என்கிறீர்கள். இதனால் இவ்விசாரத்தில் D. T. T. போல்வார் பலர் நெடு நாள் போராடி முடிவாக அடைந்த ஸம்ப்ரதாயம் யுக்தமானதே யென்று உங்களாலேயே முடிவு செய்யப்பட்டதாயிற்று.

45. தேசிகாவதார வருஷ விஷயம். தேசிகன் அவதரித்த வருஷம் விபவவா? சுக்லவா? என்று இன்னும் நிர்ணயிக்கப் படாமலிருக்க, ராமாநுஜாபாத்ரத்துக்கு வருஷம் தேதி லக்னம் ஹோரை எல்லாம் அச்சிட்டிருப்பவர்களின் சூதைப் பல புத்தகங்களில் காட்டியாயிற்று. ஸ்ரீகாதி அனந்தாசாரியர் ஸ்வாமி விபவவென்று என்று நிர்ணயித்திருக்கிறாரென்கிறீரிப்போதிவர். ஆனை தலையின் மீது ஓலைச் சுவடிகளை வைத்து வீதி வலம்வர, அதற்கு மதம் பிடித்து, இப்போதநுவதிக்கவும் நடுக்கும்படியான க்ஷோபங்கள் நடந்தது விபவ வருஷத்தில் தான். அதைப்பற்றியே காதி ஸ்வாமி யெழுதியிருப்பது. இங்கு அதுவன்று விசாரம்.

46. மணவாளமாமுனிகளின் திருவவதாரஸ்தல விசாரம்—மாமுனிகள் எந்த க்ராமத்தில் அவதரித்தா ரென்றும் குறையொன்றுமில்லை. பெரும்பூதூர், மணக்கால், நடாதூர், சோழபுரம்....என்றிப்படிப்பட்ட ஊர்கள் திவ்ய தேசங்களல்ல; ப்ரஸித்தவைபவ சாலிகளான ஆசாரியர்களின் அவதாரத்தாலே இவற்றுக்கு ஏற்றம். * தீர்த்தீகுர்வந்தி தீர்த்தாநி * என்று மஹர்ஷிகளும் "தீர்த்தகராமின் திரிந்து" என்று பூதத்தாழ்வாரும் பணித்த கணக்கிலே ஆழ்வாராசாரியர்களின் அவதாரங்களினாலன்றோ அவ்வவ்விடங்களுக்கு ஏற்றம்.

47. தாதாசாரிகள் வடுரிப்படி யென்று போட்டுக்கொள்ளுகிறார்கள். அவ்வூர் எங்குள்ளது தெரியுமோ? திருக்கண்ணபுரத்தில் ஜனித்த வொருவர் அதன் பக்கத்திலிருக்கும் உபய வேதாந்தபுரத்திற்கு ஸ்வீகாரம் போனார். அதன் பக்கத்திலிருக்கும் கோழிசுட்டான்குளம் என்கிற ஊரிலே க்ருஷிபண்ணி வந்தார். இவர் ஒரு வியவஹாரத்தில் ஸாக்ஷியாகப்போன போது உம்முடையவூர் எது? என்று அதிகாரி கேட்க, திருக்கண்ணபுரத்தையும் விட்டு உபய வேதாந்தபுரத்தையும் விட்டு 'என்னூர் கோழி சுட்டான்குளம்' என்றாராம். அதுபோல தேசிகனவதரித்த தலத்தை இவர்கள் பெருமாள்கோயில் என்னுமலும் திருத்தண்கா என்னுமலும் தும்பைவனம் என்கிறார்கள். இதனில் மிக்கோரயர்வுண்டே. தேவப் பெருமாளுக்கு நடைபெறும் திருக்கல்யாண மஹோத்ஸவங்களில் நம் ஸ்வாமி பெருமாளுக்கு ஓதியிடும் போது பரமப்ரீமாக "பெருமாள்கோயில் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமி ஸமர்ப்பணை" என்று அலைபாருங்கடல் போல் முழங்கி ஓதியிடுகிறார். அப்படி பெருமாள் கோயில் வேதாந்த தேசிகன் என்றோ தென்னத்தியூர் வேதாந்த தேசிகனென்றோ திருத்தண்கா வேதாந்த தேசிகனென்றோ வாய்நிறைய விலக்ஷணமாகச் சொல்லி மகிழ பாக்யமற்றவிவர்கள் தும்பைவனத்தின் கொச்சைச் சொல்லான தூப்புலையிட்டு விசேஷித்துப் பரிஹாஸாஸ்பதர்களாய் நிற்கிறவிதற்கு இனி எற்றைக்கு மேழேழ்பிறவிக்கும் பரிஹாரமில்லையே.

— இவர்க்கும் இவரைச் சேர்ந்தவர்களுக்கும் முக்கியமான வார்த்தைகள் —

48. வாயெடுக்கும்போதெல்லாம் நம்ம தேசிகன் என்கிறீர்கள். உண்மையில் வேதாந்தவாசிரியர் ஸ்வஸூகாரங்களினும் மிகமிக உயர்ந்த பதவியில் வீற்றிருப்பவர். அவர் ஸதாசார்யர்களின் திருவடி நிழலிலே வாழ்ந்து விமலமநஸ்கராவதற்காகவே ஸ்ரீரங்கம் சென்று சேர்ந்தார். புறப்பட்ட லக்னத்தின் பொல்லாங்கினால் அப்போது ஸ்ரீரங்கத்தின் பரிஸ்திதி ஶோசநீயமாயிருந்தது. அதனால் மிக வருந்தி ஸத்யமங்கலம் போய்ச்சேர்ந்து "பரஸ்பரஹிதைஷிணாம் பரிஸரேஷு மாம் வர்த்தய" என்று ஸதா சொல்லிச் சொல்லி நாளடைவில் இஷ்டஸித்தி பெற்று அந்த ஸதாசார்யர்களின் திருவடிகளின் கீழ் வாழ்ச்சிபெற்று உய்ந்து அதைப் பரமானந்தத்துடன் எடுபடுத்தியும் வைத்தருளினர். அவர் பால் உங்களுக்குப் பரம பக்தி விளைந்திருக்கின்றதென்பதை அபலாபம் செய்கின்றிலோம். ஆனால் உங்களுடைய அபிமாநம் அவர் பால் வளர வளர அது அவர்க்கு ஏவ்வளவு ஹாநிகரமாகி வருகிறதென்பதைப் பல விடங்களில் பார்த்து வருகிறீர்கள். திருவரங்கம் பெரிய கோயிலில் விசேஷித்துப் பார்த்து வருகிறீர்கள். முக்திஸாதனங்களில் தேசிக பக்தி மிகச் சிறந்த ஸாதனமென்பதை மூர்க்கனும் மறுக்ககில்லான். * அநந்யாக்ருத அக்ருதம் ஹவதி யென்பது உங்களுக்குத் தெரியாததன்று. வழி தவறிச் செய்யும் தேசிக பக்தியினால் இது வரையிலடையாத ச்ரேயஸ்ஸை இனியா அடையப் போகிறீர்கள். வீணான வம்பு வழிகளை அறவே விட்டிட்டு அவருகந்தருளின நன்னெறியையே நன்கு நச்சித் தழைநல்லவின்பம் தலைப்பெய்து எங்குந்தழைக்க நிற்பீர்களாக.

49. உங்களுடைய வகுப்பில் தத்வதர்ஶிகளான மஹான்கள் இல்லாமற்போகவில்லை. அன்னவர்கள் பல பலருளர். இப்போது நாம் ப்ரபந்த ஸாராஸ்வாதிநீப்ரஹரணத்திலும் இந்த விப்ரலம்பவித்வம்ஸநத்திலும் எழுதியுள்ளவற்றில் ப்ராமாணிகர்கள் மறுக்கக் கூடிய அம்ஶம் அணுவளவேனுமுண்டோ வென்பதை அவர்களிடமணுகி நீங்களறியவேண்டும். ஊர் பேரில்லாமலும் பொய்ப் பெயரையிட்டும் நீங்கள் பிரசுரம் செய்யுமவற்றால் பயனொன்றும் பெறலாகாதென்பதைக் காலம் பல சென்றும் காண்பதாணை.

50. தற்காலம் நிகழும் விசாரங்களில் தூப்புல் என்னும் சொல்லைப்பற்றின விசாரம் மிக முக்கியமானது. அப்பய தீக்ஷிதரால் விளக்கொளி ஸந்நிதி பரிஸரத்தில் தூம்பைவனம் என்கிற அக்ரஹாரம் ஏற்படுவதற்கு முன்பு தூப்புல் என்னும் சொல் உதிப்பதற்கு நியாயமேயில்லை. "தூம்பைவனமென்பதன் திரிபான சொல்லே தூப்புல்" என்றதில் இதுவரை யாரும் ஆக்ஷேபம் சொல்ல முன்வரவில்லை. சொல்லவும் முடியாது. தூம்பைவனம் வேறு, தூப்புல் வேறு என்பதை நிரூபிக்க வேணுமானால் நம்முடைய கலவிவாதங்களில் ஸம்பந்தப்படாத பொதுவான நூல்களின் ஆதாரம் காட்டப்படவேண்டும். தூப்புலென்கிற வியவஹாரம் 600 வருஷங்களுக்கு முன்பும் இருந்திருக்குமானால் அது எத்தனையோ புத்தகங்களில் ஏறியிருக்க வேண்டுமே. தேசிகனுடைய தமிழ் நூல்களில் (அதாவது, நிர்விவாதமான நூல்களில்) ஒன்றில் கூட தூப்புல் ப்ரயோகம் இல்லையே. விமர்ஶம் என்று வந்தால் அதில் கோபதாபங்களை வஹித்து துர்பாஷையான பதில்களைச் சொல்லுவது ப்ராமாணிகக்ருத்யமாகாது. இதற்கு பதிலாக "மணவாளமாமுனி சிக்கில் கடாரத்தில் பிறந்தார்" என்றெழுதி விடுவதனால் என்னாகும். ப்ராமாணிகமான நூல்களினால் அப்படி தேறுகிற தென்றால் தேறட்டுமே. அதில் யாரும் மறுப்புரைக்க முன்வரவில்லையே. மதுரையில் பிறந்த கண்ணபிரானைத் திருவாய்ப்

பாடியில் பிறந்தவனாகவே கூறுகின்றார்கள். "அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப் பிறவிபெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்" என்றே நிச்சயமநுஸந்திக்கிறோம். வேதாந்ததேசிகன் அவதரித்தவிடம் இழிவானது என்று யாரேனும் ஆக்ஷேபித்தால் அப்போது 'மாமுனிகள் அவதரித்தவிடம் அதனிலும் இழிவானது' என்று பிரதி சொன்னாலும் சொல்லலாம். தேசிகனவதரித்தவிடம் இழிவானதென்கிற ஆஸ்தாவலேஶமும் கிடையாது. அவர் அவதரித்த விடத்தைத் தூப்புலென்கிற சொல்லால் வழங்குவது நவீனம் என்று மூதலிக்கப்பட்டால் இங்கு மாமுனிகளின் தூஷணைக்கு என்ன ப்ரஸக்தி? 'இராமனிருக்குமிடம் அயோத்யை' என்னுமாபோலே ஆசாரியர்கள் அவதரித்தவிடம் திருநாட்டினும் சீரியதன்றோ. பிள்ளை லோகாசாரியர் * சீரொன்று தூப்புல் ஸாதித்தாரென்பதும், தேசிகன் லோகாசார்ய ஶதகம் ஸாதித்தாரென்பதும் ஈட்டிப்போட்டிப் பேச்சுக்களுக்குப் பயன்படுமேயல்லது தத்வநிர்ணயத்திற்குச் சிறிதமுதவாது.

51. நிகழும் விசாரங்களில் தேசிகனுக்குப் பழிப்பாக ஓர் எழுத்தும் எழுதப்படவில்லை. கீர்த்தி மூர்த்திகளாய் விளங்கும் ஆசாரியர்களை யார் பழித்தாலும் ஸரி அவர்கள் "ஸர்வஸஹஸ்ய நோத்க்ஷிப்தைஸ்ஸ கலு நிஜமாத்ரேஷு பஹுளம் மலத்பிர் ஜம்பாலைர் மமந்தலமாலிம்பதி ஜட:" என்கிற யதிராஜ ஸப்ததி ஸூக்திக்கே இலக்காவரென்பதில் ஐயமில்லை. தூப்புல் விசாரத்தினால் தேசிகனுக்கு அவத்யலேஶமும் தட்டாது. அவரைப் புதிதாக அபிமானித்திருக்குமவர்களுடைய செய்திகளை நிரூபிப்பதனால் இவர்களுக்கு இதில் கோபதாபமுண்டாவது ஸஹஜமே. ஆனாலும் அதையடக்கி உண்மை விமர்சத்தில் மட்டும் கண்செலுத்த வேண்டியது முக்கியம். அதற்குத்தான் வழியில்லை.

52. "கீழ்க்காலத்தில் P.B.A. ஸ்வாமியே தூப்புலை ஒப்புக்கொண்டிருக்கிறார், பிரபந்த ஸாரத்தை யொப்புக்கொண்டிருக்கிறார்" என்று இதையே நீங்கள் திருப்பித் திருப்பி யெழுதுவதனால் ஒருபயனும் தேறாது. அப்பயதீக்ஷிதர் "ஶ்ரீகூஷணாய ஹ்ருதயாநுஸாரிணீ ஸஅத்தே நயமேவஶாஸிகா" என்று சொல்லி உடையவருடைய திருவுள்ளத்தையநுஸரித்து நயமயூக மாலிகையென்று ஒரு பெரிய நூல் எழுதியுள்ளார். அதை நம்மவர்களே அச்சிட்டிருக்கிறார்கள். இதனால் உடையவருடைய திருவுள்ளத்தை தீக்ஷிதர் ஏற்றுக்கொண்டு விட்டார் என்று தேறிவிடாது. நீங்கள் சொல்லி வருகிற ரீதியான தேசிகசரித்திரங்களை நம் ஸ்வாமி பலகால் எழுதியிருக்கிறார். அதிலுள்ள பல விஷயங்களை அஸம்பாவிதமென்றும் அப்ராமாணிகமென்றும் மறுப்பெழுதியுமிருக்கிறார். தூப்புற்பிள்ளையென்று இற்றைக்கும் நாளைக்கு மெழுதிவருகிறார். இவற்றை யெடுத்துக் காட்டுவதனால் என்னாகும்! விவேகிகள் உகக்கும்படியான வழியில் ஆராய்ச்சியைச் செலுத்துவதே நலம். .... .... ... *

பொலிக! பொலிக!! பொலிக!!!

விப்ரலம்பவித்வம்ஸநம்
முற்றிற்று.